# முன்னுரை

குழந்தையின் செய்கைகளைக் கவனித்துக்கொண்டிருப்பதே ஒரு தனி இன்பம். அதன் அசைவு, அதன் பார்வை, அதன் விளையாட்டு, அதன் சிரிப்பு, அதன் மழலை—எல்லாம் ஒரே இன்பம.

குழந்தை உள்ளம் மலருவதை ஆராய்வது மற்றுமோர் தனி இன்பம். உடலிலும் உள்ளத்திலும் குழந்தை ஆச்சரியமான வகையில் வளர்கிறது அதைப்பற்றிய ஆராய்ச்சிகளுக்கு முடிவே இல்லை புதிய புதிய உண்மைகள் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. பல பழைய எண்ணங்கள் தவறானவை என்றும் தெரிகின்றன.

மனத்தத்துவம் ஒரு தனிப்பட்ட சாஸ்திரமாகச் சமீப காலத்தில்தான் பிரிந்து வளர்ந்து வருகிறது. அதன் பயனாகப் பல புதிய உண்மைகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. ஆனால், மனத்தத்துவப் புலவர்களுக்குள்ளே அடிப்படையான எண்ணங்களிலேயே வேறுபாடுடையவர்களும் உண்டு. அவர்கள் அனைவரும் தங்கள் தங்கள் கோட்பாடுகளின்படி தாங்கள் கண்டறிந்த விஷயங்களை வெளியிட்டிருக்கிறார்கள். அவற்றை நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

குழந்தையை நல்ல முறையில் வளர்ப்பதற்குத் தாய்க்கு இயல்பாக உண்டாகும் உணர்ச்சியே மிக முக்கியமாயினும், அதை வலிமைப்படுத்தவும், அவசியமானால் மாற்றிக்கொள்ளவும், திருத்திக்கொள்ளவும் குழந்தை உள்ள ஆராய்ச்சியினால் கண்டறிந்த உண்மை

கள் பெரிதும் பயன்படுகின்றன. ஆதலின் பெற்ருேர்கள் அவற்றை அறிந்திருப்பது அவசியமாகிறது.

மனத்தத்துவ சாஸ்திரத்திலே எனக்குத் தனிப் பட்ட விருப்பம் உண்டு. அதிலும் குழந்தை உள்ளத் தைப்பற்றித் தெரிந்துகொள்ள எனக்குப் பேராவல். அதனல் பல சிறப்பட்ட கோட்பாடுகளையுடைய உள்ள ஆராய்ச்சிப் பண்டிதர்கள் எழுதிய நூல்களைப் படிக்க லானேன். குழந்தைகளையும் சிறுவர்களையும் அருகி லிருந்தே கவனிக்கும்படியான வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. படிப்பின் பயனுகவும் சொந்த ஆராய்ச்சி யின் முடிபாகவும் எழுதி வைத்த குறிப்புக்களின் தொகுப்பே இந்த நூலுக்குக் காரணமாயிற்று.

அனைவரும் எளிதில் படித்து உணர்ந்துகொள்ளும் முறையில் குழந்தை உள்ளத்தைப்பற்றி எழுதவேண்டும் என்பது எனது கருத்து. சாஸ்திர ரீதியிலே பாடபுத்தகம் போல எழுதுவதைவிடப் படிப்பதற்குச் சுவைதரும் வகையில் கட்டுரைபோல எழுதவேண்டுமென்று நான் முயன்றிருக்கிறேன். அதில் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறேன் என்பதை வாசகர்களே முடிவுசெய்ய வேண்டும்.

ஐந்து ஆண்டுகள் குழந்தைகளைக் கவனித்து எழுதி வந்த குறிப்புக்களோடு, மேல நாட்டு மனத் தத்துவப் புலவர்கள் கண்டறிந்து வெளியிட்ட உண்மைகளையும் தாராளமாக இந்த நூலில் கையாண்டிருக்கிறேன். அவ் வல்லுநர்களின் ஆராய்ச்சியே இதற்குப் பெரிதும் ஆதாரம் என்பதையும் வெளிப்படையாகச் சொல்லிக் கொள்ளுகிறேன்.

முன்பே குறிப்பிட்டதுபோல் இந்தச் சாஸ்திரம் புதிதாகத் தோன்றியது. ஆதலால் கண்டறிய வேண்டிய

விஷயங்கள் பல உள்ளன. இன்னும் உண்மையென்று இன்று நாம் நம்புவன சில அவ்வாறு இல்லாமல் போதலும் கூடும். இவற்றை நாம் கருத்தில் வைத்துக் கொள்ளவேண்டும்.

முடிவாக ஒரு வார்த்தை: இந்நூலில் தொகுக்கப் பட்டுள்ள விஷயங்கள் தனித்தனிக் கட்டுரைகளாக முதலில் 'ஹிந்துஸ்தா'னில் வெளியாயின. அநுபந்தத்தில் சேர்க்கப்பட்டுள்ள கட்டுரைகளில் இரண்டு 'வசந்த'த்தி லும், ஒன்று 'கலைமக'ளிலும் முன்பே பிரசுரமானவை. இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு நூலாக வெளி யிட அன்புடன் அநுமதி தந்த அம் மூன்று பத்திரிகை களின் ஆசிரியர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பெ. தூரன்.

# பொருளடக்கம்



## அநுபந்தம்

# குழந்தை உள்ளம்

## 1

## தோற்றம்

பூப்போன்ற பொன்னுடல்; உலகப் பொருள்களைக் கண்டறியாத பூப்போன்ற கண்கள்; பூப்போன்ற சிறு மூக்கு; பூப்போன்ற வாய், கைகள், விரல்கள் - பூவுலகத்திற்கு ஒரு புதிய விருந்து.

குழந்தை இப்பொழுதுதான் உலகத்திற்கு வந்திருக்கிறது. தாய்க்கு ஒரே பூரிப்பு. தாய்மை எய்திய பெருமை பிரசவ வேதனையால் வாடிய அவள் முகத்தில் பொலிகின்றது.

கணவன் ஆசையோடு வந்து குழந்தையைப் பார்க்கிறான். இருவரும் சொல்லமுடியாத இன்பத்தில் மூழ்கிக் களிக்கின்றனர்.

இளந் தம்பதிகளின் காதல் கனிந்து அதன் பயனாக விளைந்த இன்பப் பயிர் இக் குழந்தை. இதை எதிர்பார்த்துப் பல திட்டங்கள் போட்டிருக்கிறார்கள்; கனவுகள் கண்டிருக்கிறார்கள். என்ன பெயர் வைப்பது; எப்படி வளர்ப்பது என்றெல்லாம் முன்பே அழித்தழித்துப் பல யோசனைகள் செய்திருக்கிறார்கள். அவற்றையெல்லாம் செய்கையில் காட்டவேண்டிய காலம் வந்துவிட்டது.

குழந்தையிடம் பெற்றோருக்கு மிகுந்த அன்பு ஏற்படுவது இயல்பு. அதை நன்கு வளர்த்து ஓர் உயர்ந்த வாழ்க்கையின் முன்னணியில் இருக்கச் செய்யவேண்டுமென்ற ஆசை துளும்பிக்கொண்டிருப்பதும் இயல்புதான்.

இவ்வளவு ஆவலோடிருக்கும் பெற்றோர்கள் அந்தக் குழந்தையை வளர்க்கும் முறையைச் செவ்வையாக அறிந்திருக்க வேண்டாமா? 'வளர்க்கும் முறைதான் நமக்குப் பரம்பரையாக வந்த பழக்கத்தால் தெரியுமே' என்று சிலர் நினைக்கலாம். 'குழந்தையை வளர்ப்பதில் உதவி செய்யத்தான் வீட்டில் பெரியவர்கள் இருக்கிறார்களே' என்றும் சிலர் நினைக்கலாம். இருந்தாலும் குழந்தையை வளர்க்கும் விதம் பரிபூரணமாக முன்னமேயே தெரிந்துவிட்டதென்று யாரும் முடிவு கட்டிவிடக் கூடாது. குழந்தையை வளர்ப்பது ஒரு தனிக் கலை. அதன் எல்லையைக் காண்பது இயலாத காரியம். குழந்தை ஒவ்வொன்றும் ஒரு தனித்தன்மை வாய்ந்தது. அதை நன்கு அறிந்துகொண்டால்தான் பெற்றோர்கள் தமது கடமையில் சிறந்த வெற்றியடைய முடியும்.

சமீப காலத்திலே மனத்தத்துவப் பண்டிதர்கள் குழந்தை உள்ளத்தைப்பற்றிப் பலவகையான ஆராய்ச்சிகள் செய்து அவற்றின் பயனாக அநேக உண்மைகளைக் கண்டிக்கிறார்கள். குழந்தை மனம் எவ்வாறு வேலை செய்கிறது, அதற்கும் வயதானவர்களின் மனத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகள் என்ன என்று அறியப் பல சோதனைகள் செய்திருக்கிறார்கள். அவற்றைப்பற்றியெல்லாம் பெற்றோர்கள் அறிந்திருக்கவேண்டும்.

சிக்மண்ட் பிராயட் (Sigmund Freud) என்பார் தமது ஆராய்ச்சியிலிருந்து, சாதாரணமாக உள்ளம் என்று நாம் அறிந்திருக்கும் ஒன்றோடு மறைவுள்ளம் (Unconscious Mind) என்றும் ஒன்று இருப்பதாகத் தெரிவித்தார். இன்று அவர் சொன்னதை எல்லா மனத்தத்துவப் பண்டிதர்களும் ஒப்புக்கொள்கிறார்கள். இந்த மறைவுள்ளத்தில் பதியும் உணர்ச்சிகள்தாம் வாழ்க்கையில் ஒருவருடைய போக்கைப் பெரும்பாலும் நிர்ணயிக்கின்றன என்று சொல்கின்றனர். ஆகையால் அதைப் பற்றியும் தெரிந்திருக்கவேண்டும்.

குழந்தையின் உள்ளம் மிக மென்மை வாய்ந்தது. அதில் உணர்ச்சிகளெல்லாம் ஆழ்ந்து பதிகின்றன. அதே போலத்தான் அதன் மறைவுள்ளத்திலும் உணர்ச்சிகள் வேரூன்றுகின்றன. அதில் ஏற்படும் பலவிதக் கோளாறு களால் பிற்கால வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்படுகிறது.

மறைவுள்ளத்தைப்பற்றி விரிவாக ஆராய்ந்த பிராயட், 'நான்கு அல்லது ஐந்தாம் பிராயத்திலே, மனிதனின் பூரண அமைப்பு, பெரும்பான்மையும் முடிந்து விடுகிறது' என்கிறார். ஆட்லர் (Adler), 'குழந்தைப் பருவம் அநேகமாக வாழ்க்கைத்திட்டத்தைத் தீர்மானித்துவிடுகிறது' என்கிறார். கெஸல் (Gesell), 'உடல், உள்ள அமைப்பின் தன்மை குழந்தைப் பருவத்திலேயே நிர்ணயமாகிவிடுகிறது' என்கிறார். 'ஐந்து வயதிற்கு உட்பட்ட காலமே உடல், உள்ள வளர்ச்சிக்குப் பெரிதும் சாதகமானது; ஆதலால் அந்தப் பருவமே மிக முக்கியம்' என்பது ஸர் ஜார்ஜ் நியூமனின் அபிப்பிராயம்.

ஒருவனுடைய வாழ்க்கையின் போக்கிற்கே அடிகோலும் சக்தி வாய்ந்த இந்தக் குழந்தைப் பருவத்தைப் பற்றிப் பெற்றோர்கள் நன்கு அறிந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் தங்கள் ஆசை வெற்றி பெறுவதற்கு ஏதுவான வழியில் குழந்தையை வளர்க்க முடியும்.

'நாங்கள் குழந்தையிடம் அளவில்லாத அன்புடன் இருக்கிறோம்; அதன் நன்மைக்காக அநேக சிரமங்களை விருப்பத்துடன் ஏற்றுக்கொள்கிறோம்' என்று சொல்வதாலமட்டும் நமது கடமை பூர்த்தியாகி விடுவதில்லை. நாம் குழந்தையின் தன்மையைச் சரிவர உணர்ந்து, அதன் வளர்ச்சியில் புத்திசாலித்தனமாக உதவி செய்திருக்கிறோமா என்பதுதான் கேள்வி.

குழந்தையிடம் பெற்றோர் அன்புகாட்டலாம். அதனாலேயே அவர்கள் அதற்கு நன்மை செய்கிறார்கள்

என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. பல சந்தர்ப்பங்களில் அவர்கள் தங்களை அறியாமலே குழந்தைக்குத் தீங்கும் செய்யலாம். அவர்களுடைய அன்பே சில சமயங்களில் கேடு விளைவிப்பதாக இருக்கும். குழந்தையிடம் காட்டும் கோபம் அதற்கு எவ்வளவு கெடுதியை உண்டாக்குமோ அவ்வளவு கெடுதியைச் சில வேளைகளில் அதன்பாலுள்ள கண்மூடித்தனமான அன்பும் உண்டாக்கிவிடும்.

குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பாளிகளாக இருப்பதாலேயே பெற்றோர்கள் தம்மை அறியாது அதன்மேல் ஒருவித ஆதிக்கம் செலுத்த நேரிடுகிறது. குழந்தை ஏதாவதொன்றை ஆவலோடு செய்யப்போகும். அது தவறு என்பதை அறிந்த தாயும் தகப்பனும் குழந்தையின் நன்மையை உத்தேசித்தே அப்படிச் செய்ய வொட்டாமல் அதைத் தடுக்கிறார்கள். அன்பினால் நடந்த காரியந்தான் இது. இருந்தாலும் இங்கே குழந்தைக்கும் பெற்றோருக்கும் இடையே பேதம் ஏற்படுகிறது. பெற்றோர் குழந்தையைத் தடுப்பதில் வெற்றி பெறுகிறார்கள். குழந்தையின் உள்ளத்தில் விரோத உணர்ச்சி உண்டாகி, அது மறைவாக ஆழ்ந்து மனத்தில் பதிகிறது. ஆனால் அதற்காகக் குழந்தையைத் தன் இஷ்டம்போல் முற்றும் விட்டுவிட முடியுமா? குழந்தை, நெருப்பைக் கையில் வாரிக்கொள்ளப்போகிறது. விட்டுவிடலாமா? முடியாதுதான். ஆனால், அக் குழந்தையை விரோத உணர்ச்சி ஏற்படாமலேயே அச் செயலினின்றும் விலக்க அறிந்தால் குழந்தையை வளர்ப்பதில் பெற்றோர்கள் பெரிதும் வெற்றியடைவார்கள்.

சில குழந்தைகள் பெரியவர்களானபோது பயங்கொள்ளிகளாக இருக்கிறார்கள். சிலர் மற்றவர்களுடன் சேர்ந்து பழக விருப்பமில்லாதவர்களாக இருக்கிறார்கள். சிலர் விஷயங்களை அறிந்துகொள்வதில் ஆசை காட்டுவதில்லை. இவற்றிற்கெல்லாம் என்ன காரணம்? இவ்

வாறு ஏற்படுவதற்குப் பெற்றோர்கள் எவ்வகையிலாவது காரணமாக இருந்திருக்கிறார்களா? இந்த விஷயத்தை அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும்.

குழந்தைக்கு எவ்வாறு உணவு கொடுக்கவேண்டும் என்பதையும் அதில் அநுசரிக்கவேண்டிய முறையையும் அறிந்திருக்கவேண்டும். பசி, தாகம், மலஜலங் கழித்தல், உறக்கம், ஓய்வு, ஓடியாடித் திரிதல் ஆகிய இவைகளுக்கும் மன வளர்ச்சிக்கும் குழந்தையின் மூன்றாவது வயது வரையில் மிக நெருங்கிய தொடர்பு இருக்கிறது.

இவற்றைப்பற்றியும் இன்னும் இவைபோன்ற பல விஷயங்களைப்பற்றியும் நல்ல அறிவு நமக்கு அவசியம் வேண்டும். அப்பொழுதுதான் குழந்தைக்காக நாம் செய்யும் தியாகம், படும் கஷ்டம், அதனிடமுள்ள ஆசை, எல்லாம் பயன் பெறும். ஆதலின் குழந்தை உள்ளத்தைப்பற்றித் தெரிந்துகொள்வது அதை நன்கு வளர்ப்பதில் ஆர்வங்கொண்டுள்ள அனைவருக்கும் முதல் கடமையாகிறது.

# 2

# சில உணர்ச்சிகள்

குழந்தை இப்பொழுதுதான் உலகத்துக்கு வந்திருககிறது. வருமபோதே அதற்கு உலகப் பொருள்கள தெரியுமா? கணபாரவை உணடா? காது கேடகுமா? சுவை அறியும் சகதியுணடா? நறுமணததை மோந்து அநுபவிக்குமா?

இந்தக் கேள்விகளுககெல்லாம் யார பதில் சொல்வது? அந்தக் குழந்தை சொல்வதில்லை. சில சமயங்களில் அழுகிறது. அதைத் தவிர அதற்கு வேறு பாஷை தெரியாது. பின் எப்படித தெரிந்துகொள்வது?

நேராக நமக்குப் பச்சைத் தமிழில் குழந்தை பதில் அளிக்காவிடடாலும் இந்தக் கேளவிக்கு விடையை வெவவேறு வழிகளில் அறிந்துகொளளச செயகிறது. பலவகையான சோதனைகளின் மூலம் நாம் விடை தெரிந்துகொள்ளலாம்.

இன்னும் ஒரு முக்கியமான கேள்வி: பிரசவ காலத்தில் தாய்க்குமடடுந்தானா வேதனை? குழந்தை துன்பப்படுகிறதா இல்லையா?

புதிதாக வந்த குழந்தையைப்பற்றி இதுவே முதல் கேள்வியாக அமைகிறது. தாய் பிரசவ வேதனைப் படுவதை நாம் எளிதில் அறிந்துகொள்ளுகிறோம். குழந்தையும் கருப்பை உலகிலிருந்து கடல் சூழ் உலகததிற்கு வரும் வழியில அதிகச் சிரமப்படுகிறதா? உறுப்புகளையெல்லாம் ஒடுக்கி அடக்கி வரும்போது வேதனை இல்லாமலா இருக்கும்? அப்படி வேதனை இருந்தால அதை

அந்தச் சிசு உணருமா? என்பதை நாம் தெரிந்துகொள்ள வேண்டும்.

தாயின் வேதனையைக் காணும்போது, 'ஐயோ பாவம்! அந்தக் குழந்தை என்ன கஷ்டப்படுகிறதோ? என்று சொல்லத் தோன்றுகிறது. ஆனால் நல்ல வேளை! அந்தக் குழந்தைக்கு நாம் நினைக்கிற மாதிரி அப்படி ஒன்றும் வேதனை உணர்ச்சி இருப்பதில்லை.

பிறந்து ஐந்து மணி நேரங்கூட ஆகாத ஒரு குழந்தையை ஷெர்மன் என்னும் மன ஆராய்ச்சிப் பண்டிதர், கன்னத்திலும் தொடையிலும் கெண்டைக்காலிலும் ஓர் ஊசியால் மெதுவாக ஒரு தடவை குத்திப் பார்த்தார். குழந்தை அதை உணர்ந்ததாகவே தெரியவில்லை. இன்னும் ஒரு பத்துத் தடவை அந்தப் பொல்லாத மனிதர் குத்தினார். அப்பொழுதுதான் குழந்தை அதை உணர்ந்தது. இதிலிருந்து, பிறக்கின்ற காலத்தில் குழந்தை வலியை உணருவதில்லை என்பது தெரிகிறது. ஆனால் இந்த வேதனை உணர்ச்சி மற்ற உணர்ச்சிகளைப்போலவே மிக விரைவில் வளர்ந்துவிடுகிறது. பிறந்த இரண்டொரு நாட்களுக்குப் பிறகு மெல்ல ஊசி பட்டாலும் அதனால் ஏற்படும் வலியைக் குழந்தை உணர்ந்துகொள்கிறது.

வேதனையைப் பற்றிய முன் அநுபவம் இல்லாத போது அது அவ்வளவு அதிகமாகத் தெரியவில்லை. வயது வந்தவர்கள் வலியை அதிகமாக உணருவதன் காரணம் பழைய அநுபவமும் அதைப்பற்றி மனத்தில் ஏற்படும் கற்பனையுந்தான்.

பிறந்த மூன்றும் நாள் குழந்தைக்கு நெற்றியிலும் நெஞ்சிலும் ஊசியைக் காய்ச்சிச் சூடுபோடும் வழக்கம் சில இடங்களில் இருக்கிறது. அப்படிச் செய்வதைப் பல தடவை நான் கவனித்திருக்கிறேன். குழந்தை அழத்தான் அழுகிறது. ஆனால் சீக்கிரம் அழுகை நின்றுவிடு

கிறது. சூடு போடுவதைப் பற்றி நினைத்தாலே பெரிய வர்களுக்கு உடம்பில் வலி உண்டாய்விடுகிறது.

சரோஜா நான்கு மாதக் குழந்தை. ஒரு நாள் அவள் படுத்திருந்த தொட்டில் கயிறு அறுந்துவிட்டது. அவள் தலை தடாலென்று பூமியில் மோதிவிட்டது. வீலென்று அலறிவிட்டாள்.

அவளுக்கு எப்படி வலிக்குமோ என்று நாங்கள் அங்கலாய்த்துக்கொண்டிருந்தோம். ஆனால் குழந்தை வலியை அதிகமாக உணர்ந்து அழுததாகத் தெரிய வில்லை. திடீரென்று வேகமாக, ஆதரவும் என்றும் இல்லாத மாதிரி தலைகீழாகப் பூமியை நோக்கிச் சென்ற தால் ஏற்பட்ட உணர்ச்சியே அழுகைக்கு முக்கிய காரணமாகப் பட்டது.

குழந்தைக்கு வலி அதிகமாகத் தெரியாது என்ப தைச் சாதாரணமாக அனைவரும் உணர்ந்திருக்கிறார்கள். சில குழந்தைகளுக்குத் தலையிலும் கால் கைகளிலும் நிறையப் புண் வருகிறது. அதைப் பார்த்தாலே நமக்கு வேதனையாக இருக்கும். 'குழந்தையாக இருப்பதால் பொறுத்துக்கொண்டிருக்கிறது; நம்மால் தாங்கவே முடியாது' என்று வாய்விட்டுச் சொல்லுகிறோம். இது ஒருவகையில் உண்மைதான்.

மூன்று மாதம், நான்கு மாதம், ஆறுமாதம் ஆன குழந்தைகளுக்கே இப்படி வலி உணர்ச்சி சிறிது குறை வாக இருக்கிறதென்றால் பிரசவமாகிற பூங்குழந்தைக்கு இவ்வுணர்ச்சி இருக்காது என்று கொள்வதில் தவறு ஒன்றும் இல்லை.

பார்வை: குழந்தை எதையோ உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதுபோல் படுத்திருக்கிறதே; எதை?

பாட்டி சொல்லுகிறாள்: 'மூன்று மாதம் வரைக்கும் குழந்தைக்கு மனிதர் முகம் தெரியாது; தேவர் முகந் தான் தெரியும்' என்று.

குழந்தை பார்த்துக்கொண்டே படுத்திருக்கிறது; கண் இமைப்பது ஒரு முறையாக இல்லை. ஏதாவது ஒரு வஸ்து கண் அருகே வந்தாலும், கண்ணுக்கு ஆபத்து வந்துவிடுமோ என்ற எண்ணம் தெளிவாக இருப்பதாகத் தெரியவில்லை. வெளிச்சம் அதிகமாகும்போதும் குறைவு படும்போதும் அதற்கு ஏற்றபடி கருமணி சுருங்குவதும் விரிவதும் ஒழுங்காக நடப்பதில்லை இருந்தாலும் குழந்தை பார்த்துக்கொண்டேதான் இருக்கிறது. அது தாயைப் பார்க்கிறது; விளக்கைப் பார்க்கிறது; தூணைப் பார்க்கிறது; எல்லாப் பொருள்களையும் பார்க்கிறது. ஆனால் ஆரம்பத்தில் இவைகளையெல்லாம் தனித்தனியாக வேறுபடுத்தி உணர்ந்துகொள்ள அதற்குத் தெரிவதில்லை. இப்பொழுதுதான் பூமிக்கு வந்திருக்கிறதல்லவா? அதனால் உலகத்துப் பொருள்களை எல்லாம் பார்த்துப் பழக்கமில்லை. கொஞ்சங் கொஞ்சமாக இது இன்னது, இது இன்னது என்று அவற்றை வேறுபடுத்தி உணரும் ஆற்றல் அதற்கு ஏற்படுகிறது.

அதனால் பாட்டி சொல்வதிலும் சிறிது உண்மை இருப்பது தெரிகிறதல்லவா?

செவி உணர்வு: திடீரென்று ஒரு பெரிய சப்தம் உண்டானால் குழந்தை திடுக்கிட்டு எழுகிறது: தூங்கும் குழந்தை விழித்துக்கொள்கிறது. அழுங் குழந்தை இனிய மணியோசை உண்டாகுமிடத்துத் தன் அழுகையை அடக்கிக்கொள்கிறது. இவைகளிலிருந்து குழந்தைக்குக் கேட்கும் சக்தி பிறப்பிலிருந்தே உண்டென்று தெரிகிறது.

ஆனால் பிறக்கின்ற சமயத்தில் காதின் மத்திய பாகத்தில் காற்று இல்லாததால் சப்த அலைகள் உள்ளே இருக்கின்ற கர்ண பேரி (Ear drum) யில சென்று தாக்க முடியாது. குழந்தையின் சுவாசம் சரியாக அமைந்து செவியில் காற்று நிரம்பிய பிறகுதான் சப்தம் கேட்க ஆரம்பிக்கும்.

பிறந்த சில நாட்களுக்குக் குழந்தை சப்தம் வரும் திசையில் தலையைத் திருப்புவதில்லை. இது செவி உணர்வு இல்லாததனால் அல்ல; தலையை வேண்டும்போது வேண்டிய திசையில் திருப்புவதற்கு அந்த திசையை அறியக் கூடிய வல்லமை குறைவாக இருப்பதால்தான்.

ஆனால் குழந்தை நாளாக நாளாகத்தான் ஒலியின் வேறுபாடுகளை நன்கு உணர ஆரம்பிக்கிறது. தாயின் குரல் கொஞ்சங் கொஞ்சமாக வேறு ஒலிகளிலிருந்து வித்தியாசமாக அதற்குத் தெளிவாகப் புலனாகிறது. பார்க்கும் பொருள்களை எவ்வாறு வேறுபடுத்தித் தனித் தனியாக அறிந்துகொள்ளுகிறதோ அதுபோலவே கேட்கும் ஒலியின் தனித்தன்மையும் ஒவ்வொன்றாக அதற்குப் புலனாகிறது.

சப்தத்தைக் குழந்தைகள் அறிந்துகொள்வதைப் பற்றிய ஒரு விநோதமான ஆராய்ச்சியை மார்க்விஸ் என்பவர் நடத்தியிருக்கிறார். பிறந்தது முதல் எட்டுக் குழந்தைகளுக்குக் குறிப்பிட்ட காலங்களிலே புட்டிப்பால் கொடுத்தே வளர்த்தார்கள். பால் கொடுக்கத் தொடங்குவதிலிருந்து முடியும்வரையில் ஒவ்வொரு தடவையும் ஒரு மணி ஒலித்துக்கொண்டிருக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. பிறந்த மூன்று முதல் ஆறு நாட்களுக்குள்ளேயே ஏழு குழந்தைகள் மணி ஒலித்ததும் பால் குடிக்க விரும்புவனபோல வாயைச் சப்பின; கை கால்களையும், உடம்பையும் கண்டபடி அசைப்பதை நிறுத்திவிட்டு, 'பால்புட்டியைக் காணோமே?' என்று கேட்கிறமாதிரி அழவும் ஆரம்பித்தன. முதலில் புட்டி பக்கத்தில் இருந்தால்தான் இவ்விதமான செய்கை காணப்பட்டது. வர வரப் புட்டி இல்லாமலே மணி ஓசையைக் கேட்பதே போதுமானதாயிற்று. ஆனால் அந்த மணி ஒலியைத் தவிர வேறுவிதமான சப்தம் செய்தால் பால் குடிக்கும் விருப்பத்தை உணர்த்தும்படியான செய்கைகள் காணப்படவில்லை. இதிலிருந்து ஒலியின் வேறுபாட்டைக் குழந்தை

விரைவில் அறிந்துகொள்ளப் பழகிக்கொள்கிறது என்பதைக காணலாம்.

சுவை உணர்ச்சி: பிறந்த குழந்தை தாய்ப் பாலையே குடிககிறது. அது இனிப்பாக இருப்பதால இனிப்புச் சுவையைக் குழந்தை உடனே அறிந்துகொள்கிறது போலும். அதனாலேயே பசும்பாலைப புகடட ஆரம்பித்தால அதற்கு அவவளவாகப் பிடிப்பதிலலை. பசுமபாலில் தாய்ப்பாலைவிட இனிப்புக குறைவாக இருககிறது. பசும்பால் தாய்ப்பாலைப்போல அவவளவு சுலபமாக ஜீரணமாகாது. இக் காரணஙகளை பற்றியே பசும்பாலில் நீர கலந்து காயசசிச சிறிது சாக்கரையும் சோத்துக் கொடுக்கச சொலலுகிறாகள்.

குழந்தையின் சுவை உணாவைப்பற்றி, பிராட், நெல் சன், (Pratt. Nelson. Sun) என்ற மூன்று மனத்தத்துவ அறிஞாகள ஆராயச்சி ஒன்று செயதாாகள். பிறந்ததிலிருந்து பதினொரு நாள வரையில சில குழந்தைகளுக்கு அவாகள உப்பு, கொயினா, சாக்கரை முதலியவை தனித் தனியாகக கலந்த ஜலத்தைப் புகட்டினார் கள். சாக்கரை கலந்த ஜலததையே அவைகள் விரும்புவன போல் வாயைச சப்பின. இந்தச் சோதனையைத் தொடர்ந்து செயதபோது சாக்கரைப் பானததை விரும்பும் குறிகளும் மற்றவற்றை வெறுக்கும் குறிகளும் அதிகமாகத தோன்றலாயின.

இவவாறே சில நுடபமான ஆராய்சசிகளால் குழந்தைக்கு வாசனை அறியும் சகதியும் உண்டு என்பதைக் கணடிருககிறாாகள். குழந்தையின் ஸ்பரிஸ உணாசசி மிக நுடபமானது. அது உதடுகளில் மிக அதிகமாக இருப்பதால்தான் பால அருந்தும் பழககம் குழந்தைக்கு எளிதாக அமைந்துவிடுகிறது.

இந்தச் சகதிகளெல்லாம் பிறப்பிலிருந்து வெகு விரைவில் மலர ஆரம்பிககின்றன. இங்கே ஒரு விஷ

யத்தை நாம் மனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். குழந்தை ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்த தல்லவா? அதனால் எல்லாக் குழந்தைகளின் சக்தியும் ஒரேமாதிரி, ஒரே அளவில் வெளிப்படா. ஒரு குழந்தையிடம் ஒன்று விரைவிலும் மற்றொன்று சிறிது தாமதப் பட்டும் விகசிக்கும். ஆனால் பொதுவாகக் கூறமிடத்து, குழந்தை பிறந்த சில நாட்களுக்குள்ளேயே இந்த உணர்ச்சிகள் மிக அதிசயமான முறையில் வேகமாக விரிகின்றன.

# 3

# சூழ்நிலை

குழந்தையை வளர்ப்பது ஒரு பெரிய பொறுப்பு. பெற்றோர்கள் அதை உலகத்திற்குத் தாங்கள் செய்யும் சிறந்த கடமையென்று உணர்ந்து ஜாக்கிரதையாகச் செய்யவேண்டும். தாய்க்கு இயல்பாகவே குழந்தையைப் பற்றியும் அதன் வளர்ப்பைப்பற்றியும் பல விஷயங்கள் புலனாகும். ஆனால், அவற்றோடு திருப்தியடைந்து விடக் கூடாது. அறிவினால் கண்ட நல்ல முறைகளையும் உண்மைகளையும் தெரிந்து பயன்படுத்திக்கொள்ள வேண்டும்.

வீட்டிலும் அக்கம்பக்கத்திலும் உள்ள பாட்டிகள் பல முறைகளைச் சொல்லுவார்கள். குழந்தையைப் பார்க்க வருகிற பந்துக்கள் பலவற்றைச் சொல்லுவார்கள். சில நல்லனவாக இருக்கும்; சில குழந்தைக்குக் கெடுதல் விளைப்பனவாக இருக்கும். சில நம்பிக்கைகளும் பழக்கங்களும் தவறானவையாக இருக்கும். இவற்றையெல்லாம் அறிந்து நல்லனவற்றைக் கைக்கொண்டு மற்றவற்றை விலக்கிவிடப் பெற்றோர்கள் அறிந்திருக்க வேண்டும்.

நாம் செய்யும் காரியங்களையும் நமது பேச்சையும் நமது உணர்ச்சிகளையும் அறிந்துகொள்ளக்கூடிய சக்தி குழந்தைக்கு இருக்கிறதென்று பாட்டி நினைப்பதில்லை. குழந்தையைக் கையில் வைத்துக்கொண்டே அவள் வேலைக்காரியைச் சிடுசிடுப்பாள். கெஞ்சிக் கெஞ்சிப் பிச்சை கேட்கும் சிறு பெண்ணை அதட்டுவாள். இப்படியே பலவகையான உணர்ச்சிகளை வெளிப்

படுத்துவாள். குழந்தை அழுதால், 'டே, பூச்சாண்டி, வா, இந்தப் பிள்ளையைப் பிடித்துக்கொண்டு போ' என்று பயங்காட்டுவாள்; பூனைபோலக் கத்துவாள்.

எல்லாப் பாட்டிகளும் இப்படிச் செய்கிறார்கள் என்று நான் சொல்லவில்லை. செய்கிறவர்களும் தாங்கள் செய்வதில் ஒன்றும் தவறில்லை என்று எண்ணித்தான் செய்கிறார்கள். ஆனால் குழந்தையின் இள உள்ளத்தில் இவைகளெல்லாம் ஆழ்ந்து பதிகின்றன. குழந்தைக்குப் பயங்காட்டுவது பெருங் குற்றம் என்று சாஸ்திரம் சொல்லுகிறது. 'குழந்தையின் முன்னால் எவரிடத்திலும் கோபக் குறியைக் காட்டாதே; வசவு வார்த்தை பேசாதே; உனது குறைபாடுகளெல்லாம் அதன் மனத்திலும் பதியும்படி செய்யாதே' என்பது உள்ள நூலின் கட்டளை.

பலர் குழந்தையைப் பார்க்க வருகிறார்கள். அவர்களுக்கு அதை எடுத்து வாயில் முத்தமிட்டால்தான் திருப்தி. 'இது தவறான செய்கை' என்று மனத்தத்துவப் பண்டிதர்களும் வைத்தியர்களும் ஒருங்கே கண்டிக்கிறார்கள். 'வாயில் பல வகையான கிருமிகள் இருக்கும். அவை குழந்தைக்கு நோய் உண்டாக்கும்' என்றால் பெரியவர்கள் சிரிக்கிறார்கள். 'என்னவோ அம்மா, நாங்களுந்தான் உங்களையெல்லாம் வளர்த்தோம். ஒரு கிருமியைக் கண்டதில்லை, ஒரு நோயைக் கண்டதில்லை' என்று நீட்டுவார்கள்.

அவர்கள் மனம் நோகாதபடி சாமார்த்தியமாக நாம் நடந்துகொள்ளவேண்டும். அதே சமயத்தில் நல்ல முறையையும் விட்டுக் கொடுத்துவிடக்கூடாது; சிரமமான காரியந்தான். இது சம்பந்தமாக நான் பல தடவைகளில் பலருடைய மன வருத்தத்திற்கு ஆளாகியிருக்கிறேன். தாய்க்குக் கஷ்டம் இன்னும் அதிகமாக இருக்கும். இருந்தாலும் குழந்தையிடம் நமக்கு

உள்ள உண்மையான அன்பினால் இவற்றையெல்லாம் எளிதில் சமாளித்துக்கொள்ளலாம்.

தாய் நல்ல விவேகம் உடையவளாக இருக்கவேண்டும். குழந்தை உள்ளத்தை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். தன் தோழி ஒருத்தி அவள் குழந்தையை ஒருமாதிரி வளர்ப்பதைப் பார்த்து, அது அக் குழந்தைக்குச் சரிப்படுகிறதென்று அதே முறையைத் தானும் அனுஷ்டித்தால் போதும் என்று நினைத்துவிடக் கூடாது. ஒவ்வொரு குழந்தையும் ஒரு தனித் தன்மை வாய்ந்தது என்பதைத் தாய் நன்கு உணரவேண்டும். அப்பொழுதுதான் மனத்தத்துவ சாஸ்திரம் அவளுக்குத் துணை புரியும்.

உலகத்தில் எந்தச் சிறிய தொழில் செய்பவனும் அதைப்பற்றிப் படித்துப் பட்டம் பெறவேண்டி இருக்கிறது. ஆனால் குழந்தையை வளர்க்கும் மிக முக்கியமான தொழிலை யாரும் செய்யலாம் என்று சுதந்தரம் இருக்கிறது. பெற்றோர் ஆவதற்குமுன் ஆண் பெண்களுக்கு அதற்கு வேண்டிய அறிவு இருக்கிறதா என்று முடிவு செய்த பின்னரே அநுமதி கிடைக்கக்கூடிய காலம் வரவேண்டும்.

பிறப்பினால் குழந்தைக்குப் பல தன்மைகள் அமைகின்றனவென்றும் வளர்ப்பினால் பல தன்மைகள் அமைகின்றனவென்றும் உள்ள ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள். இவைபற்றி அவர்களுக்குள்ளேயே மாறுபட்ட அபிப்பிராயங்கள் இருக்கின்றன. பிறப்பிலேயே தன்மைகள் அமைவதில்லை என்கிறார்கள் சிலர். சிலர் பிறப்பிலும் அமையும் வளர்ப்பிலும் அமையும் என்கிறார்கள். ஆனால் வளர்ப்பினால் தன்மைகள் பல அமைவதை யாரும் மறுப்பதில்லை. குழந்தையின் முதல் ஐந்து வருஷங்களில் அதன் வளர்ப்பு முறை, அநுபவம், சூழ்நிலை முதலியவைகள் அநேகமாக வாழ்க்கையின் போக்கையே நிர்ணயித்து விடுவதாகச் சொல்லுகிறா

கள். இதில் அபிப்பிராய வேற்றுமையே இல்லை. இதனால் குழந்தையின் வளர்ப்பு மிகக் கவனத்தோடு செய்யவேண்டிய காரியம் என்று தெரிகிறது.

குழந்தையின் உள்ளத்தைப்பற்றிய உண்மைகளை அறிந்து அதற்கு ஏற்றவாறு வளர்ப்பதற்குத் திட்டம் போடுவதுமட்டும் போதாது. அதைவிடப் பெற்றோரின் உள்ளப் பான்மையும், அவர்கள் குழந்தையின் எதிரில் நடந்துகொள்ளும் விதமுமே முக்கியமானவை. தாயும் தகப்பனும் குழந்தைக்குப் பல விஷயங்களை எடுத்துச் சொல்லலாம். பல திட்டங்கள் வகுக்கலாம். அவை அவ்வளவு முக்கியமானவை அல்ல. அவர்கள் எப்படி வாழ்க்கை நடத்துகிறார்கள், எப்படிக் குழந்தையிடம் நடந்துகொள்கிறார்கள் என்பனவே முக்கியம். இவற்றைப்பொறுத்தே அவர்கள் தங்கள் கடமையில் வெற்றியும் தோல்வியும் அடைகிறார்கள்.

ஒவ்வொரு குழந்தையும் ஒரு தனித்தன்மை வாய்ந்த தலைவர்? அதனால் அது தன் தன்மைக்கு ஏற்ப இயல்பாகத்தானே வளரவேண்டும். நமது திட்டத்தின்படி வளரவில்லையே என்றோ சீக்கிரம் வயது வந்தவர்களைப்போல நடந்துகொள்ளவில்லையே என்றோ கவலைப்படுவது குழந்தைக்குத் தீங்கு விளைவிப்பதாகும்.

வயதானவர்களுக்கு அற்பமாகத் தோன்றும் பல விஷயங்கள் குழந்தைக்கு அதி முக்கியமாகத் தோன்றும். பெரியவர்கள் அதி முக்கியமென்று நினைப்பதைக் குழந்தை அப்படிக் கருதாமல் இருக்கலாம். சரோஜா ஒரு மரக்கட்டையை வைத்துக்கொண்டு அதைத் தாலாட்டிப் பாராட்டுகிறாள். அதற்குப் பால் கொடுக்கிறாள். அது அவளுக்குப் பெரிய விஷயம். ஆனால் அதே சமயத்தில் கைகளைச் சுத்தமாக வைத்துக்கொள்வது அவளுக்கு முக்கியமாகத் தோன்றுவதில்லை.

சுத்தமாக இருக்கப் பழக்குவது வற்புறுத்தலினால் ஏற்படக் கூடாது. குழந்தை கையில் மண்ணைப்

பிசைந்துகொணடு வருகிறதே என்று சீறி விழவுங் கூடாது. இவைகளெல்லாம் அதற்குத் தீமையையே விளைவிககும்.

ஒன்றுபோலவே எல்லாக குழந்தைகளும் ஒரே மாதிரியாக விரைவில் நலல ஒழுககஙகளைக கறறுக் கொளளவேணடுமென்று ஆததிரபபடுவதும் அறி வுடைமையாகாது. சில பெற்ருோகள ஒரு குழந்தையிட முள்ள குறையை எடுததுக்காட்டி மற்றக குழந்தை களுடன் அதை ஒப்பிடடுத தாழ்வாகப் பேசுகிருாகள. அதனுலும் தீஙகே விளைகிறது. எலலாக குழந்தைகளை யும் ஒரே மாதிரி உயரமுளளனவாக வளாசசெயய முடியுமா? ஒவவொன்றும் ஒரே மாதிரி வருஷம் ஒன் றுககு இரணடு அஙகுலம வளரவேணடும் என்று எதிர் பாாககலாமா? இது எவவளவு பேதைமையோ அதே போலததான் வேறு பழககஙகளிலும் ஒரே மாதிரி வேகததை எதிாபாாப்பதும்.

பெற்ருோகளின் கவலை, உணாசசி முதலியவை களைக் குழந்தை நன்கு அறிந்துகொளகிறதென்று முன்பே கணடோம். ஆதலின், அவாகளுடைய வாழ்ககை திருந்திய முறையில அமைந்ததாக இருகக வேணடும். கணவனுககும் மனைவிககும் இடையே சரி யான உளள ஒற்றுமை இருக்க வேணடும். குடும்ப நிாவாகம் இருவருடைய பரஸ்பர அன்பினுல நடை பெற வேணடும். குழந்தைககு அன்பும் அந்நியோந்நிய மும் நிறைந்த சூழநிலையை அவாகள தஙகள் நடததை யால ஏற்படுததிக கொடுக்கவேணடும். இதுவே அவர் கள வகுககும் திடடஙகளைவிட அதிகமாகக் குழந்தை யின் வளாசசியில உதவி புரிகிறது.

4

# பிறருடன் பழகுதல்

குழந்தை ஆரம்பத்தில் தனது தாய் தந்தையுடனும் வீட்டிலுள்ள மற்றவர்களுடனும் பழகுகிறது. இவர்கள் எல்லோரும் குழந்தையிடம் அன்பு காட்டுகிறார்கள்; அதற்கு உணவு கொடுக்கிறார்கள்; வேடிக்கை காட்டுகிறார்கள் - அதைப் பாதுகாக்கிறார்கள். அதனால் குழந்தைக்கு அவர்களிடம் பிரியம் உண்டாகிறது.

குழந்தையின்மேலுள்ள அன்பினால் அதற்கு வேண்டியவற்றையெல்லாம் பெற்றோர்களே செய்கிறார்கள்; குழந்தை ஒன்றை நினைக்கும்போதே அதைத் தேடிக்கொடுக்கிறார்கள். தானாகவே அது செய்து கொள்ளக்கூடிய காரியத்தையெல்லாம் இவர்கள் செய்வதால், குழந்தை வயது வந்த காலத்திலும் எதற்கெடுத்தாலும் பிறரையே எதிர்பார்த்து நிற்கும் மனப்பான்மையை அடைகிறது.

வளர வளரக் குழந்தை தானாகவே சிறு சிறு காரியங்களைச் செய்யக்கூடிய ஆற்றல் பெறுகிறது. அவற்றைச் செய்வதில் மகிழ்ச்சியும் அடைகிறது. ஆதலால் அவற்றைச் செய்யக் குழந்தைக்குச் சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும்.

சரோஜாவுக்கு இரண்டு வயது. அவளுக்குத் தன் வட்டிலைத் தானே கழுவி எடுத்துக்கொண்டு வந்து வைத்துக்கொள்வதில்தான் விருப்பம். அந்தக் காரியத்தை அவளே சுத்தமாகச் செய்யப் பழக்கிவிடலாம். அப்படியில்லாமல், 'குழந்தை எப்படி இதைச் செய்யும்?' என்று நாமே செய்துவிடுவது நல்லதல்ல. அவ

ளுக்குத் தன்னம்பிக்கை சிறு வயது முதற்கொண்டே ஏற்பட வேண்டும்.

பெற்றோர்களே எல்லாச் சௌகரியங்களையும் சிரத்தையோடு கவனிப்பதால் குழந்தை மற்றவர்களிட மிருந்தும் இம்மாதிரி உதவியையே நாடுகிறது. வீட்டில் உள்ளவர்களைப் போலவே மற்றவர்களும் தன்னைக் கவனித்துப் பாராட்டவேண்டும் என்று எதிர்பார்க்கிறது.

அப்படி எதிர்பார்த்துக் குழந்தை ஏமாற்றம் அடைகிறது. அதனால் தனது குடும்பத்தோடுமட்டும் பழகிக்கொண்டு சமூகத்தில் மற்றவர்களோடு தொடர்பு அதிகம் வைத்துக்கொள்ளாமல் இருக்கவே விரும்புகிறது. இது பிற்காலத்திலே அதன் வாழ்க்கைக் குப் பாதகமாக முடியும்.

பெற்றோர்கள் அன்பின் மிகுதியால் செய்யும் காரியம், குழந்தை பிறரிடம் பழகிச் சமூகத்தில் கலந்து வெற்றியுடன் வாழ்வதற்கு இடையூறாக ஏற்படலாம். அது என்றும் தன் தாய் தந்தையர்களைப் போலவே தன்னிடம் அனுதாபங் காட்டும் சிலரையே எதற்கும் நாடி நிற்கும். அதோடு மற்றவர்கள் தன்னைக் கவனிக் காததைக் கண்டு பல தடவைகளில் ஏமாற்றமும் சங்கடமும் அடையும்.

தன்னம்பிக்கையோடு, எதிர்ப்படும் இடைஞ்சல் களை யெல்லாம் விலக்கிக்கொண்டு போகிறவனே வாழ்க்கையில் வெற்றிபெறுவான் என்கிற உள்ளப் பான்மையைச் சிறு வயதிலிருந்தே குழந்தை தனக்கு வேண்டிய சிறு சிறு சௌகரியங்களைத் தானே செய்து பழகுவதால் பெற வேண்டும். அதற்குத் துணை புரிவது பெற்றோர்களின் கடமை.

தன்னை எல்லோரும் ஒரே விதமான அன்புடன் நடத்தமாட்டார்கள் என்பதையும் அப்படி எதிர்பார்க்க வுங் கூடாது என்பதையும் குழந்தை மெதுவாக உணர

வேண்டும். இந்த உணர்ச்சி இயல்பாக வரவேண்டுமே ஒழிய ஒரு பெரிய அதிர்ச்சியாக ஏற்படக்கூடாது. பிறருடன் அவ்வப்போது குழந்தையைப் பழக விடுவதே இதற்குச் சரியான வழி.

குழந்தை தனக்கு வேண்டியதையெல்லாம் தாயாரைச் செய்யும்படி ஏவச் சீக்கிரம் கற்றுக்கொண்டு விடுகிறது. அதிலும் தாய் உறுதியுடன் இல்லாவிட்டால் வெகு சுலபமாக அது இதைச் சாதித்துக்கொள்ளும். பெரிய குரல் எடுத்து அழ ஆரம்பிக்கும்; இல்லாவிட்டால் கீழே விழுந்து புரளும். இப்படிச் செய்தால் தாய் தனக்கு வேண்டியதைச் செய்வாள் என்று அதற்கு நன்றாகத் தெரியும். இப்படிப் பழகிய குழந்தை மற்றவர்களிடத்தும் எல்லா உதவியையும் எதிர்பார்க்கிறது. இந்த மனப் பான்மையைத் தடுக்கவேண்டுமானால், மற்றக் குழந்தைகளுடனும் பெரியவர்களுடனும் சேர்ந்து அவர்கள் மத்தியில் இருக்க அடிக்கடி சந்தர்ப்பம் கொடுக்கவேண்டும்.

வேறு சிறுவர்களின் மத்தியில் விட்டால் குழந்தை முதலில் தனியாக இருக்கவே முயல்கிறது. உடனே அவர்களுடன் பழகுவதில்லை. அங்குள்ளவர்கள் அறிமுகமில்லாதவர்களாக இருப்பதால் இம்மாதிரி ஏற்படுகிறது. ஆனால் ஏதாவது ஒரு விளையாட்டோ வேடிக்கையோ இருந்தால் சுலபமாக அவர்களுடன் சேர்ந்து அதில் பங்கெடுத்துக்கொள்ள ஆரம்பிக்கிறது. விளையாட்டிலும் வேடிக்கையிலும் உள்ள உத்ஸாகம் தன்னை மறந்து பிறருடன் கலந்துகொள்ளத் தூண்டுகிறது.

அப்படிக் கலந்துகொள்ளும்போது குழந்தை சாதாரணமாகச் சம வயதுள்ளவர்களிடமே அதிகம் பழகும். இதுவே இயற்கை. ஒரு குழந்தை தன்னைவிட மிகக் குறைந்த வயதுள்ளவர்களுடன் பழகவே நாடுகிறதென்றால், அதனால் சம வயதினர்களுடன் ஏதோ ஒரு

காரணத்தால் பழக இயலவில்லை என்பது வெளியாகிறது.

ஒரு குழந்தை தன்னைவிடப் பெரியவர்களையே நாடினால், பெரும்பாலும் பெற்றோர்களிடம் அடைந்த சௌகரியங்களையே அவர்களிடமும் அது எதிர்பார்த்து அவ்விதம் செய்கிறதென்று தெரிந்துகொள்ளலாம்.

மற்றவர்களிடம் பழகுகிற காலத்தில்தான் குழந்தை எப்பொழுதும் தனது சௌகரியத்தையே கவனித்துக்கொண்டிருப்பதை விட்டுவிட்டுப் பிறருடைய சௌகரியத்தையும் கவனிக்கவேண்டும் என்பதை உணர்கிறது. சுய நலத்தையே எப்பொழுதும் பாராட்டிக் கொண்டிருக்க முடியாது என்பதும் அதற்குப் புலனாகிறது. பிறருடைய நடத்தையைக் காண்பதால் மக்களுக்குள் உள்ள தார தம்மியத்தையும் அறிய ஆரம்பிக்கிறது.

வயது ஆக ஆக நம்முடைய நண்பர்களின் எண்ணிக்கை குறைந்துகொண்டு வருவதை நாம் அநுபவத்தில் காணலாம். ஒருவனுடைய தன்மைக்கு ஏற்றவாறு சிலரே முடிவில் நண்பர்களாக அமைகிறார்கள். ஆனால் அப்படி அமையும் நண்பர்களை நிர்ணயிப்பதற்கு அவனுக்கு மற்றவர்களுடைய தன்மையை அறிந்துகொள்ளக்கூடிய ஆற்றல் இருக்கவேண்டும். இல்லாவிட்டால் அவன் தன் வாழ்வில் பல துன்பங்களுக்கு ஆளாக நேரிடும். இந்த ஆற்றலைக் குழந்தைப் பருவம் முதற்கொண்டே பலருடன் பழகும் வாயிலாக வளர்க்கவேண்டும்.

சிலர் தமக்கு ஏற்ற தோழர்களைக் கொள்ளாமல் இருப்பதைக் கண்டு நாம் வியப்படைகிறோம். 'இவருக்கென்ன அறிவில்லையா? பிறகு ஏன் இப்படிச் சிநேகிதம் வைத்துக்கொண்டிருக்கிறார்?' என்று ஆச்சரியப்படுகிறோம்.

தம் தோழரைப்பற்றி மற்றவர்கள் சுலபமாக அறிந்துகொள்ளக் கூடிய விஷயங்களை அவர்கள் அறியா

மல் இருக்கிறார்கள். இதற்குக் காரணம்: அவர்களுக்குப் பலருடன் பழகி அவர்களுடைய தன்மையை உணர்ந்து கொள்ளக் கூடிய திறமை இல்லை என்பதுதான். அதை விருத்தி செய்துகொள்ளக் கூடிய சந்தர்ப்பம் சிறு வயதிலிருந்தே அவர்களுக்குக் கிடைத்திருக் காது.

சில பெற்றோர்கள் தங்கள் அநுபவத்திலிருந்து விரும்பத்தகாதவர்கள் என்று தெரிந்தவர்களிடம் குழந் தையை நெருங்கவொட்டாமல் சர்வ ஜாக்கிரதையாகத் தடுத்து வைப்பார்கள். அது ஒரு வகையில் நல்லதென்று லும் குழந்தைக்கு, 'உலகத்தில் இப்படிப்பட்டவர்களும் உண்டு' என்பதே தெரியாமல் போய்விடக்கூடாது. குழந்தைக்கு, 'விரும்பத்தகாதவர்களும் உண்டு' என்பது முற்றும் தெரியாவிட்டால், அது வாழ்க்கையில் ஏமாந்து போய்விடலாம். தனது பிற்கால வாழ்வில் அவர்களைக் கண்டு அவர்களிடம் தான் இதுவரையில் கண்டிராத புது மாதிரி நடத்தையைப் பார்த்து அதனுல் அவர்மேல் அது பற்றுக்கொள்ளவும் நேரிடும். சமூக வாழ்விலும் மற்றத் துறைகளில் போலவே குழந்தை தானே பழகித்தான் மற்றவர்களை அறிந்துகொள்கிறது. அதனால் அதற்கு நல்லவர் கெட்டவர்களைப் பிரித்து அறிந்துகொள்ளப் பழக்கம் ஏற்படவேண்டும். நல்லவர்களை அறிந்து அவர் களுடன் தொடர்புகொள்ளவும் கெட்டவர்களை அறிந்து அவர்களை ஒதுக்கவும் அதற்கு வழி காட்டவேண்டுமே ஒழிய, கெட்டவர்களும் உண்டு என்பதை அதற்குத் தெரியாமலே மறைத்துவிடுவது நல்லதல்ல. மனிதர்கள் பலவிதமான குணங்களையுடையவர்கள் என்பதையும் எல்லோரும் ஒரேமாதிரி அல்ல என்பதையும் குழந்தை தனது அநுபவத்தால் நயமாக உணர்ந்துகொள்ள வேண்டும்.

இதனுல் கெட்டவர்களுடன் குழந்தை பழக வேண்டும் என்பதல்ல; அப்படியும் சிலர் உண்டு என்

பதைக குழந்தை அறியாமலிருந்து பிற்கால வாழ்வில ஏமாற்ற மடையககூடாது என்பதே என் கடசி.

பிறருடன் குழந்தை பழகவேணடும் என்கிறபோது ஒரு முககியமான விஷயத்தை நாம் மனததில் வைததுக் கொளளவேணடும். வேறு குழந்தைகளுடனும் பெரிய வாகளுடனும் சில நாழிகை பழகுவது ஒனறு; அவா களுடன் நாள முழுவதும் பழகுவது வேறொன்று. நாள் முழுவதும் பழகவேணடியவாகள அடிககடி மாறிக் கொணடிருப்பது குழந்தைககு நலலதலல. ஐந்து வயது வரையில குழந்தை தனது சூழ்நிலைக்கும் தன்னுடன் நீடித்துப் பழகுபவருக்கும் தகுந்த மாதிரி நடக்கக் கற்றுககொள்ளுகிறது. அதனல் அந்தச சமயத்தில் வசிககும் இடத்தை அடிக்கடி மாற்றுவதும் புதிய புதிய மனிதர்களோடு பழகவிடுவதும் குழந்தைக்குக் கலக் கத்தை உண்டுபணணுகிறது. எவவாறு தனது நடத்தையை அமைத்துக்கொள்ளவேணடும் என்பதை அது இவவித மாறுதலால் அறியமாட்டாது திகைப் படையும். உதாரணமாகக் குழந்தையிடம் பழகுகிற வேலைக்காரர்கள் அடிக்கடி மாறிக்கொணடே இருந்தால் ஒவவொருவருடைய தன்மைககும் ஏற்றவாறு அவர் கள் குழந்தையிடம் நடந்துகொள்வார்கள். குழந்தைக்கு அது பெரிய கலக்கததை அளிக்கும். ஆதலால், இந்த வித்தியாசத்தை மனததில் வைத்துக்கொணடு குழந் தையை மற்றவாகளுடன் பழகவிடவேணடும். நீடிததுப் பழகுகிறவாகள் நலலவாகளாகவும் இருக்கவேணடும்.

குழந்தை, உலகத்திற்குத் தனியாக வருகிறது. அப்பொழுது அதற்கு யாரிடத்திலும் தனிப்பட்ட அன்பு இருப்பதாகத் தெரியவிலலை. பிறகு, தன்னைப் போஷிததுப் பாதுகாககும் தாயிடம் அன்புகொள்ளு கிறது. அதன் பின் தகப்பனிடம் அன்புகொள்ளுகிறது. தன்னைச சூழ்ந்திருக்கும் மற்றவாகளிடம் பிரியம் காட்டு கிறது. அவர்களுடன் இருப்பதில இன்பம் காண்கிறது.

சிறிது சிறிதாக இந்தத் தொடர்பும் அன்பும் விரிந்து கொண்டே போகின்றன.

மற்றவர்களோடு தொடர்புகொள்வதில் அதற்கு விருப்பமும் திருப்தியும் எவ்வாறு வளர்கின்றன என்பதுபற்றிப் பல ஆராய்ச்சிகள் நடந்திருக்கின்றன. பியூலர், கெசல் (Buhler, Gessel) என்ற இரு மனதத்துவ சாஸ்திரிகள் செய்த ஆராய்ச்சியின் முடிவைக் கவனிப்போம்:

முதல் மாதம்: எடுத்தால அழுகை நிற்கிறது; பெரியவர்கள் வந்தாலும், அவர்கள் முகத்தைப் பார்த்தாலும் அழுகை நிற்கிறது; ஆனால் மனிதக் குரலுக்கும் வேறு சப்தத்துக்கும் வித்தியாசம் தெரிவதில்லை.

இரண்டாம் மாத முடிவில் பெரியவர்களைப் பார்த்ததும் சிரிக்கத் தெரிந்துகொள்ளும். அவர்கள் குனிந்து பார்த்தாலும் வாயைக் குவித்துச் சப்தம் உண்டாக்கினாலும் சிரிக்கிறது. சில குழந்தைகள் பேச்சுக் குரல் வரும் திசையில் தலையைத் திருப்பிப் பார்க்கும். மனிதக் குரலுக்கும் வேறு ஒலிகளுக்கும் உள்ள வேற்றுமையை அறிகிறது.

மூன்றும் மாதத்தில் இம்மாதிரிச் செய்கைகள் இன்னும் தெளிவாகத் தெரிகின்றன. பேச்சுக் குரல் கேட்டு அழுகையை நிறுத்திவிடும். இந்த வயதில் சில குழந்தைகள் தங்களைக் கவனித்துக்கொண்டிருந்தவர்கள், பக்கத்தில் இருந்து போக ஆரம்பித்தால் அழத் தொடங்கும். திரும்பி வந்தால் அவர்களையே உற்று நோக்குவதையும் பார்த்துச் சிரிப்பதையும் அதிகமாகக் காணலாம்.

நான்காம் மாதத்தில் தன்னை எடுத்துக்கொள்ளும்படி உடம்பை நெளித்து நெளித்துக் காண்பிக்கும். அதனுடன் பேசினால் சிரிக்கும்; விளையாட்டுக் காட்டினாலும் சிரிக்கும்.

ஆறும் மாதத்தில் குழந்தை பிறருடன் பழகுவதில் அதிக விருப்பம் காணபிககிறது. வாஷ்பான் (Washburn) என்பவா, 'ஒளிந்து வேடிககை காணபிததால் ஆறு மாதக குழந்தை சிரிக்கும்' என்று சொலலுகிறா. பல குழந்தைகள் பழகியவரைக கணடால் மகிழ்சசியும், புதியவரைக் கணடால வெடகமும் அடைகின்றன. 'நாக் கால நொச்சுக கூடடுதல், பெரியவாகள் செய்து காண பிபபதுபோல் கைகாலகளை ஆடடுதல் முதலிய சிறு காரியங்களையும் செய்யும்' என்று பியூலர் கூறுகிறா.

ஏழாம மாததததில, பழகியவரிடம் அதிக நேசமும் விளையாடடுக் காணபித்தால அதிக மகிழ்சசியும் கொளகிறது. பிறரைப்போல பல சப்தஙகள் செய்யவும் ஆரம்பிககிறது.

எட்டாம் மாதத்தில பலவாறு மழலைப் பேச்சுப் பேசிப் பாாககிறது.

அதற்குமேல் பேசசு வர ஆரம்பிக்கிறது. நடக்க முயலகிறது. மற்ற வகைகளிலும் சந்தாப்பத்திற்கு ஏற்றவாறு நடந்துகொளளப் பழகுகிறது.

நான்கு மாதம்வரையில் கோபப் பார்வையையும் முகச சுளிப்பையும், கோபப் பேசசையும் குழந்தை விததியாசப்படுததி அறிந்துகொள்வதிலலை. ஆனல ஐந்தாம் மாதததிலிருந்து பல குழந்தைகள் அவற்றைத் தெரிந்துகொளளுகின்றன என்று பியூலா கணடிருக் கிறா.

ஒரு குழந்தை வேறு குழந்தைகளோடு எவவாறு தொடாபுகொள்கிறது என்பதையும் நாம் கவனிக்க வேணடும். இதுபற்றி நான் குறித்து வைததுள்ள நிகழச்சிகள் சிலவற்றை இங்கே தருகிறேன்.

சரோஜாவுக்கு வயது ஒன்றரை. அவள் முன் ஆறுமாதக் குழந்தை ஒன்றை விட்டேன். 'பாப்பா, பாப்பா!' என்று சொல்லிச் சிரிததாள். மடியில்

வைத்துக்கொள்ளத் தூக்கினாள்; முடியவில்லை. மடியில் வைக்குமாறு வற்புறுத்தினாள். அப்படி வைத்ததும் பெரு மகிழ்ச்சியோடு முத்தம் கொடுத்தாள். 'பாப்பா, பாப்பா!' என்று அடிக்கடி சொன்னாள். ஆனால் தன் பொம்மையைப் போல இதைத் தூக்கிக்கொள்ள முடியாததால் கிள்ளி விட்டாள்.

சரோஜாவுக்கு வயது இரண்டு. தூங்கிக்கொண்டிருக்கும் கமலாவைப் பார்த்தாள். அவளுக்கு ஒரு துணியை எடுத்துக்கொண்டுபோயப் போர்த்தினாள். தூங்குமாறு தட்டிக்கொடுத்தாள். சிறிது நேரத்தில் துணியை எடுத்துக்கொண்டு வந்துவிட்டாள்.

கண்ணம்மாளுக்கு வயது நான்கு. அவள் தன் போன்ற குழந்தைகளுடன் சேர்ந்து விளையாடுகிறாள். சரோஜாவோ கூடவே போனாலும் யாருடனும் சேராமல் தனியாகவே விளையாடிக்கொண்டிருக்கிறாள்.

சிறு குழந்தை ஒரே விஷயத்தில் அதிக நேரம் கவனம் செலுத்தாது. வயது ஆக ஆக ஒரே விஷயத்தில் கவனம் செலுத்தும் நேரம் அதிகமாகிக்கொண்டே வரும். அப்பொழுதுதான் சேர்ந்து விளையாடும் சுபாவம் வளரும்.

கூடி விளையாடும்போதுதான் பிறர் சந்தோஷத்தையும் சௌகரியத்தையும் கவனிக்கவேண்டும் என்பதும் தன்னைப்பற்றிமட்டும் சதா நினைத்துக்கொண்டிருக்கக் கூடாது என்பதும் போன்ற அறிவு ஏற்படுகிறது. சில குழந்தைகளைத் தனக்குப் பணிய வைத்துவிடலாம், சில குழந்தைகளுக்குத் தான் பணியவேண்டி வரும் என்ற அறிவு மெதுவாகப் பிறக்கிறது. துடுக்குப் பிள்ளைகளை விட்டு விலகியிருக்கவும் கற்றுக்கொள்ளுகிறது. பிறரிடமிருந்து ஏதாவது பெற்றுக்கொள்ளப் புதிய புதிய வழிகளைத் தெரிந்துகொள்கிறது.

தன்னுடன் விளையாடும் குழந்தையைத் தள்ளிவிடுவது, அடிப்பது, அது முடியாவிட்டால் அம்மாளை உத

விக்குக் கூப்பிடுவது முதலியவற்றுலேயே தனது இஷ்டத்தைப பூர்த்தி செய்துகொள்வதைவிட வேறு விதங்களிலும் அதை நிறைவேற்றிக்கொள்ளலாம் என்பதைக் கூர்ந்த அறிவுடைய குழந்தை சீக்கிரம் தனது சொந்த அநுபவத்தாலேயே தெரிந்துகொள்கிறது.

'நீ மிட்டாய் கொடு, நான் பூ கொடுக்கிறேன்' என்று வாங்கிக்கொள்ளும்.

வேறொரு பக்கம் கவனத்தை மாற்றியும் தனக்கு வேண்டியதைப் பெற முயலும்.

சரோஜா ஒரு சிறு தொட்டிலில் பொம்மையைப் போட்டுத் தாலாட்டிக்கொண்டிருந்தாள். கண்ணம்மாளுக்குத் தான் ஆட்டவேண்டுமென்று ஆசை வந்துவிட்டது. கையிலிருந்த படத்தைக் கொடுப்பதுபோல, 'இந்தா' என்று நீட்டினுள். சரோஜா ஓடிவந்து அதை வாங்கிப் பார்த்துக்கொண்டிருந்தாள். கண்ணம்மா தாலாட்ட ஆரம்பித்துவிட்டாள்.

இரண்டு குழந்தைகளைச் சேர்ந்திருக்கவிட்டால் சிநேக உணர்ச்சிதான் பெரும்பாலும் முதலில் தோன்றுகிறது. மென்கர்ட் (Mengert) பல இரண்டு வயதுக் குழந்தைகளை மாற்றி மாற்றி ஜோடி ஜோடியாக விளையாடவிட்டுப் பார்த்ததில் சிநேகபாவமே மிக அதிகமாக இருப்பது தெரிந்தது. ஆனால் ஒரு குழந்தையின் காரியத்தில் மற்றொன்று அடிக்கடி தலையிட நேர்ந்தால் பொருமை, போட்டி, சண்டை முதலியவை உண்டாகின்றன. இப்படிப்பட்ட சண்டை முதலியவற்றுல் குழந்தை பல விஷயங்களைத் தெரிந்துகொள்ளுகிறது. பிறருடன் எப்படி நடந்துகொள்ளவேண்டும் என்றும் கற்றுக்கொள்கிறது. மற்றக் குழந்தைகளின் தொடர்பாலேயே ஒவ்வொரு குழந்தையின் உள்ள உணர்ச்சிகளும் வளர்கின்றன.

சில குழந்தைகள் உடனே மற்றக் குழந்தைகளோடு கலந்துகொள்ளாமல் பெரியவர்களைப் பிடித்துக்

கொண்டு அவர்கள் விளையாடுவதைக் கவனித்துக்கொண்டிருக்கும். சிறிது நேரத்தில் தம்மை அறியாமல் மற்றவர்களுடன் சேர்ந்துகொள்ளும். ஆனால் அவர்களையெல்லாம் தமது தோழர்களாக முதலில் அவை கருதுவதில்லை; விரோதிகளாகவும் போட்டிக்காரர்களாகவுமே எண்ணுகின்றன. அதனாலேயே கிள்ளுவது, தள்ளுவது, முதலிய சேஷ்டைகளைத் தொடங்குகின்றன. அப்படிச் செய்து மற்றக் குழந்தைகள் தம் விரோதிகளல்ல என்பதை அநுபவத்தால் உணர்ந்துகொள்கின்றன. இந்த அநுபவம், ஒவ்வொரு குழந்தைக்கும் மிக அவசியமானது.

பல குழந்தைகளைக் கூடி விளையாடவிட்டால் சாதாரணமாக அவை வயதுக்குத் தக்கவாறு சிறு சிறு கூட்டங்களாகப் பிரிந்துகொள்கின்றன. பள்ளிக்கு வரும் வயது வரையில் பொதுவாகக் குழந்தைகள் ஆண் பெண் என்ற வித்தியாசமின்றிச் சேர்ந்து விளையாடுகின்றன. பிறகு தான் சிறிது சிறிதாகத் தனித்தனியே பிரிந்துகொள்ளும்.

குழந்தைப் பள்ளிக்குச் (Nursery School) செல்லும் குழந்தை, பேச்சிலும், பிறர் தூண்டுதலில்லாமல் காரியங்களைச் செய்ய முயல்வதிலும், விளையாட்டுச் சாமான்களை ஒழுங்காக வைப்பதிலும், அவற்றை வேறு யாராவது எடுக்கும்போது முகமலர்ச்சியோடு இருப்பதிலும், பிறர் அழும்போது அவரிடம் அநுதாபங் காட்டுவதிலும் மற்றக் குழந்தைகளைவிட அதிக அபிவிருத்தி அடைந்திருப்பதாக வால்ஷ் என்பவர் ஆராய்ந்து கண்டிருக்கிறார். ஆகவே, சந்தர்ப்பமும் பிறருடைய பழக்கமும் அதிகமாகக் கிடைக்கப்பெற்ற குழந்தை பலவகைப்பட்ட அறிவைச் சம்பாதித்துக்கொள்கிறது என்று தெரிகிறது.

வயது ஆக ஆகக் குழந்தைக்குத் தன்னைச் சூழ்ந்திருப்பவர்களின் விருப்பு வெறுப்புக்கள் பிடிபட ஆரம்பித்தால், அப்பொழுது எல்லோரிடமும் பழகும்

தன்மை மட்டுப்படுகிறது. ஆதலால், குழந்தைப் பருவத்திலேயே மற்றக் குழந்தைகளுடன் குழந்தைகளைத் தாராளமாகப் பழகவிடவேண்டும்.

சில பெற்றோர்கள் தங்கள் அன்பினால் குழந்தையைப் பிரிந்திருக்க விரும்புகிறார்கள்; ஏதாவது தீங்கு நேர்ந்துவிடுமோ, சிரங்கு ஒட்டிக்கொள்ளுமோ வேறு நோய் வந்துவிடுமோ என்ற பயம். வீட்டிற்கு ஒரே பிள்ளை என்றால் நிலைமை இன்னும் மோசமாகி விடுகிறது. உடன்பிறந்தவர்களுடன் பழகும் சந்தர்ப்பமும் அதற்கு இல்லாமல் போய்விடுகிறது. நோய் வராமல் கவனித்துக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் மற்றக் குழந்தைகளுடன் பழகவும் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும்.

இப்படிப் பழக வேண்டுமென்று சொல்வதாலேயே, அதில் விருப்பமில்லாத குழந்தைகளையெல்லாம் வற்புறுத்திப் பழகவிட வேண்டும் என்பதல்ல. சில குழந்தைகள் அசாதாரணமாகக் கூர்ந்த அறிவும் திறமையும் வாய்க்கப்பெற்றிருக்கலாம். அப்படிப்பட்ட குழந்தைகள் பொதுவாக மற்றவர்களுடன் அதிகம் கலந்துகொள்ள விரும்புவதில்லை. தங்கள் திறமையின் வளர்ச்சியிலேயே அவைகள் யாரும் அறியாத வகையில் ஈடுபட்டிருக்கின்றன. ஆதலால் பிறருடன் சேர ஆசைகொள்வதில்லை. அவற்றை மற்றக் குழந்தைகள் மத்தியில் விட்டாலும் சிரமமே படுகின்றன. அவற்றின் வளர்ச்சியும் பாதிக்கப்படுகிறது. ஆதலால் அப்படிப்பட்ட விசேஷத் திறமை வாய்ந்த குழந்தைகளை அவற்றின் இஷ்டம்போல் விட்டு விடலாம்.

பொதுவாகக் கூறுமிடத்துக் குழந்தைகள் மற்றவர்களுடைய தொடர்பால் பல அநுபவங்களையும் அறிவையும் பெறுவதால் அப்படிப்பட்ட தொடர்பு வேண்டியது அவசியமாகிறது.

5

# உடன்பிறந்தவர்களுடன் பழகுதல்

உடன்பிறந்தவர்களிடையே ஆழ்ந்த அன்பு இருக்கிறது. இதை உடன் பிறப்பு என்னும் பாசம் என்கிறோம்; 'தான் ஆடாவிடினும் தன் சதை ஆடும்' என்கிறோம். ஆனால், அதே சமயத்தில் உடன் பிறந்தவர்களிடையே பொறாமை, பகைமை முதலிய குணங்கள் இருப்பதையும் காண்கிறோம். இவற்றிற்கெல்லாம் என்ன காரணம்? அன்பு உண்டாவதற்கும், பொறாமையோ பகைமையோ உண்டாவதற்கும் குழந்தைகளை வளர்க்கும் பெற்றோர்கள் எவ்வகையிலாவது காரணமாக இருக்கிறார்களா என்று ஆராயவேண்டும்.

குழந்தை தனக்கு உதவி செய்பவர்களிடம் அன்பு கொள்கிறது. தாய் போஷிக்கிறாள், பாதுகாக்கிறாள், வேண்டியதைச் செய்கிறாள். அவளிடம் குழந்தைக்கு அன்பு ஏற்படுகிறது. அதேபோல ஒரே வீட்டில் வளரும் குழந்தைகள் ஒன்றுக்கொன்று பல வகைகளில் உபகாரமாக இருக்கின்றன. ஒன்றுடன் ஒன்று அதிகம் நெருங்கிப் பழகுகிறது. ஆபத்துக் காலத்தில் துணையாக இருக்கிறது. அதனால் இயல்பாகவே ஆழ்ந்த அன்பு ஏற்படுகிறது. இந்த அன்பைப் பெற்றோர்கள் மேலும் மேலும் வளரும்படி செய்ய முடியும். அதே சமயத்தில், சகோதர சகோதரிகளிடையே குழந்தைப் பருவத்திலேயே பொறாமையும் பகைமையும் உண்டாகும் படியும் செய்துவிடக்கூடும். பெற்றோர்கள் தாங்கள் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் பேசும் பேச்சிலும் ஜாக்கிரதையாக இல்லாவிட்டால் தம்மை அறியாமலேயே குழந்தைகளுக்குப் பல தீங்குகளைப் பழக்கி விடுவார்கள்.

இரண்டாவது குழந்தை சரோஜா பிறக்கும்வரையில் கண்ணம்மா வெகு நல்ல பெண்ணாக இருந்தாள். சிறு குழந்தைகளைக் கண்டால், 'பாப்பா, பாப்பா!' என்று கொஞ்சுவாள; தன் மடியில் வைக்கும்படி சொல்லுவாள்.

ஆனால் இப்பொழுதோ சரோஜா தொட்டிலில் தூங்கினால் கண்ணம்மா யாரும் அறியாமல் அவளைக் கிள்ளிவிட்டு ஓடிவிடுகிறாள். ஒவ்வொரு சமயம் அவளைக் கீழே தள்ளிவிடுகிறாள். தாயார் சரோஜாவை மடியில் வைத்திருந்தால தானும் அங்கே உட்கார வேண்டுமென்று பிடிவாதம் செயகிறாள்.

'அப்பா, நான்தான் நல்லவள்; சரோஜா வேண்டாம். அவளுக்கு மிட்டாய் கொடுக்காதே' என்கிறாள்.

இப்படி மாறியதற்குக் காரணம் என்ன? கண்ணம்மா தனியாக இருந்தபோது பெற்றோர்களின் அன்பெல்லாம் அவளமேலேயே இருந்தது. அவளே தாய தந்தையரின் அன்புச சிங்காதனத்திலிருந்து தனி அரசாண்டாள்.

இப்பொழுது தாயின் கவனம் மற்றொரு குழந்தை மேல செல்லுகிறது. தாய சரோஜாவை மடியில வைத்துப் பால் கொடுக்கிறாள; அன்பு வாாதைகள் பேசுகிறாள. கண்ணம்மாவுக்குப் பொறாமை உணடாகிறது. தன்னுடைய ஏகபோக உரிமையில பஙகுபோட வேறொருததி வந்துவிட்டதை அறிந்து நெஞ்சம் தடுமாறுகிறாள்.

ஒரு நாள் தாய் சரோஜாவுக்குப் பால் கொடுத்துக் கொணடிருப்பதைக் கண்ணம்மா பாாத்துவிட்டாள். உடனே அவளைத் தள்ளிவிட்டுத தான் மடியில் உடகாாந்துகொணடு பால் குடிகக விரும்பினாள. ஆனால் அவள் செய்கை எங்களுக்கு ஆசசரியமாக இருந்தது.

இந்தப் பொருமைத் தீயை வளர்ப்பதில பெற்ருேரகளும் பந்துககளும் மற்றவாகளும் பல விதஙகளில தம்மை அறியாது உதவி செய்கிருாகள.

தாய் கணணம்மாளுக்குப் பாலன்னம் ஊட்டுகிருள். அவள உணண மறுததால, உடனே, 'இந்தா சரோஜா, நீ வா, உனக்குக கொடுககிறேன. அககாவுககுக கொடுகக விலலை' என்கிருள தாய. கணணம்மா சட்டெனறு சாப்பிட ஆரம்பிககிருள. உணவோடு பொருமையும் கலந்து செலகிறது.

'கணணம்மா, ஜடை போட்டுககொளள மாட்டாயா? சரி, புது ரிப்பனைச் சரோஜாவுககு வைதது விடுகிறேன், உனக்கிலலை.'

'சரோஜாதான் சமாதது; நலல குழந்தை நீ மோசம்.'

'கோயிலுக்கு அவளைததான் கூட்டிக்கொணடு போவேன்; நீ வேணடாம்.'

இப்படியெலலாம் சொலலி நாம் விரும்பியதைக் குழந்தை செயயும்படி தூணடுகிருேம. காரியம் கைகூடு கிறது. ஆனால, குழந்தைகளிடையே பொருமையும் பகைமையும் உண்டாவதை நாம் கவனிப்பதிலலை.

பல தடவைகளில இரணடு குழந்தைகளின் திறமை மையையும், புததிக் கூாமையையும் ஒப்பிட்டு வெளிப் படையாக அவாகளை வைததுககொணடே பேசுகிருேம்; பந்துககளிடம் சொலலுகிருேம். குழந்தைகள் அவற்றை யெலலாம் கேட்டுக்கொண டிருககின்றன.

பெற்ருேர்கள ஒரு குழந்தையிடம் ஏதாவது ஒரு காரணததால 'விசேஷ அன்பு காட்டுவதும் உணடு. அதை மற்றக குழந்தை அறிந்து மனத்திற்குள்ளேயே நலிகிறது.

குழந்தையிடம் அதன் கடமையைப் பற்றியும் சகோதர சகோதரிகளிடத்தில் அன்பு காட்டவேணடும்

என்பதைப்பற்றியும் உபந்நியாசம் செய்யக்கூடாது. அதைக் குழந்தை அறிந்துகொள்ளாது. தன்னிடம் உள்ளதை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ள வேண்டு மென்ற நியாயம அதற்குத் தெரியாது. அதைப்பற்றிப் பிரசங்கம் செய்தால், மற்றவாகளிடம் அதற்கு வெறுப் புததான் உணடாகும்.

கணணம்மாளும் சரோஜாவும் நடந்துகொள்வதைப் பற்றிய எனது குறிப்புக்களில மூன்றை இஙகே உதாரணமாகத தருகிறேன.

இரணடு பேருககும பொம்மை வாங்கி வந்தேன். இரணடும் ஒரே மாதிரி வேணடாம் என்று நினைத்து வேறு வேறு பொம்மை வாஙகிவிடடேன். வந்தது ரகளை. ஒன்றே வேணடுமென்று இருவரும் கேடடாா கள். ஒரே அழுகை. மற்றப் பொம்மையின் அழகை யெலலாம் ஒவவொருத்திககும் எடுததுச் சொன்னேன். 'இந்தா இதுதான் ரொம்ப நலலது; நலல பாப்பா இது' என்று ஆசை காடடினேன்.

'வேணடாம் போ; அதுதான் வேணும்' என்று இரணடு பேரும் ஒரே பதில கொடுததாாகள். இனி மேல் இரணடு பேருககும் ஒரே விதமான பொம் மையோ துணியோ எதுவும் வாங்குவது என்று முடிவு செய்தேன்.

விளையாடுவதற்கு இருவருக்கும் இரு சிறு தொட் டிலகள் உணடு. ஆனால் இன்று இருவருக்கும் ஒரே தொடடிலின்மேல் ஆசை வந்துவிட்டது; கூச்சல், கண் ணீர். 'இது அவளுடையது; இது என்னுடையது' என்று சொல்லிக்கொண டிருந்ததெல்லாம் போய் விடடது. குழந்தை உள்ளங்கள் ஒன்றிலேயே லயித்து விட்டன.

அந்தச் சமயத்தில், 'கண்ணம்மா, எனக்கு அந்தத் தட்டத்தை எடுத்துக்கொடுக்கிறாயா? காய் அறுத்து

வைக்கலாம்' என்று தாய் கூப்பிட்டாள். கண்ணம்மா தொட்டிலை விட்டுவிட்டு வேகமாக ஓடிவிட்டாள்.

பெரிய குழந்தையை (வயது $4\frac{1}{2}$) இந்த மாதிரியான சிறு வேலைகளில் உதவி செய்யும்படி விநயமாகக் கேட்டால், அதற்கு வெகு சந்தோஷம். அம்மாளுக்கு உதவி செய்வதில் அதற்குத் தொட்டிலாட்டுவதைவிட அதிக இன்பம் இருக்கிறது.

'அப்பா எனக்குப் புண்ணு, பாரு' என்றாள் சரோஜா.

'அப்பா எனக்கும் புண்ணு!' என்று சொல்லிக் கொண்டு வந்தாள் கண்ணம்மா.

'எனக்கு இத்தனை புண்ணு!' என்று ஒரு கையை விரித்தாள் இளையவள்.

'எனக்கு இத்தனை புண்ணு' என்று இரண்டு கையையும் விரித்தாள் மூத்தவள்.

இதில்கூட ஒருவருக்கொருவர் தோல்வியடையக் கூடாதாம். தானே உயர்த்தி என்று எதிலும் இருக்க வேண்டுமாம்.

'காலெல்லாம் அழுக்கைப் பாரு. சுத்தமாக இருந்தால் புண்ணே வராது' என்றேன் நான். ஆனால் நான் ஒருத்திபேரிலும் குறை சொல்லவில்லை; பொதுவாகச் சொல்லி நிறுத்திக்கொண்டேன்.

ஒரே மூச்சில் இரண்டு பேரும், 'அப்பா, எனக்குப் புண்ணெல்லாம் ஆறிப்போச்சு. நான் அழுக்கில்லை' என்றார்கள்.

உடன்பிறந்தவர்களுக்குள்ளே பொறாமையும் பகைமையும் உண்டாகாதவாறு பெற்றோர்கள் ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். அவற்றை வளர்க்க எவ்வகையிலும் சந்தர்ப்பம் அளிக்கக் கூடாது. எல்லாக் குழந்தைகளையும் ஒரே மாதிரி அன்போடு நடத்தவேண்டும்.

அவர்களைப் பற்றி உயர்வு தாழ்வு சொல்லக்கூடாது. அவர்கள் ஒருவர்மேல் ஒருவர் அன்பு கொள்ளவும், பரஸ்பரம் உதவி செய்துகொள்ளவும், மற்றவருடைய சந்தோஷத்தைக் கவனிக்கவும் ஏற்ற மனப்பான்மை அடைய உதவவேண்டும். பெற்றோர்களின் அன்பு புதிதாக வந்த குழந்தையிடமும் செல்லுகிறது என்பதை மெதுவாக அதிர்ச்சியில்லாமல் மூத்த குழந்தை உணரும்படி செய்யவேண்டும்.

சில தாய்மார்கள் கைக்குழந்தைக்கு மூத்த குழந்தையின் முன்னால் பால் கொடுக்கமாட்டார்கள். காரணம் கேட்டால், 'பெரியது ஏங்கிப்போகும்' என்பார்கள். இம்மாதிரி ஒவ்வொரு விஷயத்தையும் ஆலோசித்து நடந்தால் குழந்தை, தன் உடன் பிறந்தவர்களிடம் ஆழ்ந்த அன்புகொள்ள ஏதுவாக இருக்கும்.

வீட்டில் ஒரே குழந்தையாக இருந்தால் அது தன்னையே பெரிதாக எண்ணிக்கொள்கிறது. பெற்றோர்கள் தனக்கு எல்லாக் காரியங்களும் செய்யவேண்டும் என்று எதிர்பார்க்கிறது. பிரியத்தால் பெற்றோர்கள் அப்படிச் செய்கிறார்கள். அதனால் சமூகத்தில் மற்றவர்களுடன் பழகி வாழும்போது சிரமம் ஏற்படுகிறது. பள்ளிக்குப் போனால் எல்லோரும் தன்னையே கவனிக்கவேண்டுமென்று எதிர்பார்த்து ஏமாற்றமடைகிறது. அதனால் வாழ்க்கையில் அது சங்கடப்படுகிறது.

பல குழந்தைகள் ஒரு வீட்டிலிருந்தால் அவை சமூகத்திற்கு அவசியமான பல அநுபவங்களை வீட்டிலேயே பெறுகின்றன. பிறரிடம் அன்பு காட்டுதல், உதவி செய்தல் முதலியவற்றிலும் பயிற்சியடைகின்றன. இவையெல்லாம் நல்லவையே. அதே சமயத்தில் பொறாமை, பகைமை முதலிய உணர்ச்சிகளும் வராமல் நாம் செய்துவிட முடியுமானால் மிக நல்லதல்லவா?

## ௬

# அழுகை

பிறந்தவுடன் குழந்தை அழுகிறது. அதைக் கேட்டு அப்பொழுது அனைவருக்கும் மனத்தில் ஒரு திருப்தி ஏற்படுகிறது. 'குழந்தை சுகமாகப் பிறந்திருக்கிறது; நன்றாக அழுகிறது' என்று சொல்கிறார்கள்.

பிறந்தவுடனே குழந்தை அழுவானேன்? அதற்கு என்ன காரணம்?

'தேவர்களோடு பழகிக்கொண்டிருந்துவிட்டு இப்பொழுது இந்த மண்ணுலகிற்கு வந்துவிட்டேனே' என்று குழந்தை வருந்தி அழுகிறதாகச் சிலர் வியாக்கியானம் செய்வார்கள்.

குழந்தை பிறந்தவுடன் சுவாசிக்க ஆரம்பிக்கிறது. முதலில் உள்ளே இழுக்கிற மூச்சு வெளியில் வரும்போது சப்தம் உண்டாகிறது. இதுவே குழந்தையின் முதல் அழுகையாகச் சொல்லப்படுகிறது. பிறந்ததும் குழந்தை சிரமமின்றி நன்கு சுவாசித்துக்கொண்டிருந்தால் எல்லோருக்கும் திருப்திதானே உண்டாகும்? அதனால்தான் முதல் அழுகையைப்பற்றி, 'குழந்தை நன்றாக அழுகிறது' என்று அதன் ஆரோக்கியத்தின் அறிகுறியாகப் பேசுகிறோம்.

குழந்தை இந்த அழுகையையே தனது ஆரம்ப பாஷையாக உபயோகப்படுத்திக்கொள்கிறது. ஏதாவது ஒருவிதத் துன்ப உணர்ச்சி மேலிடும்போதெல்லாம் இம்மாதிரியே குரல்கொடுத்து அதைப் பிறருக்கு வெளிப்படுத்துகிறது.

அழுவதால் குழந்தை தனக்கு வேண்டியதை அடைகிறது. அதனால் மறுபடியும் ஏதாவது அவசியமான

பொழுது குழந்தை அதேமாதிரி சப்தமிட ஆரம்பிக்கும்.

குழந்தைக்குப் பசி என்று வைத்துக்கொள்வோம். அதை எப்படித் தாய்க்குத் தெரிவிப்பது? குழந்தைக்கோ பேச்சு வராது; அதனால் அழுகிறது. அழுகைப் பாஷையால் அதற்கு வேண்டியதை அது பெற்றுக்கொள்கிறது.

குழந்தைக்கு உடம்பில் ஏதாவது ஒரு வலி: படுக்கை உறுத்துகிறது; அல்லது அதற்குக் குளிர் தாங்க முடியவில்லை. எல்லாவற்றையும் இந்த ஒரே பாஷையால்தான் தெரியப்படுத்துகிறது. அதனால் குழந்தை அழுகிறபோதெல்லாம் அதற்குப் பசி என்றோ வேதனை என்றோ கோபமென்றோ நினைத்துக்கொள்ளக்கூடாது; பயந்து அழுகிறது என்றும் தீர்மானிக்கலாகாது. அழுகையின் காரணத்தைக் கண்டுபிடித்துக்கொள்வது பூங்குழந்தை விஷயத்தில் அவ்வளவு எளிதல்ல.

மூன்று வாரங்கூட நிரம்பாத பசசைக் குழந்தை அழுகிறது. 'அடீ, குழந்தை அழுகிறதே, எடுத்துப் பால் கொடு' என்கிறாள் பாட்டி. அவளுக்கு எப்பொழுதும் குழந்தைக்கு உணவு கொடுத்து அதை வளர்ப்பதில் தான் நினைவு.

பால் கொடுத்தாய்விட்டது; ஆனால் அழுகை நிற்கவில்லை. இன்னும் குழந்தை அழுதுகொண்டே இருக்கிறது. 'வயிறு வலிக்கிறதோ என்னவோ? கொஞ்சம் விளக்கெண்ணெய் தடவி வயிற்றை நீவலாமா?' என்கிறாள் ஒருத்தி.

'தலை வலிக்கிறதோ என்னவோ?' என்கிறாள் வேறொருத்தி.

'பயந்துகொண்டதோ என்னவோ? நேற்று முந்தினநாள் இடி இடித்தபோது வீல் என்று கத்திவிட்டது. கொஞ்சம் விபூதி மந்திரித்துவரச் சொல்லவேணும்'

'இந்தக் குழந்தை எதற்கெடுத்தாலும் இப்படித் தான் அழுகிறது. ரொம்பக் கோபக்காரனாக இருக்கிறானம்மா!''

இந்த மாதிரி அதன் அழுகைக்குக் காரணம் கண்டு பிடிக்க முயலுகிறோம். ஆனால் உண்மையான காரணம் இதுதான் என்று நிச்சயமாகத் தெரிவதில்லை..

குழந்தைக்குப் பேசத் தெரிந்தால் அதன் மனத்தில் உள்ளதை நமக்குச் சுலபமாகப் புரியும்படி தானே சொல்லும்? அதற்கு இப்பொழுது அழுகை ஒன்றுதான் பாஷை; அந்தப் பாஷையிலேயே பல உணர்ச்சிகளை வெளிப்படுத்த வேண்டியிருப்பதால் எதுவென்று தெரிந்துகொள்வது கடினமாகிறது. அதற்கு ஏதோ ஒரு வகையில் அதிருப்தி என்பதுமட்டும் நமக்குத் திட்டமாகத் தெரிகிறது. சந்தோஷமும் திருப்தியும் இருந்தால் அழாது. ஆனால், என்ன அதிருப்தி என்றுதான் தெரிவதில்லை. பசியா, உடம்பில் வலியா, கோபமா, பயமா? - எது என்று கண்டுகொள்ள முடிவதில்லை. சிறு குழந்தையை வளர்க்கும்போது இம்மாதிரிச் சங்கடங்கள் நேருகின்றன.

பூங்குழந்தை எதனால் அழுகிறது என்பதை நிச்சயமாகக் கண்டுபிடிக்க ஏதாவது வழி உண்டா? இதைப் பற்றி நடந்த சோதனை ஒன்றைக் கவனிப்போம்:

ஷெர்மன் என்பவர் மூன்று வாரங்கூட நிரம்பாத குழந்தைகளை வைத்துக்கொண்டு ஆராய்ச்சி ஒன்று நடத்தினார். பசி, வலி, பயம், கோபம் முதலிய உணர்ச்சிகள் அவற்றிற்கு உண்டாகச் செய்தார். சில குழந்தைகளுக்குப் பால் கொடுக்காமல் பட்டினி போட்டார்; சிலவற்றை ஊசியால் குத்தினார்; இன்னும் சிலவற்றை இரண்டு, மூன்றடி உயரத்திலிருந்து விழச் செய்தார். சிலவற்றிற்குக் கோபம் உண்டாகும்படி அவற்றின் கையையோ தலையையோ அழுத்திப் பிடித்துக்கொண்டார்.

இவற்றால் வருந்திய குழந்தைகளின் முகச் சுளிப்
பையும் உடல் நெளிப்பையும் இதர செய்கைகளையும்
சினிமாப்படமாகப் பிடித்துப் பல பேர்களுக்குக் காண
பித்தார். படத்தைப் பார்த்துவிட்டு என்ன காரணத்
தால குழந்தை அப்படிச் செய்கிறது என்று திட்ட
மாகச சொல்ல முடிகிறதா என்று பார்க்கவேண்டும்
என்பதுதான் அவர் எண்ணம். ஆனால், பார்த்தவர்கள்
இன்ன உணர்ச்சியாலதான் குழந்தை முகத்தைச்
சுளித்துக்கொண் டிருக்கிறது என்று ஒரு முடிவாகச்
சொல்ல இயல விலலை. அவர்கள் முடிவுகள ஒன்றுக்
கொன்று மாறுபட்டிருந்தன. ஆதலால, முகக்குறிப்பு,
உடம்பின் அசைவு இவற்றால் உணர்ச்சியை அறிய
முடிவதிலலை என்று ஷொமன் அபிப்பிராயப்படுகிறார்.

அவரே மற்றொரு சோதனை நடத்தினார். இந்தத்
தடவை அழுகையிலிருந்து உணர்ச்சியைக் கண்டுபிடிக்க
முடியுமா என்று பரிசோதித்தார். சோதனையில் தங்கள்
அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படியாகப் பொறுக்கி
எடுக்கப்பட்டவர்களில் குழந்தைகளை வளர்ப்பதில் அனு
பவம் வாய்ந்த பெண்களும் இருந்தார்கள். ஆனால், அவர்
கள் எல்லோரும் திரை மறைவில இருந்தார்கள். அழு
கைக்குரல மட்டுமே அவர்களுக்குக் கேட்டது. பழைய
படியே பசி, பயம், கோபம் முதலிய உணர்ச்சிகள்
உண்டாகுமாறு பாவம் அந்தப் பூங்குழந்தைகளை
ஹிம்சை செய்தார் ஷொமன்.

முடிவு என்னவாயிற்று? ஒவ்வொருவரும் அழுகை
யின் காரணத்தைப்பற்றித் தம் முடிவைத் தனித் தனித்
துண்டுக் காகிதத்தில் எழுதிக் கொடுத்தார்கள்.
அவர்கள் அபிப்பிராயங்கள் ஒன்றுக்கொன்று மாறு
பட்டே இருந்தன.

இந்தச் சோதனையும் நல்ல பலன் அளிக்கவில்லை.
இருந்தாலும் குழந்தையின் அழுகை, முகக் குறிப்பு
இவற்றிலிருந்தும் அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க

முடியும் என்று சிலர் கருதலாம். சில சமயங்களில் அது சாத்தியமாகவும் இருக்கும். இங்கே பேசுவதெல்லாம் இரண்டு மூன்று வாரங்களே ஆன குழந்தைகளைப்பற்றித் தான். இவைகளின் விஷயத்தில அவ்வளவு திட்டமாகச் சொல்லமுடியாதென்பதே அறிய வேண்டிய உண்மை.

குழந்தையைப் பற்றிய ஆராய்ச்சியில் ஒரு விஷயத்தை நாம் எப்பொழுதும் மறக்கக் கூடாது. குழந்தை கேவலம் ஜடவஸ்து வல்ல; ஒவ்வொன்றும் ஒரு தனித்தன்மை வாய்ந்தது. அதனால் அதைப்பற்றிய சோதனையின் முடிவுக்கு மாறுபட்டதாக, குறிப்பிட்ட குழந்தைகளிடம், செயகைையக் காணலாகும். பொதுவான உண்மைகளைப்பற்றியே இஙகே பேசுகிறோம்.

குழந்தைக்கு ஒரு மாதம் ஆன பிறகு அதன் அழுகையில் ஒவ்வோர உணாசசிககும் தகுந்தபடி வித்தியாசம் ஏற்பட ஆரம்பிக்கிறது என்றும், ஆறு மாதங்களுக்குப் பிறகு அதன் முகக்குறிப்பிலும் உடம்பின் அசைவுகளிலும் உணாசசிககுத் தக்கவாறு வேறுபாடுகள் நன்கு காணகின்றனவென்றும் பியூலா, கெஸல என்ற அறிஞர்கள் கூறுகிறார்கள். பய உணாச்சியைக் காணபிககும் அறிகுறிகள் மடடும் முதல் மாததநிற்குப் பிறகு தெளிவாகத தெரிகின்றனவாம். அது தற்காப்பு உணாச்சியல்லவா?

குழந்தை வளர வளர, அதன் பேசும் திறமை அதிகரிககிறது. அப்பொழுது அது தன் உணர்ச்சியைத் தெரிவிக்க அழுவதை விட்டுவிட்டு வேறு வழிகளைக் கையாளவேணடும். அழுவது தாழ்வென்றும் அது உணரவேண்டும். பெற்றோாகள் இதற்குப் பெரிதும் உதவி செய்யலாம். சில குழந்தைகள் எதற்கெடுத்தாலும் அழும். 'அழுதால்தான் காரியம் கைகூடுகிறது; பெற்றோாகள் கவனிப்பார்கள்' என்ற மனப்பான்மையை நாம் வளரவிடக்கூடாது. அழுகை பூங்குழந்தையின் பாஷை. குழந்தை பெரிதாக ஆக இது மாற வேண்டும்.

# 7

# தாயும் தந்தையும்

குழந்தை அழுதுகொண்டு வருகிறது. 'ஏன் அழுகிறாய்?' என்று தந்தை கேட்கிறார். 'அம்மா மிட்டாய் கொடுக்கமாட்டேங்கறா' என்று தேம்புகிறது குழந்தை.

'அழாதே, நான் கொடுக்கிறேன்' என்று மிட்டாய் எடுத்துக் கொடுக்கிறார் தந்தை. அவர் அதோடு நிற்பதில்லை. 'ஏண்டி, என் குழந்தைக்குக் கொடுக்க மாட்டேன் என்கிறாய்?' என்று தாயைக் கேட்கிறார்.

இன்னொரு சமயம் குழந்தை செய்வது தந்தைக்குப் பிடிப்பதில்லை. அதனால் அவருக்குக் கோபம் வந்துவிடுகிறது. குழந்தையை அதட்டுகிறார். தாய் ஓடிவந்து, 'ஏன் குழந்தையை இப்படி மிரட்டுகிறீர்கள்? அதற்கென்ன தெரியும்?' என்று பரிந்து பேசுகிறாள்.

இப்படித் தந்தையும் தாயும் மாறி மாறிக் குழந்தையிடம் பரிவுகாட்டுவது அதற்குச் சரியான பழக்கத்தையோ மனப்பான்மையையோ உண்டாக்க உதவி செய்யாது.

குழந்தை அழுகிறதே என்று மட்டும் நினைக்கிறோமே ஒழிய, அதற்குச் சரியான பழக்கத்தை உண்டு பண்ணுகிறோமா என்பதை அந்தச் சமயத்தில் மறந்துவிடுகிறோம்.

காலையில் எழுந்தவுடன் மிட்டாய் சாப்பிடக் கூடாது என்றால், தாயும் தந்தையும் இதை ஒரே மாதிரி குழந்தைக்கு நயமாக உணர்த்தவேண்டும். தாய் கொடுக்கவில்லை என்று குழந்தை அழுதால், தகப்பன் மிட்டாய் கொடுத்தானால் குழந்தைக்கு யார் செய்வது

சரி என்று தெரியாமல் போய்விடுகிறது. 'இந்நேரத்தில் மிட்டாய் சாப்பிடக்கூடாது' என்று தகப்பனும் அதற்குச் சொல்லிச் சமாதானம் செய்திருந்தால் குழந்தை தெளிவாக அதை அறிந்துகொள்ளும்.

இதுமாதிரி விஷயங்களில் தாயும் தகப்பனும் ஒரே மாதிரி நடக்கவேண்டும். ஏதாவது ஒன்றில் தமக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டாலும் அதைத் தனியாகப் பேசி ஏகோபித்த முடிவுக்கு வரவேண்டும். குழந்தையிடம் நடந்துகொள்ளும்பொழுது இருவரும் ஒரே மாதிரி நடக்கவேண்டும்.

ஒருவர் குழந்தையைக் கண்டிக்கும்போது மற்றொருவர் குழந்தையின் பக்கம் சேர்ந்துகொண்டால் குழந்தைக்கு எவ்வித அறிவும் ஏற்பட முடியாது. உள்ளத்தில் கலக்கமே ஏற்படும்.

அதனால் தாயும் தந்தையும் எந்தச் சமயத்திலும் தங்கள் தீர்மானப்படியே கண்டிப்பாக நடந்துகொள்ள வேண்டுமென்று நான் கூறவில்லை. சில சமயங்களில் குழந்தையின் போக்குக்கு இணங்கவும் வேண்டும். ஆனால் பொதுவாக அன்பு என்னும் சூழ்நிலையிலே குழந்தையை வளர்க்கும்போது தாயும் தந்தையும் ஒரே மனதாக இருந்தால்தான் அவர்களுடைய கடமையில் அவர்கள் பெரியதொரு வெற்றியை அடைய முடியும்.

தாயும் தந்தையும் மாறி மாறிக் குழந்தையின் பக்கம் சேர்ந்துகொள்வார்களானால் அதையே உபயோகப்படுத்திக் குழந்தை தனக்கு இஷ்டமானபடி நடக்க முயலும். இது விரும்பத்தக்கதல்ல.

பெற்றோர்கள் ஒரு மனதாக வாழ்வதால் அவர்களுடைய வாழ்க்கை இன்பகரமாக அமைவதோடு குழந்தையின் வளர்ச்சிக்கும் அது மிகவும் ஏதுவாக இருக்கிறது. மனத்தாங்கல், சச்சரவு முதலியவை இல்லாத அமைதியும் அன்பும் வாய்ந்த வீடே இள உள்ளத்தில் ஒரு நல்ல உணர்ச்சியை உண்டாக்கும்.

இருவரும் தங்கள் நடத்தை, பேச்சு முதலியவற்றால் குழந்தைக்கு முன்மாதிரியாக இருக்கவேண்டும். குழந்தை பிறரைப் பார்த்தே பல விஷயங்களைச் செய்து பழகிக்கொள்கிறது. அதிலும் சதா நெருங்கிப் பழகும் தாய தந்தையரின் செய்கை அதற்கு மிகவும் பிடித்தமானதாக இருக்கும். ஆதலின், குழந்தை சுத்தமாக இருக்க வேண்டுமானால் பெற்றோர்கள் சுத்தமாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அது குழந்தையிடமும் அமையும்.

தாயும் தந்தையும் பிறரிடம் அன்புடனும் மரியாதையுடனும் எப்பொழுதும் நடந்தார்களானால், குழந்தையும் அப்படியே நடக்கும்; பேச்சிலும் அப்படித்தான்.

அண்டை வீட்டிலே ஓர் அம்மாள் குடியிருந்தாள். நல்ல வேளை, அவள் இப்பொழுது இல்லை; அதனால் தான் தைரியமாக வெளியிடுகிறேன். அவளைக் கண்டால் மற்றப் பெண்கள் அதிகமாகப் பயப்படுவார்கள். அவள் போடுகிற சப்தமும் சண்டையும் அவ்வளவு பீதியை உண்டாக்கி விட்டன. அவளுடைய மகளுக்குச் சுமார் ஏழு வயது இருக்கும். ஒரு நாள் அந்தப் பெண் ஒரு பிச்சைக்காரக் கிழவியைத் திட்டுவதை நான் கேட்டுக் கொண்டிருந்தேன். அசல் அம்மாள்போலவேதான். அப்பா! அந்தச் சிறுமியின் வாயில் என்ன என்ன வார்த்தைகள் வருகின்றன!

இதனாலேதான் குடும்ப வாழ்க்கையில் சில வேளைகளில் வேலைக்காரியையோ மற்றவர்களையோ கடிந்து கொள்ள நேரிட்டால், குழந்தை அந்த இடத்தில் இல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள்.

தாயும் தகப்பனும் பிறரிடம் மரியாதையாகவும் அன்பாகவும் நடந்துகொள்வதுபோலவே தமக்குள்ளும் அன்புடனும் மரியாதையுடனும் நடந்துகொள்ள

வேண்டும். தகப்பன் தாயிடம் மரியாதையாகவும் அன்புடனும் நடப்பதைக் கண்டு மகனும் மகளும் அவ்வாறு நடக்கப் பழகிக்கொள்வார்கள்.

பெற்றோர்கள் தங்கள் உள்ளங்களை ஒருவருக்கொருவர் வெளியிட்டுக்கொண்டு, இருவர் சிரமங்களையும் அறிந்து நடப்பார்களானால், குழந்தையும் அதே மாதிரியான மனப்பான்மையை அடையும். தாயும் தகப்பனும் எந்தக் கஷ்டத்திலும் தனக்கு உற்ற துணையாவார்கள் என்று அதற்குத் தோன்றும்.

அவ்வாறானால் வயது வருகின்ற காலத்தில் குழந்தை தன் மனத்தில் பிறக்கின்ற பலவகையான உணர்ச்சிகளையும் அவர்களிடம் மறைக்காமல் சொல்லி ஏற்றதைச் செய்ய உதவியை நாடும். பெற்றோரிடம் பய உணர்ச்சியோ அலக்ஷ்ய புத்தியோ ஏற்படாமல் இளம் பருவம் முதற்கொண்டே தோழமை உணர்ச்சியும் வாழ்க்கையில் தனக்கு வேண்டிய நல்ல யோசனைகளை அவர்களிடம் பெறலாம் என்ற நம்பிக்கையும் குழந்தைக்கு ஏற்பட வேண்டும்.

இது தாய் தந்தையரின் நடத்தையைப் பொறுத்தே இருக்கிறது.

# 8

# அன்பு காட்டுதல்

குழந்தையிடம் இயல்பாகவே தாய தந்தையர்களுக்கு அதிக அன்பு பிறககிறது. சில பெறறோாகள் அந்த அன்பைக குழந்தையிடம் வெளிப்படையாகவே காடடுகிறாகள சிலா, 'நமது அன்பை வெளியில காடடககூடாது; அப்படிச் செயதால பையன் கெடடுப் போவான்' என்கிறாகள்.

'எதிரவீடடுப பையனைப் பாா. அவனை ரொம்பச் செல்வமாக வளாததாாகள. அவன் இஷ்டம்போலவே விடடுவிடடாாகள். அதனாலதான இப்படிக கெடடுக குட்டிச் சுவராகப போனான்' என்று பேசுவதை நாம் கேடடிருக்கிறோம்.

இன்னும் சில பெற்றோாகள் குழந்தையிடம் மிகக் கணடிப்பாக இருககிறாாகள். அவாகளுககு அன்பு இருக்கலாம்; ஆனால தம் குழந்தை அதன் வாழ்க்கையில மிகச சிறப்படைய வேணடுமென்ற ஆாவததால் கடுமையாக நடககிறாாகள். அவாகளுககுத் தன்மேல் அன்பு இருககிறதா என்றுகூடக குழந்தை சந்தேகப் படும்படியாக நடந்துகொள்கிறாாகள்.

குழந்தையிடம் மிகவும் பிரியமாக நடந்து கொளளும் பெற்றோருக்கே பல தடவைகளில் தங்கள் நடத்தையைப்பற்றிச் சந்தேகம் வந்துவிடுகிறது. சரோஜா ஒரு நாள் மேஜைமேல உடகாாந்துகொணடு தொந்தரவு செயதாள். கீழே எடுத்து விடடால் ஒரே அழுகையாக ஆரம்பித்து விடடாள. என்ன சொல்லியும் சமாதானம் அடையவிலலை. எனக்கு அன்று அதிக

வேலை இருந்தது. என்ன செய்வது? தாய் வந்தாள். அவளும் என்னவோ சொல்லிப் பார்த்தாள். பயன் இல்லை. 'முன்னமேயே கொஞ்சம் மிரட்டிவைத்திருந்தால் இப்படிப் பிடிவாதம் செய்வாளா? எல்லாம் நீங்கள் கொடுக்கிற செல்லம்' என்று என்மேல் குறைகூற ஆரம்பித்தாள்.

குழந்தை வளர்ப்பில் நாம் எப்படி நடந்துகொள்ள வேண்டுமென்பது ஒவ்வொரு நாளும் ஒரு பிரச்சினையாக இருக்கிறது.

தாய் தந்தையர் அதிக அன்பு செலுத்துவார்களானால் குழந்தை அதைச் சீக்கிரம் உணர்ந்துகொள்கிறது. அன்பினால் எதையும் தன் இஷ்டப்படி விட்டுவிடுவார்கள் என்று அறிந்தவுடன், குழந்தை அதைப் பூரணமாக உபயோகப்படுத்திக்கொள்கிறது. இந்த மாதிரி வளர்ந்த குழந்தை பிற்கால வாழ்க்கையில் இம்மாதிரி அன்பையே பிறரிடமும் எதிர்பார்த்து ஏமாற்றமடையும் என்று முன்பே கண்டோம்.

அன்பினால் சில பெற்றோர்கள் எப்பொழுது பார்த்தாலும் குழந்தைமேலேயே கவனம் செலுத்துகிறார்கள்; அதைப்பற்றியே கவலை; அதற்கு ஏதாவது தீங்கு நேர்ந்துவிடுமோ என்று பயம் கொள்ளுகிறார்கள். இவைகள் குழந்தையின் வளர்ச்சிக்கு உகந்தவையல்ல. இவற்றால் குழந்தை தன்னம்பிக்கை, துணிச்சல் முதலிய குணங்களைப் பெறாமல் போகும். அதன் வாழ்க்கைக்கு வேண்டிய இன்றியமையாத பல அநுபவங்களை அடையவும் இவை உதவி செய்யா.

குழந்தைக்கு நோய் வந்துவிட்டால் சில பெற்றோர்கள் ஒரே கவலையும் பதட்டமும் அடைகிறார்கள். அதனால் குழந்தையின் உள்ளம் பாதிக்கப்பட்டு, அது தானாகவே நோயைச் சமாளிக்கும் சக்தியைப் பெறாது போய் விடுகிறது. குழந்தையின் வன்மையும் குறைகிறது.

பெற்றோர்களுக்கு நிதானமும், தம்மை அடக்கும் சக்தியும் வேண்டும். அன்பு என்றாலும் அது கண்மூடித் தனமாக எல்லை கடந்துபோனால் அதனால் குழந்தைக்குத் தீங்கே ஏற்படும் என்பதை அவர்கள் உணர வேண்டும்.

குழந்தை பிணியால் நலிகின்ற காலத்தில் அதனிடம் சற்று அதிகமாகவே அன்பும் ஆதரவும் காட்ட வேண்டியதுதான். ஆனால், இந்த அன்பானது தாயைக் கவலைக் குழியிலே தள்ளிவிடுமானால் அதனால் குழந்தைக்கு ஏற்படும் தீமை நோயால் ஏற்படுவதைவிட நீடித்திருக்கும் என்று அறிஞர்கள் சொல்லுகிறார்கள்.

உள்ளத்திற்கும் உடலுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருப்பதை இன்று வைத்தியர்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள். ஒருவனுக்கு வியாதி கண்டு நிலைமை நெருக்கடியாக மாறுகின்ற காலத்திலும், 'அவன் குணமடைவான்; வாழவேண்டுமென்ற தீவிர உணர்ச்சியோடு அவன் நோயைச் சமாளித்துக்கொண்டிருக்கிறான்' என்று வைத்தியர்கள் கூறுகிறார்கள்.

மனம் உடம்பைப் பாதிக்கிறது என்பதைச் சாதாரணமாகவும் நாம் காண்கிறோம். பய உணர்ச்சி தோன்றும்போது இருதயம் வேகமாக அடிக்கிறது; மேலெல்லாம் வேர்த்துப் போகிறது; சில சமயங்களில் பேசக்கூட முடிவதில்லை. கவலை வந்த காலத்தில் பசி உண்டாவதில்லை. இவையெல்லாம் சாதாரண அநுபவம்.

சில பெற்றோர்கள் சதாரண காலத்தில் தங்கள் அன்பை அதிகம் குழந்தையிடம் காட்டமாட்டார்கள். ஆனால் குழந்தை பிணியுற்றால அப்பொழுது அளவில்லாத அன்பு காட்டுவார்கள்; அதிகக் கவலையும் படுவார்கள். இம்மாதிரி நிலைமையில் குழந்தை தாய தந்தையர் தன் மேல் அதிக அன்பு காட்டவேண்டும் என்பதற்

காகவே தன்னையும் அறியாது நோய்வாய்ப்பட ஆரம்பிக்கும்.

'உணவு உட்கொள்ளவில்லையே' என்று பெற்றோர் கவலைப்படுவதை அறிந்தால் குழந்தை உணவு உட்கொள்ள ஒவ்வொரு தடவையும் தொந்தரவு கொடுக்கும். தன்னைப்பற்றிப் பெற்றோர் கவலைப்படுவதில் அதற்கு அதனை திருப்தி.

குளிர்காலத்தில் ஜலதோஷம் பிடித்துக்கொள்ளுமே என்று சில தாய்மார்கள் அதிகக் கவலைப்பட்டுக் கொண்டு குழந்தைகளைத் திறந்த வெளியில் போகாமல் தடுக்கிறார்கள். கம்பளி உடைகளை ஏராளமாக அணிவிக்கிறார்கள். இவையெல்லாம் அவசியமில்லை. ஓரளவு ஜாக்கிரதையாக இருக்கவேண்டியதுதான். ஆனால் குழந்தைக்கு அப்படிக் கம்பளி உடைகளே தேவையில்லை. நமது நாட்டுச் சீதோஷ்ண நிலைமைக்குச் சாதாரணப் பஞ்சாடையே போதும். இதை அறியாமல் வீண் கவலைப்படுவதாலேயே குழந்தை பிணி அடைய நேரிடும்.

குழந்தைகள் திறந்த வெளியில் ஓடியாடி விளையாடவேண்டும். திண்ணையிலிருந்து கீழே விழுந்து விடுமோ, வேறு விதமான தீங்கிற்கு உள்ளாகுமோ என்று சதா பெற்றோர் நினைத்துக்கொண்டிருப்பதாகக் குழந்தை உணர்ந்தால் அதன் இயல்பான வளர்ச்சி குன்றிவிடும்.

இம்மாதிரி அன்பினால் ஏற்படும் கெடுதல்களைப் பற்றிச் சொல்லும்போதே அறிஞர்கள் அன்பின் அவசியத்தைப்பற்றியும் பேசுகிறார்கள். அன்பினாலேயே குழந்தை வளரவேண்டும் என்கிறார்கள். அதை மிரட்டுவதோ அடிப்பதோ கூடவே கூடாது என்கிறார்கள். 'அன்பு, சிறிது அளவுகடந்து போனாலும் சரி, குறையக் கூடாது' என்று வற்புறுத்துகிறார்கள். மிரட்டி அடக்கிக் குழந்தைகளின் உள்ளத்தில் மிகுதியான குழப்பத்தை

யும் அந்தரங்க மனத்தில பல கோளாறுகளையும் உண்டாககிவிடக்கூடாது என்றும் சொல்கிறார்கள்.

குழந்தையிடம் நாம் சரியானபடி நடந்துகொண்டால் அதை மிரட்டவோ அடிக்கவோ அவசியமே இல்லை. அதற்கு நம்மிடததில் நம்பிககையும் பிரியமும் உணடாகும்படி செய்ய வேணடும். அப்பொழுது நாம் தவறு என்று சொலவதை அது செய்ய விரும்பாது.

இன்று எனக்கு வேலையில்லை. அதனால் சரோஜா மேஜைமேல ஏறுவதை நான் தடுப்பதில்லை. அவளோடு விளையாடுகிறேன். நாளைக்கு எனககு வேலை மிகுதியாக இருககுமானால அவளை மேஜைமேல ஏறககூடாது என்று சொலகிறேன். அவளுக்கு ஒன்றும் புரிவதில்லை. மேஜைமேல ஏறுவது தவருக இருந்தால என்றும் அப்படி இருக்கவேணடும் அலலவா? பிறகு அவளமேல் கோபிப்பதில என்ன லாபம்?

சில பெற்ருேர்கள் இப்படித் தங்களுக்குப் பிரியமாக இருக்கும்போது சில விஷயஙகளை அநுமதித்து விடுவாரகள். மற்ருெரு சமயம் அவற்றிற்காகவே குழந்தையைக் கணடிபபார்கள். இப்படிச் செய்தால் குழந்தை கலக்கமடைகிறது; பெற்ருேரிடமும் நம்பிக்கையை இழககிறது.

இவற்றையெலலாம் உணாந்து பெற்ருேர்கள் நிதானததோடும் தமமடக்கததோடும் குழந்தையிடம் அன்பும் ஆதரவும் காடடி அதை வளாக்கவேண்டும்.

௭

# உணவு

"இந்தாம்மா, இந்தக் கொஞ்சத்தையும் சாப்பிட்டுக்கோ. இந்தா, இவ்வளவுதான்; இனி இல்லே" என்கிறாள் தாய்.

"வேண்டாம் போ" என்கிறாள் கண்ணம்மா.

"இந்தாம்மா, நீ நல்ல பிள்ளேயாச்சே; இந்தாம்மா, நான் உன்னே மடிமேல் வச்சுக்கறேன் வா, இந்தா, இதைச் சாப்பிடு."

"ஊஹூம்; ஜன்னலுக்கு எடுத்துப்போனுல்தான் சாப்பிடுவேன்."

ஜன்னலுக்கு எடுத்துக்கொண்டு போகிறாள். "இங்கே வேண்டாம் வாசலுக்குப் போ."

வாசலுக்குப் போகிறாள்.

"கொஞ்சம் சாக்கரைபோட்டால்தான் சாப்பிடுவேன். இல்லாதபோனு வேண்டாம் போ."

இப்படியே ஒவ்வொரு வேளேயிலும் கண்ணம்மாளேச் சாப்பிடவைப்பது பெரிய சிரமமாக இருக்கிறது.

வேடிக்கைகாட்டுவது, நிலாக்காட்டுவது, பூனேயைக் கூப்பிடுவது இப்படியெல்லாம் செய்து குழந்தைக்குச் சோறு ஊட்டுவதை நாம் பார்த்திருக்கிறோம்.

ரெயிலுக்குப் போகலாம், இல்லாவிட்டால் மோட்டாரில் போகலாம் என்று குழந்தைக்கு ஆசை காட்டுவது முதலிய பல வழிகளேக் கையாளுகிறார்கள் தாய்மார்கள்.

இப்படிப் பராக்குக் காட்டி, வம்பு செய்து உணவு கொடுப்பது தவறான முறை என்று பண்டிதர்கள் சொல்கிறார்கள்.

குழந்தை சாப்பிடவில்லையே என்று தாய் கவலைப் படுவதை அது சுலபமாக அறிந்துகொள்கிறது. எப்படியாவது கொஞ்சம் சாப்பிடட்டும் என்று தாய் பராக்குக் காட்டுகிறாள்; ஆசை காட்டுகிறாள்; என்ன என்னவோ புதிய வழிகளைக் கையாளுகிறாள். இப்படி யெல்லாம் செய்து தன்னைப்பற்றியே நினைத்துக்கொண் டிருக்கட்டும் என்று அந்தக் குழந்தை ஆசைப்படுகிறது. தன்னையே எல்லோரும் கவனிக்கவேண்டுமென்று சின்னக் குழந்தைக்கு எண்ணமுண்டு. குழந்தை ஒரு வகையில் சுயநலம் அதிகமுடையது.

குழந்தை விளையாடிக்கொண் டிருக்கும். நீ அதைக் கவனியாமலிருந்தால் அது எப்படியாவது நீ அதன் மேல் கவனம் செலுத்தும்படி செய்துவிடும். அதற்குத் தன்னையே எல்லோரும் கவனிக்கவேண்டும் என்பதில் அத்தனை பிரியம்.

அதனால் குழந்தைக்கு உணவு கொடுப்பதில் முதலிலிருந்தே ஜாக்கிரதையாக இருக்கவேண்டும். தாயின் கவலை அதற்குத் தெரியக்கூடாது.

பசி இயல்பாக உண்டாகிறது. பிறகு குழந்தைக் குப் பிடித்த ருசியான உணவைக் கொடுத்தால் சாப்பிடு வதில் என்ன கஷ்டம் இருக்கிறது? குறிப்பிட்ட காலத் தில் அளவாக உணவு கொடுத்துக்கொண் டிருந்தால் குழந்தை ஒருவகையான தொந்தரவும் செய்யாமல் சாப்பிடும்.

குழந்தை சாப்பிடாமல் இருப்பதற்குச் சில காரணங்கள் உண்டு. (1) குறித்த காலம் ஒன்றும் இல் லாது நினைத்த வேளையில் உணவு கொடுப்பது. (2) ஜீரணிக்க முடியாத உணவைக் கொடுப்பது அல்லது

அளவுக்கு மிஞ்சிக் கொடுப்பது. (3) உணவு கொள்ளும் நேரத்திற்குச் சற்று முன்பாக மிட்டாய் முதலிய பக்ஷணங்களைக் கொடுப்பது. (4) குழந்தைக்குப் பிடிக்காத உணவை வற்புறுத்திக் கொடுப்பது.

பொதுவாகக் குறிப்பிட்ட காலங்களில உணவும் தின்பண்டங்களும் கொடுப்பது நல்லது. அப்பொழுது தான் ஜீரணம் சரியாக ஆகும்; பசியும் ருசியும் ஏற்படும்.

சாப்பிடும்போது அமைதியும் மகிழ்ச்சியும் நிலவ வேண்டும். உணவில் விருப்பம் உண்டாவதற்கும் ஜீரண சக்தி அதிகப்படுவதற்கும் அவை உதவுகின்றன. வற்புறுத்திச் சாப்பிடச் செய்வதால உணவில் ருசி குறைந்துவிடுகிறது.

சாப்பிடுவதற்கே இத்தனை தூண்டுதல் அவசியமானால் அந்தக் குழந்தை வேறு காரியங்களைத் தானே செய்ய எப்படிக் கற்றுக்கொள்ளப்போகிறது? ஆதலின் இவ்வுண்மையை மனத்தில் வைத்துக்கொண்டு குழந்தைக்கு உணவு கொடுக்கவேண்டும்.

# 10
# பால் மறத்தல்

குழந்தைக்குத் தாய்ப்பால் குடிப்பதில்தான் முதல் இன்ப உணர்ச்சி ஏற்படுகிறது. பாலின் சுவை, பசி தணிக்கும் தன்மை முதலியவற்றால் மட்டு மல்லாது, உண்ணுங் காலத்தில் குழந்தையின் வாயிலும் ஒருவித இன்பம் பிறக்கிறது. அதைக் குழந்தை நன்கு அநுபவிப்பதால் தாய்ப்பால் கொடுப்பதை அறவே நிறுத்தும்போது அதற்கு ஏக்கம் உண்டாகிறது.

சாதாரணமாகக் குழந்தைக்கு ஒன்பது அல்லது பத்து மாதம் ஆகின்ற காலத்தில் பால் கொடுப்பதை நிறுத்திவிடலாம். அவ்வாறு செய்யும்போது குழந்தைக்கு அதுவரையில் கிடைத்த இன்ப உணர்ச்சி தடைப்படுவதால் அதன் உள்ளத்தில் பல கோளாறுகள் உண்டாகச் சந்தர்ப்பம் நேரிடுகிறது. பால் மறக்கச் செய்வதை நயமாக முன் எச்சரிக்கையுடன் செய்தால் இக்கோளாறுகள் வராமல் தடுக்க முடியும்.

குழந்தை பிறந்ததிலிருந்தே இதற்கு அடி கோல வேண்டும். தாய், பால் கொடுக்கிறாள். குழந்தைக்காகப் பலவிதப் பணிகள் செய்கிறாள்; அதனிடம் அன்போடு பேசுகிறாள். அதன் சுகத்திற்காக எவ்வளவோ சிரமப் படுகிறாள். இவற்றால் இயற்கையாகவே குழந்தைக்குத் தாயிடம் அன்பு ஏற்படுகிறது. இவ்வாறில்லாமல் பால் உண்பதில்மட்டும் குழந்தை தாயிடம் இன்பம் காணுமாயின், அதன் அன்பு அவள் மார்போடு நின்று விடுகிறது. குழந்தைக்குத் தாயிடம் பரந்த அன்பு ஏற்படச் செய்யவேண்டும். பூங்குழந்தை மிகவும் சுயநலம்

கொண்டது என்று முன்பே சொன்னோம். அது தனக்கு இன்பம் கொடுப்பதைத்தான் விரும்பும். தாயின் மார்பகம் மட்டுமன்றி அவள் பேச்சு, பார்வை, செய்கை, அணைப்பு எல்லாம் இன்பம் கொடுப்பதை அது உணரவேண்டும். அப்பொழுது குழந்தை தாயிடம் விரிந்த அன்புகொள்ளத் தொடங்கும்.

பிறகு இந்த அன்பு தானாகவே மற்றவர்களிடமும் செல்ல ஆரம்பிக்கும்.

பால் மறக்கச் செய்வதற்கு அடிகோலுவதில் இது முதற் படி. ஆரம்பத்திலிருந்து குழந்தையின் தேக போஷணைக்கு ஏற்றவாறு குறிப்பிட்ட காலங்களில் பால் கொடுத்துவரவேண்டும். இப்படிச் செய்வதால் ஜீரணம் சரியாக ஆவதோடு குழந்தையின் மனவளர்ச்சிக்கும் இது உதவியாக இருக்கிறது. இடைவேளையில் ஒரு சமயம் குழந்தை பால் உண்ண விரும்பினால், சாக்கரை கலந்த ஜலம் கொஞ்சம் கொடுக்கலாம்.

ஐந்து அல்லது ஆறாவது மாதத்தில் பால் கொடுப்பதை ஒரு தடவை குறைத்துக்கொண்டு பசும் பாலை அதற்குப் பதிலாகக் கொடுக்கலாம். இப்படியே குறைத்துக்கொண்டு வந்து ஒன்பது அல்லது பத்தாவது மாதத்தில் முற்றும் நிறுத்திவிடலாம். அதற்குமேல் தாய்ப்பால் தேவையில்லை. எட்டு, ஒன்பதாவது மாதத்திலேயே பாலன்னம்போன்ற குழந்தைக்குப் பிடிக்கும் லேசான உணவையும் சிறிது அளவில் கொடுத்து வரலாம்.

ஒன்பது அல்லது பத்தாவது மாதத்தில் பூரணமாகப் பால் கொடுப்பதை நிறுத்துமுன், சிறிது காலத்திற்குத் தினம் ஒரு தடவைமட்டும் கொடுத்துக்கொண்டு வரவேண்டும். அதுவும் இரவு குழந்தை தூங்கப் போவதற்குச் சற்று முன்பாக இருப்பது நல்லது. அப்பொழுது அதை நிறுத்துவது எளிதாக இருக்கும்

அதை நிறுத்தும்போது அதற்குப் பதிலாகப் பசும் பால் கொடுத்துவிட்டால் குழந்தைக்கு இரவில் பசி தோன்ருது. பாலோடையில கொடுப்பதைவிடக் கெண்டியிலோ கண்ணுடிப் புட்டியிலோ ரப்பரால் செயத பால் குடிக்கும் கருவியை இட்டுக கொடுப்பது நல்லது. குழந்தை மகிழ்ச்சியோடு உடகொள்ளுமாறு அன்பு காட்டவேணடும்.

சாதாரணமாகக் குழந்தை உதட்டில பெறுகிற இன்பதகதைப் பாலுண்ணுதபோதும் விரலைச் சுவைத்து அடைய முயல்கிறது. இம்மாதிரிச் செய்கை முன்பே காணப்பட்டாலும் பால நிறுத்தப்படடவுடன் சிறிது அதிகமாகலாம். இந்தப பழக்கத்தை வற்புறுத்தியோ பயமுறுததியோ தடுக்கக்கூடாது. அவவாறு செய் வதால குழந்தை இன்ப உணாச்சியை நாடித தனது குறியில கைவைததுப் பழகுகிறது.

ஆசலால விரல் சுவைப்பதை நயமாக மாற்ற வேணடும். அதனுல கிடைக்கும் இன்பம் குழந்தைக்கு வேறு வழிகளில் கிடைக்கும்படி நாம் செய்யவேணடும். பழம் கொடுப்பது, மிடடாய கொடுப்பது, அதற்குப் பிடிதத உணவைக் கொடுப்பது; புதிய புதிய விளை யாடடுக் கருவிகள் தருவது, விளையாட்டுக்கள் காட்டு வது இந்த மாதிரியாகக் குழந்தை இன்பங் காணப் புது வழிகளைச் செய்யவேணடும். அப்பொழுது சுலப மாக விரல் சுவைப்பது நின்றுவிடும்.

தாயிடமிருந்து இப்போது குழந்தை பல விதத்தி லும் அன்பைப் பெறவேண்டும். அப்படிச செய்தால் குழந்தைக்குப் பால் மறக்கும்போது உணடாகிற ஏக்க மும் உள்ளக் கோளாறுகளும் ஏற்படாமல செய்து விடலாம்.

இது சம்பந்தமாகப் பெற்ரேர்கள் இன்னும் சில விஷயங்களையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். உறங்கும்போது குழந்தையைப் பக்கத்

திலேயே படுக்க வைத்துக்கொள்ளக் கூடாது. இது ஆரோக்கியத்திற்கும் கெட்டது; மன வளர்ச்சிக்கும் ஏற்றதல்ல.

பத்து மாதத்திற்குமேல் தாய்ப்பால் குழந்தையின் உடல் வளர்ச்சிக்கு அவசியமில்லை. அதற்கு மேல் கொடுத்துக்கொண் டிருந்தால் அதை மறக்கச் செய்வதும் சிரமமாகிறது.

சில குழந்தைகள் வெளித்தோற்றத்திற்கு ஏக்கங் கொண்டனவாகக் காணப்படாவிட்டாலும் அவற்றின் உள்ளத்தில் பலவகையான கோளாறுகள் ஏற்பட்டிருக் கலாம்.

பிறந்ததிலிருந்து பெற்ற ஓர் இன்ப உணர்ச்சி கிடைக்காததால் குழந்தை ஏமாற்றமடைகிறது. அந்த ஏமாற்றம் மறைவுள்ளத்தில் பதிந்து பிற்காலத்தில் வெவ்வேறு விதமான விரும்பத்தகாத ஆசைகளுக்குக் காரணமாகலாம். ஆதலால்தான், பால் மறக்கச் செய்யும்போது வேறு வழிகளில் இன்பம்பெறச் செய்யவேண்டும்.

விரலைச் சுவைப்பது அதிகம் நீடித்தால் முளைக்கும் போதே பல் வரிசை கெட்டுப்போகலாம். நீண்ட நாட்களுக்குத் தொடர்ந்து இந்தப் பழக்கம் வருவதிலிருந்தே குழந்தை பால் குடிப்பதால் பெற்ற இன்பம் தவிர வேறு இன்பங்களைப் பெறவில்லை என்பது தெளிவாகும்.

அதை அறிந்து குழந்தைக்குப் புதிய புதிய இன்பங் காண உதவவேண்டும். மணலில் வீடு கட்டுவது, களிமண்ணால் பல்வேறு உருவங்கள் செய்வது முதலியனவும் குழந்தைக்குப் பெரிதும் இன்பங் கொடுக்கும். இவற்றையெல்லாம்விடப் பெற்றோரின் அன்பே இக்காலத்தில் மிக முக்கியம்.

# 11
# பேச்சு

குழலினிது யாழினிது என்பர்தம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.

இந்த இனிய மழலை முதலில் எப்படி ஆரம்பிக்கிறது? பிறகு இது எப்படித் தெளிவான பேச்சாக உருவெடுக்கிறது?—இவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டாமா?

குழந்தை பிறந்தவுடன் சுவாசிக்க ஆரம்பிக்கிறது. முதலில் உள்ளே இழுத்த மூச்சு சுவாசப் பையிலிருந்து குரல்வளையின் வழியாக வெளிவரும்போது சப்தம் உண்டாகிறது. இதுவே குழந்தையின் முதல் அழுகையாகச் சொல்லப்படுவது என்று கண்டோம்.

இதுவே குழந்தையின் ஆரம்பப் பேச்சென்றும், உணர்ச்சிகளை வெளியிடும் முக்கிய வழியென்றும் முன்பே சொன்னோம்.

பேச்சு, மனிதனுக்கு உண்டான ஒரு விசேஷ அம்சம். ஆனால் பேச்சுக்கென்று தனிப்பட்ட உறுப்பு மனித தேகத்தில் அமையவில்லை. வேறு காரியங்களுக்காக ஏற்பட்ட உறுப்புக்கள் சேர்ந்து உண்டாவதே பேச்சு.

கழுத்திலுள்ள குரல்வளை (Larynx), சப்தம் உண்டாக்குவதற்கு ஏற்பட்டதே ஒழியப் பேச்சுக்காக அல்ல. வெறும் சப்தத்திற்கும் பேச்சுக்கும் வித்தியாசம் இருக்கிறது. மிருகங்களும் பறவைகளும் சப்தமிடும்; ஆனால் பேசா.

குரல்வளையிலுள்ள தசைநார்கள் அசைந்து ஒலி பிறப்பதற்கு உள்ளிருந்து வெளிவரும் மூச்சு உதவு கிறது. ஆனால் அந்த மூச்சை உள்ளுக்கு இழுக்கும் சுவாசப் பையோ உடம்புக்குப் பிராண வாயுவை அளிக்க ஏற்பட்ட உறுப்பாகும். தொண்டையிலும் நாசித்துவாரங்களிலும் சப்தம் தெளிவடைந்து பேச்சாக மாறுவதற்கு, நாக்கு, இதழ்கள் முதலிய உறுப்புக்களும் உதவுகின்றன. இந்த உறுப்புக்களெல்லாம் பிரதான மாக வெவ்வேறு வேலைகளைச் செய்ய உண்டானவை.

இரண்டு மூன்று மாதங்களான குழந்தை பலவகை யான சப்தமிட்டு மகிழ்கிறது. புதிதாக ஒரு மாதிரியான சப்தம் உண்டாக்கிவிட்டால் அதற்கு வெகு ஆனந்தம். பிறகு கொஞ்சம் கொஞ்சமாக, ம்மா, த்தா, அம்மா, தாத்தா, என்ற சில வார்த்தைகளைச் சொல்லக் கற்றுக் கொள்கிறது.

புதிய சொல் ஒன்றை உச்சரிக்கக் கற்றுக்கொண்டு அதன்மூலம் ஒரு காரியத்தைச் சாதித்துக்கொண்டால் குழந்தை மிக மகிழ்ச்சி அடைகிறது. அதையே திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்க்கிறது.

சரோஜாவுக்குத் தண்ணீர் வேண்டும். ஆனால் அவளுக்குக் கேட்கத் தெரியாது. எத்தனை நாள் இப் படிக் கேட்கத் தெரியாமல் சிரமப்பட்டாளோ, அதை யார் அறிவார்? ஒரு நாள், 'அண்ணி' என்று சொல்லிப் பழகி விட்டாள். அன்று பல தடவை, 'அம்மா, அண்ணி, அம்மா, அண்ணி' என்று கேட்டுக் கொண்டே இருந்தாள்.

சில சமயங்களில் குழந்தைக்குத் தன் மனத்தில் உள்ள எண்ணத்தை வெளியிட வார்த்தை சொல்லத் தெரியாது. ஏதாவது அர்த்தமில்லாமல் பேசிக் கொண்டே இருக்கும். அப்போது குழந்தையைக் கேலி

செய்யக்கூடாது; பழிக்கவுங் கூடாது. ஆனால் என்றும் இப்படியே பேசிக்கொண் டிருக்க விட்டுவிடவேண்டும் என்பதில்லை. புதிய புதிய சொற்களைச் சொல்ல அதற்கு அன்போடு உத்ஸாகம் அளிக்கவேண்டும். பல வார்த்தைகளைத் தெரிந்துகொண்டால் தனது எண்ணங் களை ஒருவாறு தெளிவாகச் சொல்ல அதற்குத் திறமை தானாகவே வந்துவிடும்.

சரோஜா, 'மாமா, இங்கே வா' என்று சொல்லு கிறாள். 'மாமா இங்கே வாங்கோ' என்று மரியாதை யாகச் சொல்லவில்லையே என்று அவளைக் கண்டித்தால் அவளுக்கு ஒன்றும் விளங்காது. இந்த மரியாதை யெல்லாம் குழந்தைக்கு அர்த்தமற்றவை. அதனால் அவளைக் கண்டிக்காமல் அவள் மாமனை, 'மாமா, வா' என்று கூப்பிடும்போதெல்லாம், 'மாமா, வாங்கோ' என்று நயமாகச் சொல்லிக் காண்பித்தால் அப்படிச் செய்வதுதான் சரி என்று அவள் அதைப் பின் பற்றுவாள்.

நான் காலையில் ஜிப்பாவைப் போட்டுக்கொள் வதைக் கண்டதும் பள்ளிக்கூடம் புறப்படப் போகிறேன் என்று கண்ணம்மாளும் சரோஜாவும் தெரிந்துகொள்ளு கிறார்கள்.

'நமஸ்காரம், போய்ட்டு வாங்கோ' என்பாள் கண்ணம்மா.

'நமஸ்காரம், போ' என்பாள் சரோஜா. அவள் 'போ' என்று சொல்லுவது மிரட்டுவதுபோல இருக்கும்.

ஆனால், அவள் யாரையும் மிரட்டவில்லை. அவள் பழகிக்கொண்ட பேச்சு அவ்வளவுதான். இன்னும் கொஞ்ச காலத்தில் நாம் எதிர்பார்க்கிறபடி மரியாதை யாகச் சொல்லுவாள்.

குழந்தை மற்றவர்கள் பேசுவதைக் கேட்டு அதைப் போலவே சொல்லிப் பழகுகிறது. அதனால் குழந்தையின் முன்னால் பேசும்போது ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்.

திருத்தமான உச்சரிப்பு ஆரம்பத்திலிருந்தே உண்டாவது நல்லது. வார்த்தைகளைக் கொன்னிக் கொன்னிப் பேசுவதைப்பற்றி இங்கே நான் குறிப்பிடவில்லை. இரண்டு வயது ஆகியிருக்கும்போது ராஜாமணி சங்கு என்பதற்குப் பதில் அங்கு என்பான்; சர்க்கரையை அக்கரை என்பான். இது நாளாவட்டத்தில் சரியாகிவிடும். ஆனால் சிலர் பெரியவர்களான பிறகும் பால் என்பதற்குப் பாள் என்பார்கள்; பூனையையும் பூணை என்பார்கள். ஒரு பிரமுகர் பேச ஆரம்பித்தபோது, 'தளைவர் அவர்களே!' என்று சொல்லிவிட்டார். பிறகு அவருக்கு ஒன்றுமே ஓடவில்லை. இளமைப் பழக்கத்தால், படித்தவர்களும் இப்படித் தவறிவிடுவதை நான் கண்டிருக்கிறேன். இப்படித் தவறான உச்சரிப்புக்கு ஆதியிலிருந்தே இடங்கொடுக்காமல் இருந்தால்தான் அது நம்மையும் அறியாது பேச்சுக்கு இடையிலே புகுந்து எக்காலத்திலும் தொந்தரவு கொடுக்காது.

ஒரு நாள் பக்கத்து வீட்டுக் கிழவி தெருவில் நின்று கொண்டு யாரையோ பலமாக வைதுகொண்டிருந்தாள். 'போடி சண்டாளி' என்று அவள் சொன்னது கண்ணம்மாளுக்குக் கேட்டுவிட்டது. அவள் பல நாள் அதையே அர்த்தமில்லாமல் சொல்லிக்கொண்டிருந்தாள். யாரையாவது திட்டுவதற்கு அதைப் பிரயோகம் பண்ணலாம் என்பதுமட்டும் அவளுக்குத் தெரிந்துவிட்டது. அந்தப் பழக்கத்தை மாற்றுவதே ஒரு பிரச்சினையாக முடிந்தது.

பொருள்களை நேரில் பார்த்துப் பிறகு அவற்றின் பெயரைக் கற்றுக்கொள்வது குழந்தைகளுக்குச் சுலபம்.

வள்ளிநாயகிக்கு வயது இரண்டு. அவள் மயிலைப் பார்த்த தில்லை. புத்தகம் ஒன்றில் அதன் படத்தைப் பார்த்துக் கொண்டு, 'இது என்ன?' என்று கேட்டாள் மயில் என்றேன். 'மயிலா?' என்று சொல்லி விட்டு மறுபடி யும் படத்தையே பார்த்துக்கொண் டிருந்தாள்.

மறுநாள் அதே படத்தைக் காட்டியபோது அவ ளால் பெயர் சொல்லமுடியவில்லை. சில நாட்களுக்கு அப்புறமே அதை ஞாபகத்தில் வைக்க முடிந்தது.

ஆனல் ஆகாய விமானம் வருவதை அவள் ஒரு நாள் பார்த்தாள். 'ஏரோபிளேன்' என்று சொன்னேன். மறுநாள் விமானம் வரும் சப்தம் கேட்டு அவள், 'ஏப் பிளேன்' என்று கத்திக்கொண்டு வெளியே ஓட ஆரம் பித்தாள்.

பொருளையோ அதன் படத்தையோ பார்க்காமல் வெறும் வார்த்தையைச் சொன்னால் குழந்தைக்கு ஒன் றும் விளங்காது. மயிலையும் பார்க்காமல் அதன் படத் தையும் பார்க்காமல் மயில் என்ற சொல்லைமட்டும் கேட் டால் குழந்தைக்கு ஒன்றுமே தெரியாது. பொருளையே பார்ப்பது அதிக விசேஷம். படத்தைப் பார்ப்பது ஓரள வுக்கு உதவும். போ, வா என்ற செய்கைகளைக் காட்டும் சொற்களையும் குழந்தை பல நாள் அநுபவத்தால்தான் அறிந்துகொள்கிறது.

குழந்தையைச் சரியானபடி பேசப் பழக்குவதில் ஒரு விஷயத்தை மனத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். அடிக்கடி அதைத் திருத்திப் பயமுறுத்தக்கூடாது. எடுத்ததற்கெல்லாம் திருத்தம் சொல்லிக்கொண் டிருந் தால் குழந்தை தன்னம்பிக்கையை இழந்துவிடுகிறது. நல்ல எண்ணத்தோடுதான் திருத்த முயலுகிறோம். இருந் தாலும் நிமிஷத்திற்கு நிமிஷம் தடை செய்து, 'இப்படிச் சொல்லக்கூடாது, அப்படிச் சொல், என்பதால்

குழந்தை ஒழுங்காகப் பேசும் சக்தியை இழந்துவிடும். தன் பேச்சில ஏதோ குறையிருப்பதாக அது உணரு மானல், வார்த்தைக்கு வார்த்தை நிறுத்திப் பிற ருடைய திருத்தத்தை எதிர்பார்க்க ஆரம்பித்து விடும். இதுவே நாளடைவில் திக்கித் திக்கிப் பேசுவதாக முடியும்.

குழந்தைக்குப் புதிய சொற்களைக் கற்றுக்கொள்ள ஆசை நிறைய இருக்கிறது. ஒரு வார்த்தையைத் தெரிந்துகொண்டால அதையே பல முறை சொல்லிப் பார்த்துக்கொள்ளுகிறது. இந்த ஆசையை வைத்துக் கொண்டே புதிய சொற்களைச சரியான உச்சரிப்புடன் நயமாகச் சொல்லிக்கொடுத்துவிடலாம்.

திக்கிப் பேசும் குழந்தையைச் சரிப்படுத்துவதற்கு அதற்குத தன்மேலேயே நம்பிக்கை உண்டாகும்படி செய்வது முதல் அவசியம். அது பேசும்போது யாரும் குறுக்கிட்டு அதட்டக்கூடாது; திக்குவதைக் கண்டு கேலி செய்யவும் கூடாது. இப்படிச செய்து இந்தக் குறையை நிவாத்தி செயதுவிடலாம்.

குழந்தை தாய்மொழியை எளிதிலும் வெகு வேக மாகவும் கற்றுக்கொள்கிறது. இரண்டாவது வயதில பெண்குழந்தைகள் 300 வார்த்தைகள் பேசுவதாக ஸ்டெர்ன் (Stern) என்பவா கண்டிருக்கிறா. ஸ்மித் என் பவருடைய ஆராயச்சிப்பிரகாரம் அந்த வயதில் குழந்தை கள் சராசரியாக 272 வார்த்தைகள் பேசுகின்றன.

அதிக வார்த்தைகளைத் தெரிந்துகொள்வதும் பேசு வதும் பெற்றோருடைய நிலைமையையும், குடும்பத்தின் சூழநிலையையும் பொறுத்திருக்கின்றன. மேற் கூறிய இரு ஆராய்ச்சியாளா எடுத்துக்கொண்ட குழந்தைகளின் நிலைமைகள் சற்று உயர்ந்ததாக இருக்கவேண்டும். எனது ஆராய்ச்சியிலே இரண்டு வயதுக் குழந்தைகள் 242 வார்த்தைகள் வரையில் பேசுவதைத்தான் கணடேன்.

ஆனால் இரண்டு வயதிற்கு மேற்பட்டுப் பேச்சுத் திறமை மிக வேகமாக வளர்கிறது. வார்த்தைகளை உச்சரிக்க வேண்டியவாறு நாக்கு முதலிய உறுப்புக்களை இயக்கும் சக்தியும் வளர்ந்துவிடுவதால் இரண்டு வயதுக்கு மேல், ஒவ்வொரு மாதமும் சோதனை செய்து பார்த்தால் குழந்தை சொல்லும் வார்த்தைகள் வேகமாக அதிகரிப்பதை அறியலாம். அதனால்தான் அறிஞர்கள் $2\frac{1}{2}$ வருஷமாவதற்குள் குழந்தை தன் கருத்தை வெளியிடுவதற்கு வேண்டிய அளவு பேச்சுத் திறமை அடைவதாகப் பொதுவாகச் சொல்லுகிறார்கள்.

குழந்தை இரண்டிலிருந்து மூன்று வயதிற்குள் மிக விரைவில் பேசப் பழகி நான்கிலிருந்து ஐந்திற்குள் பேச்சுத் திறமையை முற்றும் பெற்றுவிடுகிறது.

# 12

# பயம்

பிறப்பிலிருந்தே மனிதனுக்கு இயல்பாக வந்த உணர்ச்சிகள் உண்டா என்பது ஒரு பெரிய கேள்வியாக இருக்கிறது. அறிஞர்களுக்குள்ளே இது பற்றி வேறுபட்ட அபிப்பிராயங்கள் இருக்கின்றன. பயம், கோபம், இரக்கம், தன் எண்ணத்தையே சாதித்தல், தாய்மை ஆர்வம் முதலிய உணர்ச்சிகள் பிறவியிலேயே இயல்பாக இருப்பதாக மெக்டூகல் (Mcdougall) கூறுகிறார்.

இம்மாதிரி உணர்ச்சிகள் பிறப்பிலேயே இல்லை; சூழ்நிலையாலும் பெற்றோர்களாலுமே இவை உண்டாக்கப்படுகின்றன என்பது வேறு சிலர் கருத்து.

வேலன்டைன் (Valentine) என்பார் பய உணர்ச்சி பற்றிய தம் ஆராய்ச்சியிலிருந்து மேற்கண்ட எதிர்மாறான கொள்கைகளைப் பிணைப்பதுபோன்ற ஒரு கருத்தை வெளியிட்டுள்ளார்.

'இயல்பாகவே அவ்வுணர்ச்சிகள் இல்லை. ஆனால் அவ்வுணர்ச்சிகளைப் பெறும் மனப்பான்மை இயல்பாகவே இருக்கிறது. ஆதலால் ஒவ்வோர் உணர்ச்சிக்கும் ஏற்ற சம்பவம் நிகழ்ந்தால் உடனே அவ்வுணர்ச்சி பிறந்துவிடுகிறது' என்று அவர் சொல்கிறார்.

உண்மை எதுவாக இருந்தாலும், இந்த மூன்று அபிப்பிராயங்களையும் ஒருங்கே வைத்து ஆலோசித்துப் பார்க்கும்போது ஒரு விஷயம் நிச்சயமாகப் புலனாகிறது. பிறவியிலேயே இயல்பாக இருப்பினும் சரி, பிறவியிலேயே இயல்பாக இவ்வுணர்ச்சிகளைப் பெறும் மனப்பான்மையைப் பெற்றிருந்தாலும் சரி, சூழ்நிலையாலும்

சூழ்ந்திருப்பவர்களாலும் உண்டாக்கப்பட்டாலும் சரி, குழந்தையிடத்தில் ஒன்றன்பின் ஒன்றாக இவ்வுணர்ச்சிகள் தோன்றிவிடுகின்றன.

இயல்பூக்கங்களில் (Instincts) சில விரும்பத்தக்கன, சில விரும்பத்தகாதன. முன்னவற்றை வளர்க்க வேண்டும்; பின்னவற்றை வேறு நல்ல துறையில் மாற்றிவிட வேண்டும். எந்த இயல்பூக்கத்தையும் உள்ளுக்குள்ளேயே அழுத்திவைப்பதால் அது மறைவுள்ளத்தில் பதிந்து எதிர்பாராத பல இழிசெயல்களுக்குக் காரணமாகிறது. இதனால்தான் எந்த இயல்பூக்கத்தையும் அறிவினால் நல்ல வழியில் திருப்பிவிட வேண்டுமே ஒழிய அடக்கக்கூடாது என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். மறைவுள்ளத்தைப் பற்றிய உண்மைகள் வெளியாக வெளியாக இது மிகவும் வற்புறுத்தப்படுகிறது.

சண்டைப் பிடித்தல் ஓர் இயல்பூக்கம். இது கேவலம் மிருகத்தனமாக மற்றவர்களிடம் கலவரம் செய்துகொள்வதில் வெளிப்படுமானால் அது விரும்பத்தக்கதல்ல. அப்படியில்லாமல் மக்களைப் பீடிக்கும் தொத்துநோய்களை எதிர்த்துப் போராடி அவற்றை ஒழிப்பதுபோன்ற காரியங்களில் திரும்பினால் போற்றப்படும் தன்மை ஆகிவிடுகிறது. இவ்வாறு விரும்பத்தகாத இயல்பூக்கங்களை உயர்மலர்ச்சி யடையும்படி செய்யவேண்டும்.

பயம் தற்காப்புக்காக ஏற்பட்ட உணர்ச்சி. 'இது இயல்பாகவே குழந்தையிடத்தில் இருக்கிறதா? பூங்குழந்தை எதையாவது கண்டு பயப்படுமா?' என்பதை நாம் ஆராயவேண்டும்.

'இயல்பாகவே இரு சம்பவங்களில் குழந்தைக்குப் பயமுண்டாகிறது; பெரிய சப்தம் ஒன்று; கீழே நழுவி விழுதல் இரண்டு' என்று வாட்சன் சொல்லுகிறார். மற்றப் பய உணர்ச்சிகளெல்லாம் இவைகளிலிருந்து கிளைத்தவைதாம் என்கிறார் அவர்.

ஆனால் பல சோதனைகள் செய்து பார்த்ததிலிருந்து எல்லாக் குழந்தைகளும் இந்த இரண்டு சம்பவங்களினால் பயப்படுவதாகத் தெரியவில்லை என்று கண்டிருக்கிறார்கள்.

மேற்சொன்ன இரு நிகழ்ச்சிகளல்லாத வேறு நிகழ்ச்சிகளாலும் குழந்தைகள் இயல்பாகப் பய உணர்ச்சி அடைகின்றன.

ஒரு நாள் நான் நாய்க்குட்டிப் பொம்மை ஒன்று வாங்கி வந்தேன். அதன் தலையை அழுத்தினால சப்தமிடும். கண்ணம்மா அதை ஆவலோடு வாங்கி வைத்துக் கொண்டாள். அவள தற்செயலாக அதன் தலையை அழுத்தவே சப்தம் உண்டாயிற்று. அவள் பயந்து அழுது விட்டாள். இப்படித திடீரென்று எதிர்பாராத சம்பவம் குழந்தைக்குப் பயத்தை உண்டாக்குகிறது.

முன்னால் தனக்குச் சங்கடம் விளைவித்த ஒன்றைக் கண்டாலும் குழந்தை நடுங்குகிறது. ராஜாமணி பூனைக் குட்டியைத் தூக்கினான். அது பிறாண்டிவிட்டது. அதுமுதல பூனையைக் கண்டால் அவனுக்குப் பயம்.

இருட்டில் தனித்திருக்கச் சில குழந்தைகள் அச்சங் கொள்கின்றன. சில இருட்டில் இருக்கப் பயப்படா. பூனை கத்தினாலும் பயப்படா. ஆனால இருட்டும் பூனைக் குரலும் சேர்ந்திருந்தால் பயந்துவிடும். இம்மாதிரியான சில நிகழ்ச்சிகள் சேர்ந்து வருவதாலும் பயம் பிறக்கிறது.

ஆனால் பொதுவாக நோக்குமிடத்து வாட்சன் சொல்லுவதுபோலப் பூங்குழந்தைக்கு இரண்டொரு விஷயங்களில்தான் பயமுண்டு. பய உணர்ச்சிகளெல்லாம் நாளடைவிலே உண்டாவன.

அப்படி உண்டாவதற்குப் பெற்றோரும், குழந்தையோடு பழகும் மற்றவரும் பெரிதும் காரணமாக இருக்கிறார்கள்.

குழந்தை தூங்காமல் பேசிக்கொண்டே படுத்திருக்கும். தாய்க்கு அதைச் சீக்கிரம் தூங்க வைத்துவிட்டுப் போகவேண்டுமென்று ஆசை. 'மியாவ, மியாவ், உஸ், இதோ பூனை வருது; பேசாமல் கண்ணை மூடித் தூங்கு' என்கிறாள்.

குழந்தை என்னவோ என்று பயந்து கண்களை மூடிக்கொள்கிறது.

இரவிலே குழந்தை ஏதாவது ஒரு காரணத்தால் அழும். 'அதோ பூச்சாண்டி வரான், பேசாதே; படுத்துக்கோ' என்று பயங்காட்டுகிறாள் தாய். குழந்தை பாவம், விருக்கு விருக்கென்று கிடக்கிறது.

வள்ளிநாயகி அப்பொழுதுதான் நடக்க ஆரம்பித்திருக்கிறாள். ஒரு நாள் தாய் கவனியாத சமயத்தில் அவள் சந்தோஷமாகக் குதிரையிடம் நடந்து போய்க் கொண்டிருந்தாள். தற்செயலாக அவள் குதிரையருகிலேயே போய்விட்டதைத் தாய் பார்த்துவிட்டாள். 'ஐயோ குழந்தை போச்சு!' என்று அலறிக்கொண்டு ஓடித் தூக்கிக்கொண்டு வந்தாள். அவள் போட்ட சப்தத்தையும் முகக் குறிப்பையும் கண்டு குழந்தை மிகவும் பயந்துவிட்டது. இப்பொழுது குதிரை என்றால் அவளுக்கு ஒரே பீதி.

இப்படியே நமது செய்கையால் குழந்தைக்குப் பல வகையான பயத்தை உண்டாக்கிவிடுகிறோம். ஆனால் நாம் மட்டும் ஆரம்பத்திலிருந்தே ஜாக்கிரதையாக இருந்தால் குழந்தை அநேகமாகப் பயம் அறியாமலே வளரும்படி செய்துவிடலாம்.

பிறந்தது முதற்கொண்டு இருட்டறையிலேயே குழந்தையைத் தூங்க வைப்பது நல்லது. தாய் அருகில் படுப்பது கூடாது. படுக்கையில் ஒன்றுக்குப் போய் விட்டால் மட்டும் வந்து பார்த்து அவசியமானதைச் செய்யவேண்டும். குழந்தை சற்றுப் பெரிதானவுடன்

குறிப்பிட்ட காலங்களில் எடுத்து ஒரு பக்கமாக ஜலங் கழிக்க விடலாம். நான்கு ஐந்து வயதுக் குழந்தைகள் தாங்களே எழுந்து கொள்ளப் பழக்கலாம். இருட்டைப் பற்றிக் குழந்தைககுப் பயம் இல்லாமல் ஆரம்பத்தி லிருந்தே செய்யவேண்டும்.

எங்கள் குருகுலத்திலே 9, 10 வயதுப் பையன்கள் வந்து சேருகிறாகள். ஆரம்பததில அவாகளில சிலா இரவிலே படுககையில் ஜலங் கழித்துவிடுகின்றனர். காரணம்: இருட்டிலே வெளியில் வரப் பயம். காலில ஏதாவது ஜந்துககள் தடடுப்படாமல இருககச சறறு எச்சரிக்கை வேணடுமே ஒழிய, மற்றப்படி இருட்டைக் கணடு பயப்படவேணடிய அவசியமே இலலே.

குழந்தை பயமறியாது வளரவேணடும். அதற்கு ஒருவிததகதிலும் பயம் காடடக கூடாது. குழந்தை கீழே விழுந்துவிடப் போகிறதே, வேறு வகையில தீங்கு தேடிககொள்ளுமே என்று அதனமேலுள்ள அனபிஞல கவலேப்படடு அதை எககாரியமும் செயயவிடாமல பாாததுககொண டிருப்பது நலலதலல. முன்னெசசரிக கையாக வேணடுமானுல குழந்தைககுப் பெரிய ஆபத்து உணடாகககக கூடியவற்றை விலககிவிடடு, குழந்தையைத தாராளமாக நடமாட விடடுவிட வேணடும்.

குழந்தைககு ஏதாவது ஒன்றுல பய உணாசசி ஏற்படுமாஞல அதை அறிவால வெலலுவதற்கு நயமாக உதவ வேணடும். அறிவால் ஆராய்ந்து பாாத தால அநதப் பயததிறகு ஏதுவிலலே என்று தெரிந்து விடும். பிறகு பயம் தாஞகவே விலகும். அப்படியலலாது அந்தப் பயம் மனததிலேயே அழுந்துமபடி செயவது தவறு.

சிறு வயதில் ஏற்பட்ட பயம் பெரியவாகளான போது விபரீதமான முறையில் வெளிப்படுவதைப் பல பேரிடம் இன்று கணடிருககிறாகள். ஒரு போா வீரன்;

மிக்க தைரியசாலி. ஆனால் மூடப்பட்டுள்ள இடத்தைக் கண்டால் மட்டும் அவன் மிகவும் பயமடைவான். அதற்குக் காரணமே தெரியவில்லை. ஒரு சமயம் குழி தோண்டி அதற்குள் ஒளிந்துகொண்டு சண்டை செய்ய நேர்ந்தது. அவன் குழியைக் கண்டு பயந்துகொண்டு, விரோதிகள் சுட்டுக்கொண் டிருப்பதையும் பொருட் படுத்தாது அவர்களையே நோக்கி ஓட ஆரம்பித்து விட்டான். பின்னர் வல்லவர்கள் மூலம் அவனை ஆராய்ந்ததில் அம்மாதிரியான பயத்திற்குச் சிறு வயதில், மூடப்பட்ட அறையுள் இருந்து பயந்ததே காரணமென்று தெரிந்தது.

குழந்தைகளிடம் பழகும் வேலைக்காரர்கள் பயங் கொள்ளிகளாக இருந்தால் அப்பயம் குழந்தைகளுக்கும் உண்டாகிவிடும். அப்படிப்பட்டவர்களை விலக்கிவிட வேண்டும்.

குழந்தைகட்குப் பேய் பிசாசுக் கதைகளையும், பயங்கரக் கதைகளையும் சொல்லவே கூடாது.

பய உணர்ச்சியே இல்லை என்று சொல்லும்படி யாகக் குழந்தைகள் வளரவேண்டும். ராமலிங்க அடிகள் கூறியுள்ளபடி பயம் பூச்சியமாகப் பெறவேண்டும். அது வாழ்க்கையில் வெற்றிபெறுவதற்கு நல்ல அஸ்திவார மாகும்.

# 13
# கோபம்

தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க, காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்.

கோபம் ஒரு பொல்லாத உணர்ச்சி. அதை அடக்கி ஆள வேண்டுமென்றுகூடச் சொல்லாமல், 'ஆறுவது சினம்' என்று ஔவை மூதாட்டியார் கூறியுள்ளார். கோபமே இல்லாது ஆறிவிட வேண்டும்; அடக்கினால் அது வேறு வழிகளில் மறைவுள்ளத்தினின்று வாழ்க்கையில் பிரதிபலிக்கும் என்று நினைத்துத்தானோ என்னவோ அந்த உணர்ச்சியே ஆறிப்போக முயலவேண்டுமென்று அவர் கூறியிருக்கிறார்.

கோபத்தால் ஒரு காரியத்தைச் செய்துவிட்டுப் பின்னால் வருந்துவதை நாம் பல தடவைகளில் கண்டிருக்கிறோம். ஆதலால் அதன் தீமையைப்பற்றி இங்கே அதிகம் விவரிக்க வேண்டியதில்லை. அநீதி முதலியவற்றைக் கண்டு அவற்றைப் போக்க இந்தக் கோபத்தை அறவழியிலே உயர்மலர்ச்சி அடையும்படி செய்துவிட்டால் அது போற்றத்தக்கதாக அமைந்துவிடும்.

குழந்தைக்குக் கோபம் உண்டாவதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. கண்ணம்மா காலையில் எழுந்ததும் மிட்டாய் கேட்கிறாள். கொடுக்கவில்லையென்றால் உடனே கோபம் வந்துவிடுகிறது. முகத்தைச் சுளித்துக் கொண்டு நிற்கிறாள்; இல்லாவிட்டால் அழுகிறாள்.

சரோஜா ஓடுகிறாள். அவளுக்கு இன்னும் நன்றாக நடக்க வரவில்லை. தடாலென்று கால் இடறி விழுந்து

விடுகிறாள். தன்னைக் கீழே வீழ்த்திய இடத்தை இரண்டு அடி கொடுத்தால்தான் அவள் கோபம் தணிகிறது.

சாப்பிடும்போது ராஜாமணிக்குக் கோபம் வந்து விடும். பால் வைத்திருக்கும் கிண்ணியை அப்படியே தட்டிவிடுவான். கீழே விழுந்து காலை உதைத்துக் கொண்டு புரளுவான்.

சீனிவாசனுக்கு ஐந்து வயது இருக்கும். அவனுக்குக் கோபம் வந்துவிட்டால் தன் அன்னையைக் கண்ட படி திட்டுகிறான். அந்த அம்மாள் வேலைக்காரியை வைவதையெல்லாம் அவன் ஒவ்வொரு தடவையும் கேட்டிருக்கிறானல்லவா?

சிறு குழந்தை கோபத்தை அழுகையால் வெளிப் படுத்துகிறது; சாமான்களைத் தள்ளிவிடுகிறது; கீழே புரளுகிறது. ஆனால் வயது ஆக ஆக அடித்தல், திட்டு தல், பழித்தல் இப்படி வேறு செய்கைகளும் சேர்ந்து கொள்ளுகின்றன.

உடல் பிணியுற்றிருந்தாலும், தூக்கம் வந்து விட்டாலும், நன்றாகத் தூங்காமல் இடையிலேயே எழ நேரிட்டாலும், பசியாலும், மல ஜலம் கழிக்காவிடினும் குழந்தைக்குக் கோபம் அதிகமாக வருகிறது.

குழந்தை ஏதாவது ஒன்றை விரும்புகிறது. தன் விருப்பம் நிறைவேறவில்லை என்றால் கோபங்கொள் கிறது. கீழே விழுந்து புரண்டு கத்துகிறது. அப் பொழுது தாய் அதன் விருப்பத்தைப் பூர்த்தி செய் கிறாள். குழந்தை ஒவ்வொரு தடவையும் தனது இஷ்டத்தை நிறைவேற்றிக்கொள்ள இந்த முறையையே பின்பற்றப் பழகிக்கொள்கிறது.

அப்படிப் புரளும்போது குழந்தைக்கு அமைதி யாக அதன் செய்கை தவறு என்று காட்டவேண்டும். பெற்றோர்கள் அதை ஆமோதிக்கவில்லை என்று கண் டால் மறுபடியும் குழந்தை அவ்வாறு செய்யாது. கீழே

விழுந்து புரளுகிறதே என்று ஒரு நாள் குழந்தைக்கு இணங்குவது, மறு நாள் கண்டிப்பது என்று இருந்தால இந்தப் பழக்கம் மாருது. பெற்ரோகள குரூரம் இலலா மலேயே சில விஷயங்களில கண்டிப்பாக இருக்கலாம்.

குழந்தை பிரியமாக எதையாவது விரும்பும் போது அவவிருப்பத்தைப் பூாததி செயவதுடன, அப் படிப் பிரியமாகக் கேடபதறகாக மகிழ்சசியும் காடட வேணடும். பெற்ரோகள குழந்தைககுப் போதனையாகச சொல்லும் வாாத்தைகளேவிட அவர்களது முகக் குறிப்பு முதலியவற்ருல ஆமோதிப்பதையோ வெறுப் பதையோ காணபிப்பது அதிகப் பயன் தரும்.

எங்கே குழந்தைகளைப்பற்றி அதிகக் கவலே கொள ளுகிருர்களோ, அங்கே அவை அதிகமாகக் கோபம் கொளளப் பழகிககொளளுகின்றன. பெற்ரோகளின் பலவீனததைச் சிக்கிரம் அவை அறிந்துகொளளு கின்றன.

பிரிட்ஜஸ் (K. M B. Bridges) என்பவா தமது ஆராய்ச்சியிலிருந்து பெண குழநதைகளுககுக் கோபம் அதிகம் வருவதிலலேயென்றும், மற்றக குழந்தைகளுடன் அன்புடன் பழகுவதில அவாகள ஆண குழந்தைகளே விடச் சிறந்த வெற்றியடைகிருாகளென்றும் கூறுகிருா. ஆனல் எங் (H. Eng) இதற்கு மாறுபடட அபிப்பிரா யம் தருகிருா. குழந்தைகளுககுளளே இடமாதிரி விததி யாசம் இல்லேயென்றும், வயது வந்தபிறகே ஆண பெண களிடததில் மேற்கூறிய வேறுபாடுகள தோன்றுகினறன என்றம் அவா கூறுகிருா.

இது எப்படி இருந்தாலும் கோபம் போற்றத்தக்க உணாசசி அல்ல; அதை நலல காரியங்களேச சாதிககும் வழியில் மலாசசியடையச் செய்யவேணடும். குழந்தைப் பருவத்திலிருந்தே இந்த முயற்சி ஆரம்பமாக வேணடும்.

# 14

# மிரட்டுதல், அடித்தல்

கண்ணம்மா மிட்டாய் கேட்கிறாள். தாய் கொடுப்பதில்லை. அழுகிறாள்; மிட்டாய் கிடைக்கிறது. அழுதால் வேண்டியதைப் பெற முடியும் என்று அவளுக்குத் தெரிந்துவிட்டது. அதனால் இப்பொழுது என்ன தேவையானாலும் அழுகைதான்.

அழுதுகொண்டே கீழே விழுந்து தரையில் புரளுவதும் உண்டு.

என்ன செய்தால் தாய் தனது இஷ்டத்தைப் பூர்த்தி செய்வாள் என்பதைக் குழந்தை சீக்கிரம் கண்டுகொள்கிறது. பிறகு எதற்கெடுத்தாலும் அதைச் செய்கிறது.

இந்த மாதிரியான பழக்கத்தை நாம் மாற்ற வேண்டும். ‘அழுதால் கிடைக்காது. சந்தோஷமாகக் கேள், கொடுக்கிறேன்’ என்று சாந்தமாகக் குழந்தைக்குச் சொல்லவேண்டும். அதோடு அழுதபின் கொடுப்பதற்குப் பதிலாகக் கேட்டவுடன் கொடுத்துவிடுவது நல்லது. குழந்தையின் விருப்பப்படி ஒன்றைச் செய்யக்கூடாது என்று ஏதாவது ஒரு நியாயமான காரணத்தால் கருதினால் அழுவதைக் கண்டு அக்கருத்தை மாற்றிக் கொள்ளுவது சரியல்ல.

கீழே விழுந்து புரண்டாலும் அதற்காகக் குழந்தையின் விருப்பத்திற்கு இணங்கக்கூடாது. சில பெற்றோர்கள் இணங்கமாட்டார்கள் ஆனால் குழந்தையின் பிடிவாதத்தைக் கண்டு பொறுமை இழந்து மிரட்டவோ அடிக்கவோ ஆரம்பிப்பார்கள். இப்படிப் பொறுமையை இழப்பதும் குழந்தையின் வளர்ச்சிக்கு ஏற்றதல்ல.

குழந்தையின் நடத்தை நமக்குப் பிடிக்கவில்லை என்று அதற்குத் தெளிவாகத் தெரியும்படி ஒவ்வொரு தடவையும் மாறுதலில்லாமல் நாம் காட்டினோமானால் அதைக் குழந்தை உணர்ந்துகொள்ளும்.

பக்கத்துவீட்டிலே ஒரு பையன் இருக்கிறான். நேற்று இரவு அவன் தன் தகப்பனிடம் ரகளை செய்து கொண்டிருந்தான்.

நான் அப்போது வாசலில் இருந்தேன். தந்தை வெளியில் வந்தார். பையனும் பின்னாலேயே ஓடிவந்தான். 'பாருங்கள், ஒரு சாமர்த்தியம்! இந்தப் பையன், "உனக்கு மாத்திரம் மெத்தையா? நீ பாயில் படுத்துக்கோ; நான் மெத்தையில் படுத்துக்கறேன்" என்கிறான்' என்று அவர் பெருமையோடு என்னிடம் சொன்னார். அவர் முகத்தில் தமது பையனைப்பற்றிய மகிழ்ச்சி தாண்டவமாடியது.

இந்தச் சமயத்தில் அந்தப் பையனுடைய தாயும் அவனுடைய கெட்டிக்காரத்தனத்தை எனக்குப் பல உதாரணங்களால் எடுத்துச் சொல்ல வந்துவிட்டாள்.

'பையன் ரொம்ப புத்திசாலி; எப்படிக் கேள்வி, பார்த்தீர்களா?' என்று இன்பம் பொங்க இருவரும் வார்த்தையாடினார்கள். பையன் இவற்றையெல்லாம் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தான்.

வீட்டிற்குள் அவர்கள் போன பிறகு மறுபடியும் ரகளை பலமாக நடக்க ஆரம்பித்தது. தகப்பன் மெத்தையில் படுக்கக்கூடாது என்று பையன் பிடிவாதமாகப் பேசுகிறான்; அழவும் ஆரம்பித்து விட்டான்.

பையனுடைய சாமர்த்தியத்தில் உண்டான மகிழ்ச்சியெல்லாம் இப்போது பறந்துவிட்டது. தந்தை பொறுமையை இழந்துவிட்டார். பையன் கூடக்கூடப் பேசுகிறான் என்று கோபமடைந்தார்.

'ஏண்டா, கூடக்கூடவா பேசறே?' என்று நாலு கொடுத்துவிட்டார்.

தாயும், 'இந்தப் பையனுக்கு இத்தனை இடம் ஆகாது' என்று தீர்ப்புக் கூறினாள்.

'வாயை மூடு; பேசினால் அடி' என்று மேலும் இரண்டு விழுந்தது. பையன் நடுங்கி ஒடுங்கிப் போய் விட்டான்.

"இனிமேல் கூட கூடப் பேசுவாயா?"

"இல்லை; இல்லை"—தேம்பிக்கொண்டே.

"வாயை மூடு."

"இல்லை; இல்லை"—தேம்பிக்கொண்டே.

"வாயை மூடு."

வாயை மூடியிருப்பான் நிச்சயமாக.

ஐந்து நிமிஷம் சத்தமில்லாமல் இருந்தது.

பிறகு தகப்பன் பையனுக்குப் புத்தி சொல்ல ஆரம்பித்தார்.

'பெரியவர்கள் சொன்னால் கூடக் கூடப் பேசப் படாது. அதுதான் நல்ல குணம். உனக்கு மெத்தை வேணும்னு, "அப்பா, நானும் மெத்தையிலே படுக்கட்டுமா?" என்று கேட்கவேணும்' என்று இப்படியெல்லாம் நீள எடுத்து உரைத்துக்கொண்டே இருந்தார்.

புத்திசாலித்தனத்தைப்பற்றி மெச்சிப் புகழ்ந்தவரும் அவரே. பிறகு அதற்காக அடித்தவரும் அவரே. சிறு குழந்தைக்கு அவர் செய்கை எவ்வாறு உள்ளத்தில் பட்டிருக்குமோ!

அந்தப் பையன் அடிபட்டதால் எதுவும் தெரிந்து கொண்டிருக்க முடியாது. தகப்பன் ஒரு பயங்கர ஜந்து என்று வேண்டுமானால் உணர்ந்திருப்பான்.

இப்படித்தான் குழந்தைகளை வளர்ப்பதில் தவறுகள் நேருகின்றன.

'நீ அம்மாவை வீட்டைவிட்டு ஓடிப்போ என்று சொல்லு' என்பான் தகப்பன.

குழந்தை குழறிக குழறிச சொல்லும். தந்தை சிரிப்பான்; தாயும் சிரிப்பாள. குழந்தைககு ஒரு முததம் கூடக் கிடைககும்.

'அத்தை மூஞ்சி எப்படி இருககிறது?' என்பாள் தாய்.

குழந்தை முகத்தைச சுளிததுக காணபிக்கும். 'இது பொலலாத குட்டி' என்று எலலோரும் களிப்பெயதுவார்கள்.

மெச்சிப் பேசிய விஷயஙகளுக்காகவே பின்னல் இவாகள குழந்தையிடம் கோபிப்பாாகள.

குழந்தையை மிரட்டுவதோ அடிப்பதோ கூடவே கூடாது என்று மன ஆராயசசியாளாகள பலரும் மிகவும் வற்புறுத்திச சொல்லுகிறாாகள. குழந்தையின வளாசசியை அவை பெரிதும் பாதிககினறன. மன வளாசசி இயலபாக நடைபெறுமல தடைப்படுகிறது. மறைவுளளததிலே பலவிதக கோளாறுகள ஏற்பட்டு விரும்பததகாத தன்மைகள அமைகின்றன.

அடித்தாலோ மிரட்டினலோ குழந்தை பயந்து தன் மனத்தில எழும் எணணஙகளைத் தாராளமாக வெளியிடாது. அதனல அவற்றைத தெரிந்துகொணடு போற்றவேணடியவைகளைப் போற்றவோ பிறவற்றை மாற்ற முயலவோ வழியிலலாமல் போயவிடுகிறது.

அடிக்கின்ற தாய் தகப்பனிடம் குழந்தைக்கு வெறுப்புணர்ச்சிதான் வளாந்துகொணடு வரும். குழந்தை அவர்களிடம் நம்பிக்கைகொள்ளாது. தனது

சக்தியற்ற நிலையைக் கண்டுதான் அவர்கள் இப்படித் தன்னைத் தண்டிப்பதாக அது நினைத்துக் கொள்ளும்.

அதனாலேதான் மிரட்டுவதையும் அடிப்பதையும் அறவே விலக்கவேண்டுமென்று உளநூல் பண்டிதர்கள் வற்புறுத்துகிறார்கள். சிலர்மட்டும், 'குழந்தையை அடிக்கவே கூடாது' என்ற கண்டிப்பான விதியைச் சில சமயங்களில் கொஞ்சம் தளர்த்தலாம் என்று கூறுகிறார்கள். எப்பொழுதாவது அபூர்வமாக ஒரு தடவை அடிப்பதனால் அவ்வளவு கெடுதல் இல்லை என்பது அவர்கள் கட்சி. ஆனால் அப்படி அடிப்பதற்கும் அவர்கள் பல நிபந்தனைகள் போட்டிருக்கிறார்கள். 'நீ கோபம் கொண்டிருக்கும்போது அடிக்காதே; முகத்தைப் பயங்கரமாக வைத்துக்கொண்டு அடிக்காதே; அமைதியாகக் குழந்தையின் தப்பை அதற்கு எடுத்துச் சொல்லி அதற்காகத்தான் அடி விழப்போகிறது என்று விளக்கு. அடிக்கும்போது அமைதியுடன் இரு. ஆனால் கோபம் மாறி அமைதி ஏற்படுவதற்கு அதிக நேரமாகிவிட்டால் அதன் பிறகு அடித்தால் குழந்தைக்குத் தான் அடிபடும் காரணம் விளங்காமல் போய்விடுமாதலால் தவறு செய்த சமயத்திலேயே அதிக காலம் தாழ்த்தாமல் அடிக்க வேண்டும்' என்று இப்படியெல்லாம் சொல்லுகிறார்கள். இந்த நிபந்தனைகளைப் போடுவதற்குப் பதிலாக, 'அடிக்கவே அடிக்காதே' என்று ஒரே வார்த்தையில் அவர்கள் சுலபமாகச் சொல்லியிருக்கலாம். இவற்றை யெல்லாம் நிறைவேற்றிக்கொண்டு தண்டனை விதிப்பது சாத்தியமாகத் தோன்றவில்லை.

பொதுவாகப் பார்த்தால் அடிப்பவர்கள் தங்களுக்கு வந்த கோபத்தாலேயே அப்படிச் செய்கிறார்கள். தாம் வேண்டாம் என்று சொல்லியும் குழந்தை கேட்கவில்லையே என்ற ஆத்திரத்தாலும் அடிக்கிறார்கள். அப்படிச் செய்வது மிகவும் தவறு.

சரியான முறையில் குழந்தையை வளர்த்து வந்தால அடிக்கவும் மிரட்டவும் அவசியமே இல்லை. குழந்தை அறிவு வாய்ந்த பிறவி. விஷயத்தை எடுத்துச் சொன்னால் அது தெரிந்துகொண்டு அதன்படி நடக்கும். அப்படி நடக்காது தவறி நடந்தாலும் அதனால் விளையும் தீமையைவிடப் பலசமயங்களில் அடிப்பதாலும் மிரட்டு வதாலும் அதிகத தீமை நேரிடுகிறது.

ஆதலால், அன்பிலேயே குழந்தை வளரவேண்டும். அன்பு இருக்கும்பொழுதே சில விஷயங்களில் கண்டிப் பும் இருககும்படி நாம் பழகிக்கொளளவேணடும். பொதுவாகப் பார்ககப்போனால் குழந்தையை அடிக்க வேணடிய சந்தாப்பஙகள ஏறபடுவதற்குப் பெற் றோர்களே ஒரு வகையில் காரணமாக இருப்பாாகள. ஆதலால, அடியும் மிரடடலும் குழந்தை உளளத்தைத் தாககுதல் தவறாகும்.

# 15
# உணர்ச்சி வேகம்

சரோஜா அழுதுகொண்டிருந்தாள்; ஒரே கத்து. எங்களுக்கு அதைக் கண்டு உள்ளுக்குள்ளே வெகு சங்கடமாக இருந்தது. 'என்ன செய்யலாம்?' என்று யோசித்துக்கொண்டிருந்தோம். திடீரென்று, 'அம்மா, பாப்பா' என்று சிரித்துக்கொண்டு ஒரு மூலையில் கிடந்த பொம்மையைத் தூக்கிக்கொண்டு ஓடிவந்தாள். இரண்டு நாட்களாக அந்தப் பொம்மை அவள் கண்ணில் படவில்லை; அதனால் இப்பொழுது அதைக் கண்டதும் அத்தனை சந்தோஷம்.

நாங்கள் இருவரும் அவள் செய்கையைக் கண்டு வாய்விட்டுச் சிரித்துவிட்டோம். அழுகையிலிருந்து சிரிப்பிற்கு ஒரே தாண்டாக இமைப்பளவிலே அவள் மாறிவிட்டது அதிசயமாக இல்லையா?

சரோஜா அந்தப் பொம்மையைத் தொட்டிலில் வைத்துத் தாலாட்ட ஆரம்பித்துவிட்டாள். வாயி லிருந்து ஏதேதோ வார்த்தைகள், மழலை மொழிகள் வந்துகொண்டிருக்கின்றன. தாலாட்டுப் பாட்டுப் பாடுவதாக அவள் நினைப்பு. இருந்தாற்போலப் பாட்டுச் சட்டென்று நின்றது. அவள் கீழே உட்கார்ந்து கொண்டு அழ ஆரம்பித்துவிட்டாள். ஏனென்று கேட்டால் பதில் சொல்லவில்லை. கண்ணம்மா சரோஜா வின் தட்டத்தை எடுத்துக்கொண்டு வந்து பக்கத்தில் நின்றதுதான் அதற்குக் காரணமென்று பின்னால் கண்டு பிடித்தோம்.

இப்படித்தான் குழந்தை ஓர் உணர்ச்சியிலிருந்து மற்றொன்றிற்குத் தாவுகிறது. அழுகை, சிரிப்பு, கோபம் எல்லாம் ஒன்றன்மேல் ஒன்று தாவிக் குதித்துக்கொண்டு வருகின்றன.

இதனால் ஒரு கேள்வி பிறக்கிறது. குழந்தை ஒவ்வோர் உணர்ச்சியையும் தன் மனம் பாதிக்கப்படுமாறு ஆழமாக உணர்கிறதா, மேலபோக்காக உணர்கிறதா என்பது அக்கேள்வி. 'ஒவ்வோர் உணர்ச்சியும் ஆழ்ந்து பதியுமானால், அநேகமாக எல்லாக் குழந்தைகளின் உள்ளத்திலும், மறைவுள்ளத்திலும் பலவிதமான கோளாறுகள் ஏற்பட்டிருக்கவேண்டுமே? வாழ்க்கையில் அவ்வாறு காணப்படுவதில்லையே' என்ற ஐயமும் உண்டாகலாம்.

இந்தச் சந்தர்ப்பத்தில் உணர்ச்சிகளைப் பற்றிய சில பொதுவான உண்மைகளை நாம் கவனிக்கவேண்டும். துக்கம் மேலிட்டிருக்கும்போது அழுதுவிட்டால் சிறிது ஆறுதல் ஏற்படுகிறது. ஒருவனுடைய கஷ்டங்களையெல்லாம் மனத்துக்குள்ளேயே வைத்துக்கொண்டு வருந்தாமல் வெளிப்பட யாரிடமாவது கூறிவிட்டால் சற்றுப் பாரம் குறைந்ததைப்போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது. கோபம் வந்தபோது ஏதாவது வசை மொழியைச் சொரிந்துவிட்டால் அது தணிகிறது. அப்படியில்லாமல் உள்ளுக்குள்ளேயே பொருமிக்கொண்டிருந்தால் அது மனிதனைத் தகித்துக்கொண்டே இருக்கிறது.

ஆதலால், உணர்ச்சியை வெளிக்குக் காட்டாமல் அழுத்தி வைத்திருக்கும்போதுதான் அது மனத்தில் ஆழ்ந்து பதியச் சமயம் ஏற்படுகிறது. வாழ்க்கையில் பலவித உணர்ச்சிகளை அடக்கவேண்டி இருக்கிறது. கோபம் வந்தால் உடனே ஒருவன் மற்றொருவனைத் தாக்கிவிட முடியுமா? துக்கம் வந்தால் எந்த இடத்தில் வேண்டுமானாலும் அழுதுவிடலாமா? 'என்ன இவன்

குழந்தைமாதிரி அழுகிறானே; கொஞ்சங்கூட வயசானவன் மாதிரி இல்லையே' என்ற பேச்சுக்குத்தான் இடம் உண்டாகும். ஒருவன் தன்னுடைய நன்மைக்காகவும் சமூகத்தின் நன்மைக்காகவும் பல உணர்ச்சிகளை அடக்கியாள வேண்டியிருக்கிறது.

ஆனால் குழந்தை இன்னும் அந்த வித்தையைக் கற்றுக்கொள்ளவில்லை. அது தன் உணர்ச்சிகளை அவை தோன்றும்போதே வெளிப்படுத்திவிடுகிறது. ஆகையால் குழந்தை அவற்றால் அதிகமாகப் பாதிக்கப்படுவதில்லை என்று கருத இடம் இருக்கிறது. சில பெற்றோர்கள் பயமுறுத்தியோ அடித்தோ குழந்தைகள் தம் உணர்ச்சிகளை அடக்கும்படி செய்துவிடுகிறார்கள். அது குழந்தைக்குத் தீங்காக முடிகிறது. விரும்பத்தகாத உணர்ச்சிகளை உயர்மலர்ச்சி அடையச் செய்வதற்குக் குழந்தைக்கு நயமாக உதவவேண்டுமே ஒழிய, பயத்தால் அவற்றை மனத்தில் அடக்கி அந்தரங்க உள்ளத்தில் அவை பதியும்படி செய்யக்கூடாது.

குழந்தை அழுவதற்கோ சிரிப்பதற்கோ காரணமாயுள்ள விஷயம் சிக்கலின்றிச் சுலபமானதாகவே இருக்கிறது. அதில் மர்மம் ஒன்றும் இல்லை.

சரோஜாவைக் கண்ணம்மா கீழே தள்ளிவிட்டாள் என்று வைத்துக்கொள்வோம். 'கீழே தள்ளிவிட்டாள்' என்ற ஒரே எண்ணத்தால் சரோஜா அழுகிறாள். விழுந்த வலிகூடச் சீக்கிரம் மறைந்துவிடுகிறது. ஆனால் என்னை ஒருவன் கீழே தள்ளிவிட்டானானால் நான் பலவிதமாக எண்ண ஆரம்பிப்பேன். 'அவன் ஏன் என்னைத் தள்ளினான்; என்மேல் கோபமா? பகையா? என்னைக் கீழே விழச்செய்து கையை ஒடிக்க வேண்டுமென்ற ஆசையா? அவனுக்கு நான் முன்பு என்ன தீங்கு செய்தேன்?' என்று இப்படியெல்லாம் நினைப்பு ஓடும். அவன்மேல் கோபம் கொள்ளுவேன். திருப்பி அவனுக்கு என்ன செய்யவேண்டும் என்று ஆலோசிப்

பேன். இப்படியாக வலியுணர்ச்சியோடு பல உணர்ச்சிகள சம்பந்தப்பட்டு விஷயம் சிககலாகி விடுகிறது. வாழ்க்கை அநுபவத்தால் பெரியவாகள தங்களுக்கு ஓா உணாச்சி ஏற்படுங் காலத்தில் அதோடு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகள எலலாவற்றையும் கருதி இன்பமோ துன்பமோ அடைகிறாாகள. குழந்தை அப்படியல்ல. அதற்கு அப்படி அதிகமான அநுபவமும் இல்லே.

இம்மாதிரி உணாச்சிகளெல்லாம் குழந்தை உள்ளததில ஆழ்ந்து பதியாமல் இருப்பது அதற்கு நன்மையாகவே முடிகிறது. மறைவுளளத்தில் ஏற்படும் கோளாறுகளேப்பற்றி அறிஞாகள கூறுவதைப் பாாத்தால் இன்று குழந்தைகள அவற்றினின்று எப்படித தப்ப முடியும் என்று தோன்றும். ஆனல் உணர்ச்சிகள யாவும் குழந்தை உளளததிலே அவவாறு ஆழ்ந்து பதிவதில்லே. நாம்மட்டும் குழந்தையை அடககி, மிரட்டி, அடிக்காமல் இருந்தால, அன்பு வழியையே கடைப்பிடித்தால், குழந்தை தன் உள்ளத்தில் எவவிதக் கோளாறுமின்றி நன்கு வளரும்.

# 16

# இன்ப உணர்ச்சி

பூங்குழந்தை தாயிடம் பால் அருந்துவதில் முதல் முதலில இன்பங் காணுகிறது. அதன் பசி தணிவதால் உண்டாகும் இன்பத்தோடு இதழில் ஒரு தனி இன்ப உணர்ச்சியும் பிறக்கிறது.

பிறகு ஸ்பரிசத்தால் குழந்தை இன்பம் அடைகிறது. யாராவது கையில் வைத்திருந்தால், மடியில் வைத்திருந்தால் அல்லது மார்போடு அணைத்துக் கொண்டால் அதற்குச் சந்தோஷம் உண்டாகிறது. குழந்தை தன் சிறு கைகால்களைத் தொட்டுப்பார்த்தும் இன்பம் கொள்ளும். மற்ற உறுப்புக்களையும் தொட்டுப் பார்க்கும்.

இப்படிக் குழந்தை தனது அவயவங்கள் ஒவ்வொன்றையும் ஆராய்ச்சி செய்துவரும்போது தனது குறியையும் தொட்டு அதனால் ஒருவித உணர்ச்சியைப் பெறுகிறது.

சில குழந்தைகளிடத்தில் இந்தப் பழக்கம் வெகு நாட்கள் வரையில் நீடிக்கும். இதைக் கண்டு பெற்றோர்கள் அநாவசியமான பயமோ கவலையோ கொள்ள வேண்டியதில்லை.

குறியைத் தொடுவதைக் கண்டு பெற்றோர்கள் அதைப் பெரிய குற்றமென்று கருதுவதாலும், அப்படிச் செய்யாதிருக்குமாறு மிரட்டுவதாலுமே பல மனக் கோளாறுகளுக்கு இடம் ஏற்படுகிறது. அவர்களுடைய செய்கையால் அப்பொழுதே அதைப்பற்றி ஒரு ரகசியம் சூழ ஆரம்பித்துவிடுகிறது. குழந்தைக்கு

வயது வரும்போது அதன் உள்ளத்தில் ஏற்படும் புதிய உணர்ச்சிகளைத் தாராளமாகத் தாயிடமோ, தந்தையிடமோ எடுத்துரைத்து அவர்கள் ஆலோசனையைப் பெறவும் இயலாதபடி இது தடைசெய்துவிடுகிறது.

குழந்தையின் வயதிற்கேற்ற நல்ல விளையாட்டு, ஆட்டம், பாட்டு, மணலில் சிற்றில் கட்டுதல், களிமண் உருவங்கள் செய்தல், சித்திரம் வரைதல் என்று இப்படிப்பட்ட சந்தோஷமான காரியங்களில் குழந்தையை ஈடுபடச் செய்தால் இச்செய்கை தானாகவே நின்று விடும். குழந்தை புதிய புதிய இன்பங்களை அடையச் சந்தர்ப்பம் அளிக்க வேண்டும்.

சில சமயங்களில் இப்படியெல்லாம் செய்தபிறகும் இப் பழக்கம் நீடிக்கலாம். அப்பொழுது பெற்றோர்கள் குழந்தைமுன் தாம் நடந்துகொள்வது சரியா? என்பதை ஆராய்ந்து பார்க்க வேண்டும். அவர்களுடைய நடத்தையே பெரும்பாலும் இதற்குக் காரணமாக இருக்கலாம். அநாவசியமான கட்டுப்பாடுகளாலும் தடைகளாலும் துன்புறுகின்ற குழந்தைகள் இம்மாதிரியான பழக்கங்களால் ரகசியமாக இன்பம் அடைய முயல்கின்றன. தாய்ப்பால் குடிப்பதில் தடையேற்பட்ட குழந்தை அந்த இன்பத்தை நாடி ஏங்குகிறது. அதற்குப் புதியதொரு நல்ல இன்பம் கிடைக்காவிட்டால் விரலைச் சுவைத்துத் தனது விருப்பத்தைப் பூர்த்தி செய்துகொள்ளுகிறது. அதையும் பலவந்தமாகத் தடுத்தால் குறியைத் தொடுவதனால் உண்டாகும் இன்பம் முதலியவைகளில் அதன் மனம் செல்கிறது.

அச்செய்கையும், அது பிறருக்குத் தெரியக் கூடாது என்ற கவலையும், தவறான காரியத்தைச் செய்வதாக நினைத்து உண்டாகும் பயமும் சேர்ந்து குழந்தை உள்ளத்திலே பலவிதக் கோளாறுகளை உண்டாக்கி விடுகின்றன.

இப் பழக்கத்தைத் தடைப்படுத்துகிறவர்கள் மீது பகைமை உணர்ச்சியும், அவர்களைக் கொன்று விடுவதைப் போன்ற பகற் கனவுகளும் உண்டாகின்றன. பிற்கால வாழ்க்கையில் குழந்தை காம உணர்ச்சி மிகுந்திருப்பதற்கும் இது ஏதுவாகிறது.

ஆகையால் இந்தப் பழக்கத்தை மாற்ற முயலும் பெற்றோர்கள் மிக்க ஜாக்கிரதையோடு இருக்கவேண்டும். முதலில், இப் பழக்கம் குழந்தையிடம் இருப்பதைத் தெரிந்துகொண்டதாகவே காட்டிக்கொள்ளக் கூடாது. அதைப்பற்றிப் பெரியதொரு ஆரவாரமும் செய்துவிடலாகாது. புதிய புதிய இன்பங்களைக் குழந்தைக்கு ஏற்படுத்துவதாலும், முன்னிலும் அதிகமாக அன்பு காட்டுவதாலும் இதை மாற்ற முயலவேண்டும்.

சில சமயங்களில் இப் பழக்கம் அதிகமாக இருப்பதற்கு வேறு சங்கடங்களால் குழந்தை துன்புறுவது காரணமாக இருக்கும். ஒரு குழந்தை வேறொரு குழந்தையிடம் அதிகமான பயம் கொண்டிருக்கலாம்; அல்லது வேலைக்காரரிடம் பயங்கொண்டிருக்கலாம். இப்படிப்பட்ட பய உணர்ச்சி உள்ளத்திலே பெரும் பாரமாக ஆகிறது; அப்பொழுது குழந்தை குறியைத் தொட்டு அடையும் இன்ப உணர்ச்சியால் அதைத் தணித்துக்கொள்ள விரும்புகிறது. ஆதலால் இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து நயமாக இப் பழக்கத்தைப் போக்குவதற்கு வேண்டியதைச் செய்யவேண்டும்.

குழந்தை இயல்பாக வளர்ந்தால் ஏற்ற பருவங்களில்தான் அவற்றிற்கு உண்டான உணர்ச்சிகளைப் பெறும். நமது செய்கையே சில உணர்ச்சிகள் விரைவில் தோன்றுவதற்கு உதவியாகிவிடுகிறது. ஒரு குழந்தை, தான் இவ்வுலகத்திற்கு வந்த விதத்தை அறிந்து கொள்ள ஒரு கேள்வி கேட்கிறது. அதைப் பெரிய குற்றமாகக் கருதி அடக்கிவிடுகிறார்கள். அதற்குத் தெரியும்படி சுலபமான முறையில் விளக்கியிருந்தால்

அதைப்பற்றி ஒரு ரகசியம் இருந்திருக்காது. இப்படிப் பல ரகசியங்கள் சேர்ந்துகொண்டு குழந்தை உள்ளத்தைப் பாதிக்கின்றன.

குழந்தைகள் உறங்கும் அறையிலேயே தாய் தந்தையர்களும் சயனிக்கக்கூடாது. குழந்தை உள்ளத்தில் கோளாறுகளைத் தடுக்கவேண்டுமானால் பெற்றோர்களுக்குத் தனிப் படுக்கையறை வேண்டும். இது எல்லோருக்கும் சாத்தியமாவதில்லை. அப்படிச் சாத்தியப்படாமல் ஒரே அறையில் படுக்க நேரிடினும் பெற்றோர்களுக்கும் குழந்தைகளுக்கும் இடையே ஒரு தட்டியோ வேறு மறைவோ இருக்கும்படி செய்து கொள்ளலாம். குழந்தைகள் உறங்கிக்கொண்டிருந்தாலும் அந்த அறையில் நடக்கும் காரியம் அவற்றின் உள்ளத்தில் ஒருவாறு புலனாகிறது என்று சில அந்தரங்க உள்ள ஆராய்ச்சியாளர்கள் கூறுவதை நோக்குமிடத்தில் இது விஷயமாகப் பெற்றோர்கள் எவ்வளவு கவனம் செலுத்தவேண்டும் என்பது தெளிவாகும்.

இவற்றையெல்லாம் அறிந்து நடந்தால், குழந்தை இயல்பாக, நன்கு வளரும்.

## 17

# பொய் சொல்லுதல்

குழந்தை பொய் சொல்லுகிறது. பெற்றோர்களுக்கு மனசு உடைந்துபோகிறது. 'பொய் சொல்லிப் பழகிக்கொண்டதே; இது உண்மையைக் கடைப்பிடித்து உயர்ந்த வாழ்வு பெறவேண்டுமே' என்று அங்கலாய்க்கிறார்கள். 'பொய் சொல்லப்படாது' என்று குழந்தைக்குக் கடுமையான நீதிபோதனை செய்கிறார்கள். சில சமயங்களில் தண்டனையும் கிடைக்கிறது.

குழந்தைப் பொய்யைப்பற்றிய உண்மையைச் சரிவர அறிந்துகொண்டால் பெற்றோர்கள் தமது முறைகளை மாற்றிக்கொள்வார்கள்.

யோசித்துப் பார்த்தால் குழந்தைக்குப் பொய் சொல்லும் பழக்கம் பெற்றோர்களின் செய்கையாலேயே பல சமயங்களில் ஏற்பட்டுவிடுகிறது. நான் கைக்கடிகாரத்தை மேஜைமேல் வைக்கிறேன். கண்ணம்மா சட்டென்று அதை எடுத்து ஆவலோடு பார்க்கிறாள். கீழே போட்டு விடுவாளோ என்று எனக்குக் கவலை. கொடு என்று கேட்டாலோ, "அப்பா, பார்த்துவிட்டுக் கொடுக்கிறேன்" என்கிறாள். அந்தச் சமயத்தில் தாய் வருகிறாள். கடிகாரத்தைப் பிடுங்கிக்கொள்கிறாள். "உஸ், அதோ காக்காச்சி கொண்டுபோய்விட்டது" என்று சொல்லிப் பின்னால் மறைத்துக்கொள்கிறாள்.

இப்படிக் காக்காச்சி கொண்டுபோவதாகப் பல சந்தர்ப்பங்களில் கூறுகிறார்கள். தாய் சொல்வது பொய் என்று நாளடைவில் குழந்தை தெரிந்துகொள்கிறது.

குழந்தை ஜடைபோட்டுக்கொள்ள மறுக்கிறது. தாய், "வா, ஜடைபோட்டுக்கொண்டு கடை வீதிக்குப் போவோம்" என்கிருள். ஆனால் கடைவீதிக்குப் போவதில்லை. சிறு குழந்தை ஜடைபோட்டு முடிவதற்குள் இந்த விஷயத்தைப் பல தடவைகளில் மறந்துவிடும். ஆனால், இந்தத் தந்திரம் திரும்பத் திரும்ப உபயோகமாகும்போது பொய்யென்று வெளியாகி விடுகிறது.

சரோஜா பால் குடிக்க மறுக்கிருள். தாய், "இந்தா கண்ணம்மா, நீ குடித்துவிடு" என்று அவளிடம் நீட்டுகிருள். அவள், "எனக்கு வேண்டாம்" என்று சொல்லுகிருள்.

"குடிப்பதுபோல வாயில் வைத்துக்கொள்; அப்போ சரோஜா கேட்பாள்" என்று தாயார் தனது தந்திரத்தில் கண்ணம்மாளையும் துணையாகக் கூட்டிக் கொள்கிருள்.

இந்தப் பொய் விளையாட்டு அவளுக்குப் பிடிக்கிறது. சரோஜா உடனே பாலை வாங்கிக் குடிக்க ஆரம்பிக்கிருள். 'அக்காளுக்குக் கொடுக்கக் கூடாது' என்று அவள்மேல் பொறாமைப்பட்டுத்தான் குடிக்கிருள்.

பொறாமையும், பொய்யும் ஒருங்கே பிறக்கின்றன.

ஒரு நாள் ஏதோ காரியமாக நான் வெளியூருக்குப் புறப்பட்டேன். கண்ணம்மா தானும் வருவதாக ஆர்ப்பாட்டம் செய்தாள். கடைசியாக, "இல்லை நான் போகவில்லை; இதோ அந்தப் பக்கம் போய்விட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றுவிட்டேன். வெகு சாமார்த்தியமாக நடந்துகொண்டதாக எனக்கு எண்ணம்.

கண்ணம்மாளுக்கு வயது ஐந்து. ஆதலால் அவள் விஷயத்தை மறக்கவில்லை. இரண்டு நாள் கழித்து நான் திரும்பிவரவே அவள் என் பொய்யை அறிந்துகொண்டு விட்டாள்.

ஆராய்ந்து பார்த்தால் இப்படிப் பல வகைகளில் நாமே குழந்தைக்குப் பொய் சொல்லக் கற்றுக் கொடுத்துவிடுகிறோம்.

தினசரி நமது வாழ்க்கை வியாபாரத்தில் நாம் சொல்லும் பொய்யைப் பெரிய குழந்தைகள் அறிந்துகொள்கின்றன. அப்பா இப்பொழுதுதான் வீட்டுச் செலவுக்கு என்று பத்து ரூபாய் கொடுத்து விட்டுப் போகிறார். தாய் தன் கைப்பெட்டியில் அதை வைப்பதையும் குழந்தை பார்த்துக்கொண்டிருக்கிறது. அடுத்த வீட்டுப் பாட்டி அப்பொழுது வந்து இரண்டு ரூபாய் கைமாற்றுக் கேட்கிறாள். "நாளைக்கே திருப்பிக் கொடுத்து விடுகிறேன்" என்கிறாள் பாட்டி. ஆனால் அவள் சொல்லுவது சுத்தப் பொய் என்று தாய்க்குத் தெரியும். "என் கையில் ஒரு காசுகூட இப்போ இல்லையே; இன்னும் அவர் சம்பளம் வாங்கவில்லையாம். காலையில்கூடக் கேட்டேன்" என்று பதில் கொடுக்கிறாள். குழந்தை கேட்டுக்கொண்டே நிற்கிறது.

கொத்தவரங்காய் விற்றுக்கொண்டு ஒருத்தி வருகிறாள். "படி என்ன விலை?" என்று கேட்கிறாள் தாய். அவள் முன்தானையைப் பிடித்துக்கொண்டு குழந்தை நிற்கிறது.

"படி இரண்டணா."

"கம்மி இல்லையா?"

"இல்லை. ஒரே விலைதான்."

"சற்று முன்னாலே ஒருத்தி வந்தாள்; அவள் ஒண்ணரை அணாவுக்குப் போட்டேன்னாளே?" இது பொய் என்று குழந்தைக்கு ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் தெரியாமலா போகும்?

குழந்தை மற்றவர்களைப் பார்த்துத்தான் எல்லா விஷயங்களையும் பழகிக்கொள்கிறது. தாய் தகப்பனை

அதற்கு முக்கிய உதாரணம். நாமே பொய் சொல்ல உதாரணமாக இருந்துவிட்டுப் பிறகு குழந்தை பொய் சொல்லுகிறதே என்று அங்கலாய்ப்பதால் என்ன பயன்?

பொய் சொல்லுவது இயல்பாக ஏற்பட்ட ஒரு குணமல்ல; பழக்கத்தாலேயே உண்டாகிறது.

ஹார்ட் ஷார்ன், மே (Hart Shorne, May) என்னும் இரு பண்டிதர்கள் பதினாயிரம் குழந்தைகளைக் கொண்டு இது சம்பந்தமாகப் பல சோதனைகள் செய்து பார்த்தார்கள். அதன்பின் அவர்கள், 'யாரும் இயற்கையிலேயே பொய்யனாக இருப்பதில்லை' என்ற முடிவுக்கு வந்திருக்கிறார்கள்.

ஆகையால், குழந்தை பொய் சொல்லுமானால் அதன் காரணத்தை ஆராய்ந்து அதை மாற்ற முயல வேண்டும். உண்மையைச் சொல்லும்போது மகிழ்ச்சி காட்டவேண்டும். அப்படிச் சொல்லக் குழந்தைக்கு உத்ஸாகம் அளிக்கவேண்டும்.

குழந்தை ஏதாவது ஒரு சிரமமான சந்தர்ப்பத்தைச் சமாளிக்கப் பொய்சொல்லலாம். அந்தப் பொய்யால் அதற்கு நன்மை ஏற்பட்டால் பிறகு அதையே சொல்ல விரும்பும். அதனால் அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தை ஆராய்ந்து பார்ப்பது மிக அவசியமாகிறது.

குழந்தை சொல்லும் பொய்களில் பல வகை உண்டு. விளையாட்டாகச் சொல்லும் பொய் ஒன்று. "அப்பா, ஒரு நாய் வந்தது. கல்லெடுத்து ஓங்கிப் போட்டேன். ஓடியே போச்சு" என்றாள் கண்ணம்மா. நாயைக் கண்டால் வெகு பயம் அவளுக்கு. அவள் பத்து மாதக் குழந்தையாக இருந்தபோது நாய்க்குட்டி ஒன்றைக் கையில் வாங்கிக்கொள்ளும்படி அவளை வற்புறுத்தினார்கள். நாய்க்குட்டியைப் பேசாமல் விட்டிருந்தால் கண்ணம்மா மெதுவாக அதனுடன் பழகியிருப்பாள்.

ஆனால் இப்படித் திடீரென்று வற்புறுத்தவே அவள் பயந்துவிட்டாள். அன்றுமுதல் நாய என்றால் அவ ளுக்கு ஒரே கிலி. இப்பொழுது நான் அவளை மெச்சிக் கொளள வேணடுமென்று இந்தப் பொய்யைச் சொலலுகிறாள்.

'இப்படிச சொலலும்போது அதை லக்ஷ்யம் செயயாமல் வேறு வகையில குழந்தையின் கவனததைத மாற்றிவிடு; புகழ் மொழியையோ, மகிழ்ச்சிக குறி யையோ காணாததால குழந்தை தானாகவே இதை விட்டு விடும்' என்கிறார்கள் மனததத்துவ சாஸ்திரிகள். கதையை மகிழ்சசியோடு கேடகிறாாகள் என்றால்தான் குழந்தை மேலும் மேலும் அதைச சொல்ல முயலும்.

2. கலகத்தால் பொய்சொல்லுதல்: குழந்தை ஏதாவது ஒரு சம்பவததைப்பற்றிச் சொல்லும்போது அதைப் பலவாறு குறுக்கு விசாரணை செய்தால் நடந்தது நடந்தமாதிரியே சொல்லுவதில் தவறிவிடும். 'நிச்சயமாக இப்படியா நடந்தது?' என்று அதட்டினு லும் அதற்கு ஒன்றும் ஓடாது. பெரியவாகளே குழப்ப மடைந்து விடுவார்கள்; பிறகு குழந்தையை அதற்காகக் கணடிககலாமா? இம்மாதிரிக கலகககததால் கூறுவதைப் பொய என்றே கொள்ளலாகாது.

3. தற்பெருமைக்காகப் பொய் சொல்லுதல்; சுமார் ஆறு ஏழு வயதுள்ள இரு சிறுமிகள் பேசிக் கொள்கிறாாகள. ஒருததி சொலகிறாள்: "எங்கள் வீடடிலே பெடடி நிறையச் சொக்காய இருககிறது" என்று. "எங்க வீடடிலே நாலு பெடடி நிறைய இருக் கிறது" என்று மற்றவள் ஜவாப் கொடுககிறாள.

"எங்க வீட்டிலே நூறு பெடடி நிறைய இருக் கிறது" என்று மாற்றினாள் முதல் சிறுமி.

அதிகப்படுத்திச் சொல்வது இதோடு நிற்கவில்லை. 'வீட்டிற்கும் வானத்திற்கும் எங்கள் வீடடில் சொக்

காய் இருக்கிறது'' என்றுதான் கடைசியில் அவர்கள் வாதம் முடிவடைந்தது.

4. துன்பம் உண்டாக்கச் சொல்லும் பொய்: பக்கத்து வீட்டுப் பையன் வளளி நாயகிக்கு அடிக்கடி தொந்தரவு கொடுக்கிறான். அதனாலே அவன்மேல் அவளுக்கு ஒரு வெறுப்பு. சில சமயங்களில் அந்தப் பையன் தன்னைக் கீழே தள்ளிவிட்டதாகத் தாயிடம் புகார் செய்வாள். தாய் அவனைத் திட்டவேண்டுமென்ற விருப்பத்தால் இப் பொய் பிறக்கிறது.

5. தப்பை மறைக்கச் சொல்லும் பொய்: குழந்தை தப்புச் செய்துவிடுகிறது. அதை மறைக்காமல் உண்மையைச் சொல்லிவிட்டால் கண்டிக்கிறோம். பொய் சொல்லி மறைத்துவிட்டால் குழந்தை தப்பித்துக் கொள்ளுகிறது. திட்டையோ அடியையோ தவிர்க்க வேண்டுமானால் பொய் சொல்வதுதான் வழியாக முடிகிறது.

குழந்தையைப் பொய் சொல்லாமல் தடுக்க மேயர் (Meyer) என்பவர் சில விதிகள் வகுத்திருக்கிறார்:

1. குழந்தையிடம் உண்மையே பேசவேண்டும். குழந்தையின் முன்னிலையில் யாரிடமும் பொய் சொல்லக் கூடாது.

2. குழந்தைக்குப் பொய்சொல்லக் கற்றுக் கொடுக்கக்கூடாது; விளையாட்டாகவும் ஆகாது.

ஒரு கிழவி வருவாள்; ''அம்மா குழந்தை, உங்க வீட்டிலே எனக்குச் சோறு போட்டாயா?'' என்பாள்.

''சோறு இல்லேன்னு சொல்லு; எல்லாம் சாப்பிட்டாச்சுன்னு சொல்லு'' என்று தாயோ வேறு யாரோ சொல்லிக்கொடுப்பார்கள். குழந்தை சொல்லும். எல்லோரும் சிரித்து மகிழ்வார்கள். இது தவறு.

3. குழந்தையைக் கடுமையான தண்டனைக்கு உள்ளாக்கக் கூடாது. தண்டனையின் பயமே பொய் சொல்லத் தூண்டுகிறது.

4. குழந்தையின் கற்பனைசக்தியை விருத்திசெய்வது நல்லதென்றாலும் அதை ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும். கற்பனையிலேயே அதிகக் கவனம் செலுத்தி உண்மைக்கும் உண்மையில்லாததற்கும் குழந்தைக்கு வித்தியாசம் தெரியாமல் செய்துவிடக்கூடாது.

5. 'இதைச் செய்யாதே; அதைத் தொடாதே?' என்று இப்படிப் பல கட்டுப்பாடுகளைக் குழந்தை மீது சுமத்தாமல் கூடியவரையில் குறைத்துக்கொள்ள வேண்டும். அதிகத் தடைகளிருந்தால் அவற்றைக் கடைப்பிடிப்பதில் சிரமம் ஏற்பட்டுப் பொய்சொல்ல நேரிடும்.

6. குழந்தையிடம் திருப்பித் திருப்பிச் சாமர்த்தியமான கேள்விகளைப் போடக்கூடாது. அவற்றால் கலக்கமடைந்து அது பொய் சொல்ல ஆரம்பிக்கும். பிறகு தெரிந்தே பொய் சொல்லுவதற்கு இது வழிகாட்டும்.

7. பொய் சொல்லுவதால் ஏற்படும் தீமைகளைப் பற்றிக் குழந்தைக்கு உபதேசம் செய்யாமலிருப்பது நல்லது. சிறிய தவறுதலாலும் என்ன என்னவோ கெடுதல் உண்டாவதாக நினைத்துக் குழந்தை பயந்து பல வகையான மனக் குழப்பங்களுக்கு உட்படவேண்டாம்.

8. உண்மையே பேசுவதை நாம் பலவகைகளிலும் ஆதரிக்க வேண்டும். அதில் குழந்தைக்கு உற்சாக மளிப்பதே மிக நல்ல முறை.

குழந்தை உண்மையை ஒளிக்காமல் சொல்லும் போது அது செய்த தப்புக்காகக் கடிந்துகொள்ளக

கூடாது. உண்மையைச் சொன்னதற்காக அதைப் போற்ற வேண்டும். அப்படிப் போற்றியபின், 'இனி மேல் அவ்வாறு செய்யாதே' என்ற மாதிரி சில சொற்களே குழந்தையைத் திருத்துவதற்குப் போது மானவையாகும். தண்டனையால பெற முயன்ற பலனை இம் முறையால் மிக நிச்சயமாகப் பெறலாம்.

பொய்சொல்வது தாழ்ந்தது என்ற மனப்பான் மையைக் குழந்தையிடம் வளாககவேணடும். நாம் பொயசொலலாதிருப்பதும் உணமையைக கூறியிடத துக் குழந்தையைப் போற்றுவதுமே இதற்குச சிறந்த வழிகளாகும்.

# 18

# பிறருக்கு உதவி

ஒரு நாள் பிச்சை கேட்டுக்கொண்டு கிழவி ஒருத்தி வாசலில் நின்றாள். "போ, ஒன்றுமில்லை, போ" என்று கண்ணம்மா கடுமையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

"தாயே, கொஞ்சம் கஞ்சியாவது ஊத்துங்கோ."

மறுபடியும் கண்ணம்மாளிடமிருந்து அதே வார்த்தை வருகிறது.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. "இந்தச் சிறு குழந்தைக்கு இப்படிப்பட்ட மனப்பான்மை ஏற்படுவானேன்?' நான் யோசித்துப் பார்த்தேன். ஒன்றும் புலப் படவில்லை. வீட்டிலுள்ள மற்றவர்கள் செய்கையைக் கவனித்துப் பார்த்தேன். புதிய வேலைக்காரியால இந்த மனப்பான்மை கண்ணம்மாளுககுப் பிடிபட்டிருப்பது தீர விசாரித்த பிறகு தெரியவந்தது. அவள் பிச்சை யெடுப்பவாகளைக் கணடால் சீறி விழுவது வழக்கம். யாருக்கும் ஒரு பிடி அன்னம் போடமாடடாள். அவளைப் பாாத்துக் குழந்தை பழகிக்கொணடது.

உடனே வேலைக்காரியைத் தனியாக அழைத்து, "இனிமேல யார் வந்து பிச்சை கேட்டாலும் இல்லை என்று சொலலக்கூடாது. ஒரு வேளை போடச் சௌகரி யப்படாவிட்டாலும் நல்ல வாாத்தையாவது பேசி அனுப்பு" என்று எச்சரிககை செய்தேன். அதன்பின் பல நாட்கள் கணணம்மாளிடமே அன்னம் கொடுத்துப் பிச்சைக்காரருக்குப் போடும்படி செய்தோம்.

இப்பொழுது அவள் தனது முதல் பழக்கத்தை விட்டுவிட்டாள். பிச்சை போடுவதில் அவளுக்குப் புதிய இன்பம் தோன்றியிருக்கிறது.

குழந்தை உள்ளத்தில் இரக்கம், தாராள சிந்தனை முதலிய அருங்குணங்கள் பெருகி வளரவேண்டும். அதற்குப் பெற்றோர்களும், குழந்தையுடன் நெருங்கிப் பழகுகிறவர்களும் உதாரணமாக விளங்கவேண்டும். வெறும் உபதேசத்தால் எந்தக் குணமும் பிடிபட்டு விடாது. பெற்றோர்கள் பிறருக்கு உதவி செய்வதில் பெரிதும் ஆசைகொண்டிருப்பார்களானால், குழந்தையும் அவ்வாறு இருக்கத் தானாகவே கற்றுக்கொள்கிறது.

எனக்கு ஒரு கிழவரைத் தெரியும். நல்ல ஹாஸ்யச் சுவை மிகுந்தவர். அவர் ஒரு குழந்தையைத், 'தாராளம்' என்று கூப்பிடுவார். "வாம்மா, தாராளம், உங்கள் வீட்டிலிருந்து எனக்கு ஒரு வெற்றிலை கொண்டாம்மா" என்பார். குழந்தை, "எங்க வீட்டிலே இல்லை" என்று சொல்லிக்கொண்டே ஓடிவிடும்.

அவர் சிரித்துக்கொண்டே சொல்லுவார்: "அந்தக் குழந்தை அதன் தாயாரைப்போலவே ரொம்ப தாராளம்" என்று.

குழந்தை பிறருக்குக் கொடுப்பதில் இன்பம் காண வேண்டும். தனது விளையாட்டுக் கருவிகளைப் பிற குழந்தைகளுடன் சேர்ந்து உபயோகித்து மகிழப் பழக வேண்டும். பொருளைச் சேகரித்துப் பத்திரப்படுத்தி வைத்துக்கொள்ளும் இயல்பூக்கமும் குழந்தைக்கு உண்டு. அதை முழுவதும் குலைத்துவிடாமல், அதோடு கூடவே பிறருக்கு உதவுவதில் உள்ள சந்தோஷத்தையும் குழந்தை உணரும்படி செய்யவேண்டும். வேறு ஒரு குழந்தை ஒரு பொருளைப் பெறுவதால் அடையும் மகிழ்ச்சியை ஒவ்வொரு குழந்தையும் அறிந்துகொள்கிறது. நாமும் அந்த மகிழ்ச்சியை எடுத்துக் காட்டிக்

குழந்தையின் நற் செய்கைக்காக அதைப் போற்ற வேண்டும்.

சில பெற்றோர்கள் விலை அதிகமான விளையாட்டுக் கருவிகளை வாங்கிக் கொடுத்துவிட்டு, பிறகு அவை எங்கே தொலைந்து போகுமோ என்று கவலைப்பட்டுக் கொண்டிருப்பார்கள். அவற்றை வெளியில் எடுத்துப் போகக் கூடாது என்று குழந்தையைத் தடுப்பார்கள். ‘வெளியே கொண்டு போனால் பக்கத்து வீட்டுப் பையன் பிடுங்கிக்கொண்டு போய்விடுவான்’ என்பார்கள்.

இது குழந்தையைச் சுயநலத்தில் ஆழ்த்திவிடுகிறது. தனது இன்பம், தனது காரியம் என்று மட்டும் குழந்தை சதா நினைத்து வளரக்கூடாது. பிறருக்கு உபகாரம் செய்யவும், பிறர் இன்பப்படுவது கண்டு, அதில் மகிழ்ச்சி பெறவும் அது பழகிக்கொள்ளவேண்டும். ஏழைக்கு இரங்குதல், பிறரோடு பகிர்ந்து அநுபவித்தல் முதலிய அருங்குணங்கள் ஒவ்வொரு குழந்தைக்கும் இயற்கையாகவே அமைந்துவிடவேண்டும்.

# 19

# பணியாற்றுதல்

குழந்தை பிறரைப் பார்த்து அவர்களைப்போல் பேசவும் காரியங்கள் செய்யவும் பழகிக்கொள்கிறது. ராஜலக்ஷ்மிக்கு வயது நான்கு. அவள் மணலில் வீடு கட்டிச் சோறாக்கி விளையாடுகிறாள். மரப்பாச்சியைத் தொட்டிலில் இட்டுத் தாலாட்டுகிறாள். அதைக் குளிப்பாட்டுகிறாள். தண்ணீர் ஊற்றுவதாகப் பாவனை செய்து கொண்டு, 'மொட்ட மொட்ட'ச்சு என்று சொல்லுகிறாள். சில சமயங்களில் ஒரு பாத்திரத்தில் தண்ணீரைக் கொண்டுபோய் ஊற்றுகிறாள். 'சோப்பு வேண்டும்' என்று தாயாரிடம் வம்பு செய்கிறாள்.

தண்ணீரை அவள் கண்ட இடத்திலெல்லாம் சிந்துகிறாளே என்று அவள் மேல் சீறி விழக்கூடாது. குழந்தைக்கு இம்மாதிரியான பணிகள் செய்வதில் உள்ள ஆர்வத்தை, வேண்டுமானால் உபயோகப்படுத்திக் கொள்ளலாம். அவளுடைய வட்டிலை அவளே கழுவி வைக்கவும், படுக்கையைப் போட்டுக்கொள்ளவும் விட்டு விடலாம். இன்னும் இவைபோன்ற சிறு காரியங்களைக் குழந்தை தானே செய்ய விரும்பும்போது தாராளமாக அனுமதிக்க வேண்டும். ஒழுங்காகப் பெரியவர்களைப் போல் செய்யவில்லையே என்று அதைத் தடுத்துவிடக் கூடாது. எடுத்தவுடனே எப்படிப் பெரியவர்களைப் போலச் செய்ய முடியும்? குழந்தைக்கு இன்னும் தனது கைகளின்மேல் சரியான ஆதிக்கம் வரவில்லை; கால்கள் தடுமாறுகின்றன; எடுத்ததைப் பல தடவை கீழே போட்டுவிடுகிறது. இப்படிச் செய்வதால் நாம் பொறுமையை இழந்துவிடக் கூடாது. அன்போடு நன்கு

காரியங்களைச் செய்வதற்குச் சிறிது துணை புரிந்தால் குழந்தை விரைவில் எதையும் கற்றுக்கொள்ளும்.

தாய் தனது வேலைகளை ஒழுங்காகச் செய்தால் குழந்தையும் அதுபோலவே செய்ய முயலும். கொஞ்ச நாட்களில் நன்கு செய்வதில் வெற்றியும் அடையும். வீட்டில் ஒவ்வொரு பொருளையும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் தாய் ஒழுங்காக வைப்பாளானால், குழந்தையும் அவ்வாறே செய்து பழகும்.

குழந்தைக்குப் பணி செய்வதில் மிக ஆர்வம் இருக்கிறது. எனக்கு வேண்டும்போது தண்ணீர் கொண்டு வந்து கொடுப்பதிலும், வேறு சிறு சிறு காரியங்கள் செய்வதிலும் சரோஜாவுக்கு வெகு பிரியம். நான் பள்ளிக் கூடத்திலிருந்து திரும்பியவுடன் எனது குடையை அவள்தான் வாங்கிக் கொண்டுபோய் வைக்கிறாள்.

குழந்தைக்கு ஒரு பணி சொல்லும்போது அன்போடு சொல்லவேண்டும்; ஆணையிடக்கூடாது. கட்டளையிடுவதைக் குழந்தை விரும்புவதில்லை.

குழந்தை நமக்குக் கீழ்ப்படியவில்லையே என்று ஆத்திரப்படக்கூடாது. 'இப்பொழுதே நாம் சொல்லிக் கேட்கவில்லை என்றால், பிறகு வயதுவந்தால் எப்படிக் கேட்கும்?' என்று பலர் நினைக்கிறார்கள். அதனால் குழந்தைப் பருவத்திலேயே சொன்னபடியெல்லாம் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்துவிடவேண்டும் என்று அவர்கள் தீர்மானிக்கிறார்கள். கண்மூடித்தனமாகக் கீழ்ப்படிந்து நடக்கும்படி செய்வதில் ஒரு சிறப்பும் இல்லை; அம்மாதிரி நடக்கவேண்டுமென்று எதிர்பார்ப்பதும் தவறு. குழந்தையின் சுயமரியாதைக்கும் அது விரோதம்.

ஒன்றைச் செய்யத் தொடங்குமுன் குழந்தை அதைப்பற்றித் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறது.

"கண்ணம்மா, அந்த விதையை அப்படியே காகிதத்தோடு எடுத்துவாம்மா" என்றேன் நான். வீட்டுக்கு முன்னால் பூந்தோட்டம் தயாராகிக்கொண்டிருந்தது.

"எதுக்கு விதை?"

"விதையை இந்தப் பாத்தியில் போட்டுத் தண்ணீர் விட்டால் முளைக்கும்."

"முளைச்சா?"

"செடி பெரிதாகிப் பூ நிறையப் பூக்கும்."

"நானும் சரோஜாவும் தலையில் வச்சுக்கலாமா?" என்று சந்தோஷமாகக் கேட்டுக்கொண்டே விதையை எடுத்துவர ஓடினாள்.

குழந்தை இப்படிக் கேட்டுக் கேட்டு விஷயம் தெரிந்துகொள்ள விரும்புகிறது. அதற்கு நாம் ஊக்கம் அளிக்க வேண்டும். "எடுத்துக்கொண்டு வான்னு வா" என்று அரட்டி மிரட்டி அடக்கிவிட்டால், அதன் அறிவு வளர்ச்சி பாதிக்கப்படுகிறது.

பெற்றோருக்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்று குழந்தை இயல்பாகவே உணரும்படி செய்ய வேண்டும். கட்டுப்பாடுகளையும் கீழ்ப்படிதலையும் அதன் மேல் சுமத்தினோமானால் அதன் வளர்ச்சி குன்றிவிடும்.

கீழ்ப்படியவில்லையே என்று சில பெற்றோர்கள் குழந்தையை அடிக்கிறார்கள். குழந்தைக்கு அதனால் தீமையே விளையும். பெற்றோர்கள் பெரியவர்களாக இருப்பதால் தனது சக்தியற்ற நிலைமையைக் கண்டு அடிப்பதாகக் குழந்தை நினைத்து வருந்துகிறது; அதற்குப் பெற்றோரிடம் முழு நம்பிக்கை போய்விடுகிறது. பிற்காலத்திலே அவர்களுக்குக் கீழ்ப்படிய வேண்டுமென்ற எண்ணமும் குறைந்து போகும். அக்குழந்தை வேறு குழந்தைகளையோ, பொம்மை முதலியவற்றையோ அடிக்க ஆரம்பிக்கும். பெற்றோர்மேல் பழிவாங்கும் எண்ணத்தால் இது ஏற்படுகிறது.

குழந்தையின் நடத்தை சரியானதல்ல என்றால் அதை ஒரு சமயத்தில் கண்டித்துவிட்டு, மற்றொரு சமயத்தில் அநுமதித்தால் குழந்தை தன் தப்பை

உணர்ந்துகொள்ள முடியாது. தாய் ஏதாவது காரியம் சொல்லுவாள். தகப்பன் அதைச் செய்யவேண்டாம் என்பார். "கண்ணு, அந்தக் குங்குமச் சிமிழை இப்படி எடு" என்பாள் தாய். "மாட்டேன்னு சொல்லு. உனக்கு வேலைக்காரனான்னு கேள்" என்பார் தந்தை. 'குழந்தை யார் பேச்சைக் கேட்கும் பார்க்கலாம்?' என்று இவர்களுக்குள்ளே இன்று போட்டி. மற்றொரு நாள் குழந்தை கீழ்ப்படியவில்லை என்று கோபமும் ஆத்திரமும் கொள்ளுவது நியாயமா? கீழ்ப்படியவேண்டுமென்று நீதி உபதேசம் செய்வதோ அடிப்பதோ சரியல்ல.

குழந்தைகள், வீட்டில் அதிகத் தொந்தரவு கொடுப்பதாகச் சில பெற்றோர்கள் நினைக்கிறார்கள். 'வெளியே போய் விளையாடாமல் வீட்டிற்குள்ளேயே இருந்துகொண்டு விஷமம் செய்கிறது' என்று அதன் மேல் சலிப்புக்கொள்ளுகிறார்கள். குழந்தை விளையாடப் போகிறது. ஆனால் எத்தனை நேரம் அப்படி வெளியி லேயே இருக்கும்? ஒரே விஷயத்தில் அதிக நேரம் கவனம் செலுத்தக் குழந்தையால் முடியாது.

வீட்டிற்குள் நுழைகிறது. ஆனால் அது சும்மா இருக்கமுடியாது. ஏதாவது செய்துகொண்டே இருந் தாக வேண்டும். குழந்தை தூங்குகிற சமயம் போக மற்றச் சமயத்தில் ஏதாவது செய்துகொண்டே இருக் கும். பெரியவர்களைப்போல உட்கார்ந்திருக்க அதனால் இயலாது. அதன் இயல்பை அறிந்து சிறு சிறு குற்றேவல்களுக்கு அதை உபயோகப்படுத்தினால் குழந்தை சந்தோஷமாகச் செய்யும். "ராஜா, அந்தக் கத்தியை எடுத்துவா; காய் நறுக்கி வைக்கலாம்" என்றால் அவனுக்கு வெகு குஷி. தாய்க்கு உதவியாக ஒரு காரியம் செய்வதில் குழந்தைக்குத் திருப்தி உண்டா கிறது. இப்படிச் செய்தோமானால், குழந்தை தொந்தரவு கொடுப்பதாக எண்ண இடமே இருக்காது.

## 20

# பாடங் கற்பித்தல்

குழந்தை படிப்பில் மிகத் திறமையோடு விளங்க வேண்டும் என்று பெற்றோர்களுக்கு ஆசை. அதனால் ஐந்து வயது ஆகும் முன்பே தாங்களாகவே பாடம் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்துவிடுகிறார்கள்.

'எங்கே, அ, ஆ, சொல்லு; ஒன்று இரண்டு சொல்லு' என்றெல்லாம் உத்ஸாகமாகப் பாடம் நடக்கும். குழந்தையும் அதை ஒரு விளையாட்டாகவே செய்கிறது. உயிரெழுத்துக்கள், ஒன்று முதல் பத்து வரை எண்கள் ஆகியவற்றைக் குழந்தை ஆச்சரியப்படத் தக்கவாறு கற்றுக்கொள்கிறது. அவற்றைத் திருப்பிச் சொல்லச்சொன்னால் மகிழ்ச்சியோடு சொல்லுகிறது. சில பெற்றோர்கள், உறவினர்கள் வரும்போது குழந்தையின் படிப்புத் திறமையை அவர்களுக்குக் காட்டச் சொல்லிப் பெருமை கொள்வார்கள்.

ஆனால் குழந்தைக்கு எழுத்துக்களைப்பற்றியோ எண்களைப்பற்றியோ ஏதாவது தெரியுமா என்றால் தெரியாது. ஏதோ சொன்னதைத் திருப்பிச் சொல்லுகிறது; அவ்வளவுதான். சரோஜா (வயது இரண்டு) ஒன்று இரண்டு சொல்லுகிறாள். ஆனால், ஆறு என்றால் அதன் குறிப்பு அவளுக்குத் தெரியாது. ஐந்தைவிட ஆறு பெரியது என்பதுகூடத் தெரியாது. இந்த அறிவெல்லாம் பின்னால்தான் ஏற்பட முடியும். வஸ்துக்களோடு சம்பந்தப்படாத எண்ணையோ எழுத்தையோ குழந்தை அறியமுடியாது என்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

ஆகையினால், அ, ஆ சொல்லும்போதோ ஒன்று இரண்டு சொல்லும்போதோ வரிசை தவறுவது குழந்தைக்குச் சாதாரணம். அதனால் குழந்தைக்கு மூளை இல்லை என்றோ, மந்த புத்தி என்றோ சொல்லுவது சரியல்ல. அப்படிச் சொல்லுவதுதான் குழந்தையின் மனதில் தன்னைப்பற்றியே தாழ்மை உணர்ச்சியை உண்டாக்கி வாழ்க்கையில் முன்னேற்றத்திற்குப் பாதகம் செய்கிறது.

பக்கத்து வீட்டிலே ஐந்து வயதுப் பையன் ஒருவன் இருக்கிறான். அவன் முன்பெல்லாம் எங்கள் பள்ளிக்குத் தினமும் தவறாது சந்தோஷமாக வந்துகொண்டிருந்தான். காரணம் என்னவென்றால் இங்கே ஆரம்ப வகுப்புகளுக்கு விளையாட்டு மூலமாகவே கல்வி கற்பிக்கப்படுகிறது.

அந்தப் பையனுடைய தந்தைக்கு எங்கள் முறை அவ்வளவு பிடிக்கவில்லை. விரைவில் வரிசைக் கிரமமாகப் புத்தகத்தில் உள்ளவாறு பையன் படித்துக்கொள்ள வேண்டுமென்று அவருக்கு வெகு ஆசை. அதனால் அவரே இரவில் பையனுக்கு ஒன்று இரண்டு சொல்லிக் கொடுக்க ஆரம்பித்தார். பல நாட்களுக்குப் பிறகும் பத்து வரையில் சொல்லுவதில் அந்தப் பையன் ஆறையும், ஒன்பதையும் விட்டுவிட்டே சொல்லிக்கொண்டிருந்தான். ஒரு நாள் தகப்பன் எப்படியும் அவனைச் சரியானபடி சொல்ல வைத்துவிடவேண்டுமென்று ஆரம்பித்தார். ஒன்றில் இருந்து ஆரம்பித்துப் பத்துவரையில் சொல்வதில் ஆறையும், ஒன்பதையும் அழுத்தி அழுத்திச் சொன்னார். பிறகு அந்த எண்களை மட்டும் தனியாகச் சொல்லச் சொல்லி மறுபடியும் வரிசையில் சேர்த்துச் சொல்லச் சொன்னார்.

பையன் திருப்பித் திருப்பி அதே தப்பைச் செய்து கொண்டிருந்தான். ஐந்து, ஏழு என்பான். தகப்பன்,

'ம்..ம்' என்று அதட்டுவார். ஆனால் பையனுக்கு ஒன்றும் விளங்குவதில்லை.

"ஆறு" என்று கர்ஜிப்பார் தந்தை.

"ஆறு, ஏழு, எட்டு, பத்து" என்பான் சிறுவன். நேரமாக ஆகத் தகப்பனுடைய பொறுமையெல்லாம் காற்றில் போய்விட்டது. அதனால் தவறு செய்யும் போதெல்லாம், ஆறு, ஒன்பது என்று திருத்துவதோடு நில்லாமல், தொடையில் ஒவ்வோர் அடியும் போட ஆரம்பித்துவிட்டார்.

பையன் விம்மி விம்மி அழுதுகொண்டே திரும்பத் திரும்பப் பழையமாதிரியே சொல்லிக்கொண்டிருந்தான்.

கடைசியாக, "போ, மூதேவி, உனக்கெங்கே படிப்பு வரப்போகிறது?" என்று ஆசீர்வாதம் செய்துவிட்டு அவர் எழுந்து போய்விட்டார்.

இப்பொழுது பள்ளிக்கூடம் என்றால் அந்தப் பையனுக்கு ஒரே வெறுப்பு. படிப்பு என்றால் அடி என்று அவன் எண்ணிக்கொண்டிருக்கிறான்போல் இருக்கிறது.

குழந்தை அறிவு பெறுவதிலே இயற்கைக்கு மாறாக அவசரப்படுவது தீமையாக முடியும். பருவத்திற்கு ஏற்றவாறு அப்பொழுது பெறவேண்டிய அறிவையும் அனுபவங்களையும் அது அடையும்படி செய்வதே அறிவுடைமையாகும். குழந்தைப் பருவத்தில் பெறவேண்டிய அனுபவங்கள் பல இருக்கின்றன. அவை முழுவதும் கிடைத்துவிட்டால் குழந்தை மேற்கொண்டு முன்னேறுவதற்குத் தயாராக இருக்கும். ஒன்று இரண்டு சொல்லுவதுபற்றி யாரும் கவலைப்படவேண்டியதில்லை. கொஞ்சம் வயதுவந்தவுடன் அது சாதாரணமாகச் சிரமமின்றி வந்துவிடும்.

குழந்தைக்குச் சுலபமான குழந்தைப் பாட்டுக்களைச் சொல்லிக்கொடுக்கலாம். சந்தம் முதலிய ஓசை

இன்பத்தால் குழந்தை மகிழ்ச்சியடையும். நேர்முகமாக இயற்கைக் காட்சிகளையும், ஜீவப் பிராணிகளையும் கவனித்து அறிவைப் பெருக்கிக்கொள்ளக் குழந்தைக்கு உதவலாம்; வாணப்படங்களும் இவ்வகையில் உதவியாக இருக்கும்.

ஆனால் குழந்தைக்கு அதன் பருவத்திற்கு ஏற்றவற்றைக் கற்பிக்கிறதும் ஒரு விளையாட்டுப்போலவே இருக்கவேண்டும்.

## 21

# கேள்விகள்

முழு நிலா இரவு; சந்திரிகையை அநுபவித்துக் கொண்டு நிலாமுற்றத்தில் அமர்ந்திருக்கிறோம். திடீரென்று நிலா கருமேகத்திற்குள் மறைகிறது.

"மாமா, நிலாவை எங்கே காணோம்?" என்று ஆரம்பித்தாள் வள்ளி நாயகி. அவளுக்கு ஐந்து வயது ஆகப்போகிறது.

"மேகம் மறைத்திருக்கிறது" என்றேன்.

"மேகம்னா என்ன?"

"அதுதான் நமக்கு மழை கொடுக்கிறது."

"மழை என்னத்துக்கு?"

"மழை இல்லாதபோனா செடி வளருமா? செடியெல்லாம் வாடிப்போகும்."

"மேகம் எப்படி நிலாக்கிட்டப் போச்சு?"

கேள்விகளுக்கு முடிவே இல்லை.

இன்னொரு சமயம். ராஜாமணி கேட்கிறான் (வயது நான்கு).

"அதென்ன அது?"

"அதுதான் ரெயில."

"அதென்ன ரெயில—அப்படின்னா?" (அவன் இது வரையில ரெயில் பார்த்ததில்லை.)

"அதுதான் ரெயில வண்டி; எல்லோரும் ஏறிக் கொண்டு போறது."

"வண்டின்னா, காளை எங்கே?"

"இந்த வண்டிக்குக் காளை வேண்டியதில்லை; அதோ முன்னால் தெரியுதே—அதுதான் என்ஜின். அது இழுத்துக்கொண்டு போகும்."

"எங்கே போகிறது?"

"கோயமுத்தூருக்கு."

"நாமும் போகலாமா?"

"போகலாம்."

"மாமா, ரெயில் வண்டியை இங்கே ஓட்டிவரச் சொல்லுங்க; நாமும் போகலாம்."

இக் கேள்விகள் பரவாயில்லை. ஒருவாறு பதில் சொல்ல முடிகிறது. சில கேள்விகள் நம்மைத் திண்டாட வைத்துவிடுகின்றன.

"யாரு பேசறது?" இது கண்ணம்மா கேள்வி, ரேடியோவில் பேச்சுக் குரல் கேட்டு.

"ரேடியோ அண்ணு."

"அவரைக் காணுமே?"

"அவர் இங்கே இல்லை; திருச்சியில் இருக்கிறார்."

"அந்தப் பெட்டிக்குள்ளேயா?"

"இல்லை; அங்கே திருச்சிராப்பள்ளியில்."

"எங்கே காணமே?"

"அவர் தூரத்திலே இருக்கிறார்."

"தூரத்திலிருந்தா, இங்கே எப்படிப் பேசறது?"

குழந்தைகள் என்ன என்னவோ கேட்கின்றன; ஓயாது கேள்வி. ஏதாவது ஒன்றைப் பார்த்துவிட்டால் போதும்; உடனே அதைப்பற்றி விசாரணை ஆரம்பித்து விடும்.

கேள்விமேல் கேள்வி கேட்டுத் தொந்தரவு கொடுக்கிறதே என்று சிலர் குழந்தையை மிரட்டுவார்கள்; அதன் உற்சாகத்தைக் குலைப்பார்கள். இல்லாவிட்டால் அதைக் கவனிக்கமாட்டார்கள். இது பெருந் தவறு.

அறிவைத் தேடிக்கொள்ள உத்ஸாகத்தோடு கேட்கும் குழந்தைக்குப் பொறுமையாகப் பதில் சொல்லவேண்டும். கேள்வியினால் அதன் அறிவு வளர்கிறது. நாம் அதற்கு ஊக்கமளித்தால் வாழ்க்கையில் அக்குழந்தை எதையும் தீர விசாரித்து அறியும் ஆற்றல் பெறுகிறது. கேள்வி கேட்பதிலுள்ள உத்ஸாகத்தை முளையிலேயே கிள்ளிவிட்டால் குழந்தையின் ஆராய்ச்சி மனப்பான்மை தேய்ந்து போகும்.

குழந்தையை இஷ்டம்போல விட்டால் சங்கடமான கேள்விகளைக் கேட்கிறது; பதில் சொல்லமுடியாத கேள்விகளைக் கேட்கிறது; நமக்குத் தெரியாத ஒன்றைப் பற்றிக் கேட்டுவிடுகிறது என்று சிலர் எண்ணிக் கேள்வி கேட்பதை ஆதரிப்பதில்லை. சில கேள்விகளுக்குப் பதில் கொடுப்பது சிரமந்தான். சிலவற்றைக் குழந்தை அறிந்து கொள்வதும் முடியாது. ஆனால் கூடியவரையில் குழந்தையின் நிலைமைக்கு ஏற்றவாறு சுலபமான முறையில் பதில் சொல்லியே தீரவேண்டும். நமக்குத் தெரியாததைத் தெரிந்துவந்து சொல்லவேண்டும். அறியாமையை மறைத்துக்கொண்டு ஏதாவது பதில் கொடுக்கக் கூடாது. பொதுவாகக் குழந்தையின் கேள்விகளுக்கு அது தெரிந்துகொள்ளும் வகையில் தவறில்லாத பதிலைக் கொடுப்பது அதன் உள்ள வளர்ச்சிக்கு அநுகூலமானது என்பதை அனைவரும் மனத்தில் கொண்டிருக்க வேண்டும்.

குழந்தையின் கேள்விகளை இரு முக்கியமான பிரிவுகளாகப் பிரிக்கலாம். விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவலால் பிறப்பவை; பயத்தாலும், சந்தேகத்தாலும் தோன்றுபவை என.

குழந்தை புதிதாக ஒன்றைப் பார்க்கிறது. முதலில் ஆச்சரியப்படுகிறது; அது ஏதாவது தனக்குத் தீங்கு விளைக்குமோ என்று பயப்படுகிறது. பிறகு அதைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறது. குழந்தை கேட்

கும் கேள்வியில் அறிவை வளர்த்துக்கொள்ளும் ஆர்வத்துடன் தனது பாதுகாப்பைப்பற்றிய உணர்ச்சியும் கலந்தே இருக்கிறது. இந்தப் பய உணர்சசி குழந்தைக்கும் தெரியாமல அந்தரங்கமாக இருககிறது.

கணணம்மா வந்தாள். பிடில் பக்கத்தில இருந்தது. அதைத் தொட்டுப் பார்ததுவிட்டு, 'இது என்ன?' என்று கேட்டாள். நான் உடனே எடுதது வாசிததேன். திடீரென்று பிறந்த ஒலியால அவள் பயந்து ஓடி விட்டாள். நான் அவள கேட்ட கேளவிக்குப் பதில் சொன்ன விதத்தால அவள் பய உணாச்சி நீஙகவிலலை.

சில சமயங்களில குழந்தை எலலோருடைய கவனததையும தன்பால் இழுககவே கேளவி கேட்கும். இக கேளவிகள அறிவு வளாசசிக்காகப் பிறப்பவையலல. தனனை மற்றவாகள கவனிக்கவேணடும் என்பதில் குழந்தைக்குப் பிரியமுணடு. அதனால குழந்தை தன் பெற்றோாகளின் முழுக கவனததையும் தன்னிடம் இழுகக முயலும். எனன கேள்வி கேட்டால அதைச சுலபமாகச செயயமுடியும் என்பதையும் அது விரைவில அறிநது கொள்ளும்.

குழந்தை சதா கேள்வி கேட்கும். கேட்பதில் அதற்குள்ள உதஸாகததை எவவிததததிலும் நாம் குறைக்கக் கூடாது. பொறுமையோடு அதற்கு எளிமையான முறையில பதில் கொடுககவேணடும். ஆராய்சசி மனப்பான்மை குழந்தையிடம் வளர அனைவரும் நன்கு உதவ வேணடும்.

## 22

# விளையாட்டு

நான்கு குழந்தைகள் திண்ணையில் விளையாடுகின்றன. கண்ணம்மா (ஐந்து வயது) அவர்களுடன் சேர்ந்து விளையாடுகிறாள். ஒருத்தி வீடு கட்டுகிறாள்; மணல் வீடு. ஒருத்தி சோறு சமைக்கிறாள். மாவரைக்கிறாள் ஒருத்தி. ஒரு பையன் பால் கறந்துகொண் டிருக்கிறான்.

பாலகிருஷ்ணன் (வயது இரண்டு) அவர்களுடன் தான் இருக்கிறான். ஆனால் அவன் விளையாட்டு, தனியாக நடக்கிறது. சேர்ந்து விளையாடுவதில் இன்னும் அவனுக்கு இன்பம் பிறக்கவில்லை.

குழந்தை விழித்திருக்கும்போதெல்லாம் ஏதாவது செய்துகொண்டே இருக்கும். ஒரு நிமிஷம் சும்மா இருப்பதில்லை. எப்பொழுதும் ஓடி ஆடித் திரிந்துகொண்டே இருக்கிறது. அதைச் சும்மா இருக்கச் சொல்லக் கூடாது. வாழ்க்கைக்கு வேண்டிய அநுபவங்களை அது பெற்றுக்கொண் டிருப்பதை நாம் தடுக்கலாகாது.

சரோஜா பொம்மையைத் தொட்டிலில் வைத்துத் தாலாட்டிக்கொண் டிருந்தாள். திடீரென்று அதை எடுத்து இரண்டு அடி கொடுத்தாள். 'பேசாமே தூங்கு' என்று மிரட்டினாள். அடுத்த நிமிஷம் பொம்மையை மார்போடு அணைத்துக்கொண்டு, 'வாண்டாம்மா, வாண்டாம்மா, அழாதே' என்று கொஞ்ச ஆரம்பித்து விட்டாள்.

ராஜாமணி கைத்தடியைத் தன் கால்களுக்கு இடையில் வைத்துக்கொண்டு குதிரை சவாரி செய்கிறான். குதிரைக்கு நல்ல அடி கிடைக்கிறது.

குழந்தை தன் வெறுப்புணர்ச்சிகளையெல்லாம் இவ்வாறு வெளிப்படுத்தி ஆறுதல் அடைகிறது. அதன் வளர்ச்சிக்கு இது மிக அவசியம். உள்ளுக்குள்ளேயே வெறுப்புணர்ச்சிபோன்ற விரும்பத்தகாத உணர்ச்சிகளை வைத்து அழுத்திக்கொண்டிருப்பது நல்லதல்ல. ஆகையால் குழந்தையின் விளையாட்டில் நாம் குறுக்கிடக் கூடாது. நமக்கு அற்பமாக, விநோதமாகத் தோன்றும் பல விளையாட்டுக் காரியங்கள் அதற்கு மிக முக்கியமாக இருக்கும்.

கணணம்மா அழுதுகொண்டு ஓடி வருகிறாள். எதிர் வீட்டுச் சீனு அடித்துவிட்டான் என்று புகார் சொல்லுகிறாள். கொஞ்ச நேரத்திற்குள் அவனோடேயே சேர்ந்து கொண்டு சந்தோஷமாக விளையாடுகிறாள். அவர்களுக்குள்ளேயே சிநேக உணர்ச்சி ஏற்பட்டுவிடுகிறது. இந்த மாதிரி அநுபவங்கள் குழந்தைக்கு நிறைய வேண்டும். ஒருவருக்கு ஒருவர் சண்டையில்லாமல் சமாதானமாகக் கலந்து பழகக் கற்றுக்கொள்ள வேண்டும்.

ஒரு நாள் மாலை. குழந்தைகள் தும்பி பறக்க ஆரம்பித்தார்கள். 'ஆட்டுக்கும் மாட்டுக்கும் தண்ணீர், ஐயன் குதிரைக்கும் தண்ணீர்' என்று கூவிக்கொண்டே சுற்றிச் சுற்றி வந்தார்கள். ஒரு குழந்தைக்குப் புதிய யோசனை ஒன்று வந்துவிட்டது. இரண்டு கையிலும் மண்ணை அள்ளி அதை ஒழுகவிட்டுக்கொண்டே சுற்ற ஆரம்பித்தது. எல்லோரும் அதைப் பின்பற்றினார்கள். நீட்டிய கைகளிலிருந்து மண் ஒழுக ஒழுகச் சுற்றுவதைப் பார்க்க நன்றாகத்தான் இருந்தது. ஆனால், முடிவில் சரோஜாவும் கணணம்மாளும் காலிலிருந்து தலை வரையில் ஒரே மண மயமாக வந்து சேர்ந்தார்கள். தாயின் பொறுமைக்கு இப்படி அடிக்கடி சோதனை ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். அவள் பல காரியங்களை நாள் முழுவதும் கவனிக்கவேண்டி இருப்பதால் மாலை நேரத்தில் அலுத்துப் போயிருப்பாள். வெளியே

போகலாமென்று புறப்பட்டுக்கொண் டிருப்பாள். ஆனால் அன்போடு இதைச் சகித்துக்கொள்ளத்தான் வேண்டும்.

விளையாட்டாகவே குழந்தை தன் கலை உணர்ச்சி முதலியவைகளையும் வளர்த்துக்கொள்கிறது. வாழ்க்கைக்கு வேண்டிய அவசியமான அநுபவங்களைப் பெறும்படி குழந்தைக்குப் பொறுமையோடு உதவி செய்வதுதான் அறிவுடைய பெற்றோர்களின் கடமை.

ஒரு வயது, ஒன்றரை வயதுக் குழந்தைகள் தனியாக விளையாடினாலும் தங்கள் விளையாட்டை மற்றவர்கள் பார்ப்பதை விரும்புகின்றன. அதனால்தான் அவை பெரிய குழந்தைகள் விளையாடும் இடத்திலே போய்த் தனித்து விளையாடுகின்றன. குழந்தைகள் கூடிப் பழகச் சந்தர்ப்பம் இருக்கவேண்டும் என்று இதனாலும் தெரிகிறது.

ஒன்று முதல் மூன்று வயதுக்கு உட்பட்ட குழந்தைகளின் விளையாட்டெல்லாம் பொருளையும், சுற்றுப் புறத்தையும் சோதனை செய்யும் விளையாட்டாகப் பெரும்பாலும் அமைகின்றன. மூன்று முதல் ஏழு வயதுவரையில் குழந்தைகள் பெரியவர்களைப்போலக் காரியங்களைச் செய்து விளையாடுகின்றன. நமக்கு அற்பமாகத் தோன்றுபவை அவைகளுக்குப் பெரியனவாக இருக்கும். ஆதலால் அதில் நாம் குறுக்கிட்டு இடைஞ்சல் தரலாகாது.

குழந்தைகளோடு பெரியவர்கள் சேர்ந்து விளையாடினால், இந்த விஷயத்தை மனத்தில் நன்கு பதிய வைத்துக்கொள்ளவேண்டும். குழந்தை செங்கல்லால் கோபுரம் அமைத்தாலோ, மணலில் வீடு கட்டினாலோ அதை அழித்து விட்டு அவர்கள் தாங்களே செய்ய ஆரம்பிக்கக் கூடாது. குழந்தையைவிடத் தாங்கள் திறமை வாய்ந்தவர்கள் என்று ஒவ்வோர் அம்சத்திலும்

வெளிப்படுத்தினால் அது குழந்தைக்குப் பாதகமாகவே முடியும். குழந்தைக்குத் தன்னைப்பற்றித் தாழ்மை உணர்ச்சி ஏற்படவும் இது காரணமாகும். நாமே குழந்தைகளுக்கு விளையாட்டுக்களில் புதிய புதிய யோசனைகளைக் கொடுத்துக்கொண்டிருக்கக் கூடாது; குழந்தைகள் தாங்களாக எண்ணி அதன்படி செய்ய வழியில்லாது போகும். அவற்றின் முறையும் எண்ணமும் அவ்வளவு போற்றத்தக்கன அல்லவானாலும் நாம் குறுக்கிடாமல் இருப்பதே நல்லது. குழந்தைகளுக்கு வேண்டிய விளையாட்டுக் கருவிகளையும் சௌகரியத்தையும் கொடுத்துவிட்டு பெரியவர்கள் விலகி இருப்பதே மிகச் சிறந்தது.

விளையாட்டுக் கருவிகள் விலையுயர்ந்தவைகளாக இருக்கவேண்டியதே இல்லை. சாதாரணமானவை போதும். கடைகளிலே இன்று காட்சியாக வைத்திருக்கும் பொம்மைகளையும், டாங்கி, ஆகாயவிமானம் முதலியவைகளையும் வாங்கிக் கொடுக்க இயலவில்லையே என்று யாரும் கவலைப்படவேண்டியதில்லை. குழந்தைக்கு நல்ல வர்ணம் தீட்டப்பெற்ற பொருள்களின்மேல் ஆசை அதிகம். பெற்றோர்கள் சிறிது சிரமம் எடுத்துக்கொண்டால் குறைந்த செலவில் தாங்களே பல விளையாட்டுக் கருவிகளைச் செய்து கொடுத்துவிடலாம்.

குழந்தைக்குப் புதிய புதிய கருவிகள் வேண்டும். ஒன்றின்மேலேயே அது பல நாட்களுக்கு ஆசை கொண்டிருக்காது. புதியதொன்றைக் கண்டால் பழையது எவ்வளவு மதிப்புடையதாயினும், அதை எறிந்துவிட்டுப் புதியதையே அது நாடும்.

இந்த விளையாட்டுக் கருவிகளோடு மணல், செங்கல், மண்ணாலோ உலோகத்தாலோ செய்த பாத்திரங்கள். மூங்கிலால் செய்த சிறு தட்டங்கள் எல்லாம் வேண்டும். இவைகளே மிகவும் முக்கியம். களிமண்ணைப் பிசைந்துகொடுத்தால், குழந்தை சந்தோஷமாகப்

பொம்மை செய்து விளையாடும். பையன்களுக்குச் சிறு மணவெட்டி, வண்டி, துணிப்பந்து, குண்டு இவை போன்ற கருவிகள் அதிக இன்பங் கொடுக்கும். இவற்றிற்கெல்லாம் அதிகம் செலவு செய்ய வேண்டிய தில்லை.

குழந்தைகள் தாங்களாகவே, நமக்கு அற்பமாகத் தோன்றும் பல பொருள்களைச் சேகரித்து வைத்துக் கொள்ளும். அவற்றையெல்லாம் வைத்துக்கொள்ளக் குழந்தைக்கு ஒரு தனிப் பெட்டியோ, இடமோ இருப்பது நல்லது.

குழந்தைகளின் விளையாட்டுக்கள் அவற்றிக்கு மிக முக்கியமானவை. அதே சமயத்தில் நமக்கும் அவை இன்பக் காட்சியாக இருக்கின்றன.

வள்ளிநாயகி மூங்கிலால் பின்னிய ஒரு சிறு கூடையைத் தலையில் வைத்துக்கொண்டு, 'வெத்திலே வாங்கலே, வெத்திலே!' என்று கூவிக்கொண்டு வருகிறாள்.

"வெற்றிலை என்ன விலை!"

"ரெண்டு ரூபாய்" என்று சொல்லிச் சிரிக்கிறாள். தலையில் மணலை வாரிப் போட்டுக்கொண்டபோது ஏற்பட்ட தாயின் சலிப்பெல்லாம் இப்பொழுது பறந்து விடாதா?

# 23

# பழக்கம்

'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்பது பழமொழி. ஏதாவது ஒரு பழக்கம் ஏற்பட்டு விட்டால் அதை மாற்றுவது சுலபமல்ல. அதிலும் குழந்தைப் பருவத்திலேயே அமைந்த பழக்கம் இயல்பான தன்மை போலவே ஆகிவிடுகிறது. ஆகையினால் இளமையில் பிடிபடும் பழக்கங்களில் நாம் அதிகக் கவனம் செலுத்த வேண்டும். விரும்பத்தகுந்தவைகளை உண்டாக்கவும் மற்றவை உண்டாகாதவாறு தடுக்கவும் நல்லதான அன்பு வழி காண வேண்டும்.

தினந்தோறும் நாம் பல காரியங்களைச் செய்ய வேண்டி இருக்கிறது. அவை உடல், உள்ள ஆரோக்கியத்திற்கு அத்தியாவசியமானவை. அப்படிப்பட்ட காரியங்களை இயல்பாகவே தனித்த யோசனை எதுவுமின்றிக் குறித்த காலத்தில் செய்வது நல்லது. இதனால் எண்ணித் துணிய வேண்டிய பணிகளுக்கு அதிக நேரமும் கிடைக்கும்.

உணவு உறக்கம் மலஜலக் கழிவு முதலியவற்றில் இளமையிலிருந்தே ஒரு குறிப்பிட்ட காலம் பழக்கமாகி விட்டால் அது பெரு நன்மையாக முடியும். இதைப் போன்றே இன்னும் பல நல்ல பழக்கங்களும் இருக்கின்றன. குழந்தைப் பருவத்திலிருந்தே சுத்தமாக இருத்தல், அழகாக எக்காரியத்தையும் செய்தல் முதலிய பழக்கங்களும் அமையவேண்டும். இளமையில் இவை ஏற்பட்டுவிட்டால் பிறகு இவற்றை அசைக்கவே முடியாது.

சுத்தமும் ஒழுங்கும் ஆரம்பத்திலிருந்தே பிடிபட வேண்டும். இவற்றிற்குப் பெற்றோரின் உதாரணமே சிறந்த வழியாகும். தாயும் தந்தையும் சுத்தமாக இரா விட்டாலும், அவர்கள் பொருள்களையும் புத்தகங்களை யும் ஒழுங்கில்லாமல தாறுமாருக வைத்திருந்தாலும் குழந்தைக்குச சுததமும் ஒழுஙகும் பிடிபடா. குழந்தை தனது விளையாட்டுச் சாமான்களையும் பொம்மைகளை யும் சுத்தமாகவும் ஒழுங்காகவும் குறிப்பிட்ட இடததில வைததுப் பழகவேண்டும்

உணவருந்தப் போகுமுன் கைகாலகளைச் சுத்தம் செய்துகொளவதை என்றும் மாருத பழக்கமாக உண டாக்கவேண்டும்.

பழக்கத்தை உண்டாக்குவதில் சில விஷயங்களை மனத்தில் வைததுககொள்வது நலலது. அதை உண்டாக்கும் முறை எப்பொழுதுமே சந்தோஷமாக இருக்கவேண்டும். சில குழந்தைகளுக்கு முகததைக் கழுவுவதென்ருல் பிடிப்பதே இலலை. காரணம்: ஆரம் பததில் இதை நயமாகச செயயாததுதான். முகததில் ஒரே அழுககாக இருக்கிறதே என்ற மனககஷ்டததால் தாய்மார சற்றுக் கடினமாவே சுத்தம் செய்வதை நான் பாரததிருககிறேன். பிறகு குழந்தை ஒவவொரு தடவையும் முகத்தைக் கழுவுவதெனருல மாட்டே னென்று பிணங்கிக்கொள்கிறது. எந்தப் பழக்கமும் இன்பகரமாக ஆரம்பிககப்படவேண்டும்.

ஒரு பழக்கம் தவருது பிடிபடவில்லையே என்று அநாவசியமான கவலைகொள்ளுவதும் கூடாது. பெற் ருேரகள கவலைப்படவேண்டுமென்றே குழந்தை சரிவரச் செய்யாமல் இருக்கும்.

மலஜலக் கழிவைக் குறிப்பிட்ட காலத்தில் செய்யும் படி பழக்கப் பல முறைகள் சொலலப்படுகின்றன. அவற்றை ஆராயந்தால் பெற்ருேரின் சௌகரியததிற்

காகவே அவை ஏற்பட்டனபோல் தோன்றுகின்றன. எதிர்பாராத சமயத்தில எதிர்பாராத இடத்தில் குழந்தை அசுத்தம் செயதுவிட்டால் தாய்க்குச் சங்கடந் தானே. அதனால் குழந்தை படுக்கையை ஈரமாக்கி விடுகிறதே என்றோ பலர் முன்னிலையில் அசுத்தம் செய்துவிடுகிறதே என்றோ அதைக் கடிந்துகொள்ளக் கூடாது. அப்படிக் கடிந்துகொள்வதால் குழந்தையின் உள்ளத்தில் குழப்பம் ஏற்படும்.

குறித்த காலத்தில் இயற்கை உபாதைகளைச் சரிவரக் கழித்துவந்தால குழந்தை அநேகமாக நோயில்லாமல வளரும். இப் பழக்கத்தை உண்டாக்கவேண்டும்.

இம்மாதிரியான பழக்கங்களைச சிறு வயதிலேயே உண்டாக்கிவிடுவதால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. என்றாலும் இங்கே நாம் கவனிக்கவேண்டிய ஒரு விஷயமும் உண்டு. குறிப்பிட்ட காலத்தில தூங்க வைத்தல், இயற்கை உபாதைகளைத தீர்க்கச் செய்தல் முதலிய காரியங்களைச செய்தல பெற்றோரின் சௌகரியத்திற்கே என்று கருதாமல குழந்தையின் நோக்கிலிருந்தே அவற்றைக் கவனிக்கவேண்டும். குழந்தையின உடல் நிலை, மன நிலை முதலியவற்றைக் கவனியாமல் காலக்கிரமத்தை மட்டும் கடைப்பிடிப்பது தவறாகும். குழந்தையின் சௌகரியத்திற்கும் வளர்ச்சிக்குந்தான் குறிப்பிட்ட நேரமும் பழக்கமுமே அன்றிக் குழந்தையை அவற்றிற்கு அடிமையாக்கி விடுவதற்கலல. இன்று வயிறு சற்று மந்தமாக இருந்தால் அதற்கு ஏற்றவாறு காலத்தையோ உணவின் அளவையோ மாற்றத்தான் வேண்டும். இதுபோலவே வேறு பழக்கங்களிலும் குழந்தையின் நிலையை அனுசரித்து அவ்வப்போது மாறுதல்கள் செய்யவேண்டும்.

பொதுவாகக் கூறுமிடத்துக் குழந்தைக்கு நல்ல பழக்கங்கள் பிடிபட நாம் உதவவேண்டும். தவறுது

அநுஷ்டிப்பதால் பழக்கங்கள் இயல்பான தன்மை போலவே என்றும் நிலைத்துவிடும். ஆதலின் எவ்வளவுக்கு எவ்வளவு விரைவாக இவற்றைப் பிடிபடச் செய்கிறோமோ அவ்வளவுக்கும் பலன் உண்டு. ஆனால் குழந்தையின் சக்திக்கு ஏற்றவாறு பழக்கங்களைப் புகுத்தவேண்டும். அதுவும் அன்பும் நயமும் கலந்த முறையிலேயே நடைபெற வேண்டும்.

# 24

# கலை உணர்ச்சி

உலகத்திலே குழந்தை சிறந்து விளங்கவேண்டுமென்று நாம் ஆசைப்படுகிறோம். 'வள்ளிநாயகி ஒரு பெரிய சங்கீத வித்வானியாக வேண்டும்' என்று ஆசைப்படுகிறார் அவள் தந்தை. 'முன் காலத்தில தமிழ் நாட்டில் பல பெண புலவர்கள் இருக்கிறாகளே. அவாகளைப் போல அவள் ஆகவேணடும' என்கிறாள் தாய்.

சில பெற்றோர்கள் தமக்கு எந்தக் கலையிலே அல்லது எந்தத் துறையிலே விருப்பம் இருக்கிறதோ அதில் தமது குழந்தைகள் சிறந்து விளஙகவேணடுமென்று ஆசைப்படுகிறார்கள்.

குழந்தை உயாந்த கலைத்திறமை கொணடிருக்க வேணடுமென்று விரும்புவது நல்லதுதான். ஆனால் அதன் உளளப்போக்கைப்பற்றிக் கவனியாது நமது விருப்பத்தையே அதன்மேல சுமத்துவது பெருந்தவறு. எடுத்த எடுப்பிலே, 'நான் என் பையனை ஓா ஓவியன் ஆககுவேன்' என்று கஙகணம் கட்டிக்கொணடு காரியம் செய்வது ஆபததாக முடியும். அவனுக்கு வைததியத்தில் விசேஷத் திறமை இருககலாம். அதை உணர்ந்து கொளளாது நாம் நடந்தால இரணடுஙகெடடுப் போவதற்கு இடம் ஏற்படும்; இயலபுககு விரோதமாகச் செயவதால் உளளததில பல கோளாறுகள் உணடாகவும் வாயப்பு உணடாகிறது

முயற்சியினால் எத்துறையில் வேண்டுமானாலும் சிறிதளவு பயிற்சி உணடாக்கலாம். ஆனால் அதில் உயாந்த ஸ்தானம் வகிக்கச்செய்ய முடியாது. ஆதலால்

குழந்தையின் திறமையை அறிந்து அதில் முன்னேற உத்ஸாகம் அளிப்பதே அறிவுடைமையாகும்.

குழந்தையின் திறமையை நாம் ஆரம்பத்திலேயே கண்டுகொள்ள முடிவதில்லை. அதனால அது ஏதாவது ஒன்றிலமட்டும் பழகச் சந்தாப்பம் அளிப்பதை விடடு விடடுப் பல கலைகளையும் தெரிந்துகொள்ள வசதி செயயவேணடும். நலல பாடடுககளையும் இன்பங் கனியும் கவிதைகளையும் குழந்தை கேடகவேணடும். சிறந்த ஓவியஙகளையும் உயாந்த நாடடியஙகளையும் பாாக்கவேணடும். இம்மாதிரியாகக் கலை உணாச்சி வளரும்படியாக நாம் பொதுப்பட உதவவேணடும்.

குழந்தை அவற்றையெல்லாம் அறிந்து, முழுதும் அப்பொழுதே அநுபவித்து அவற்றில ஆசை கொளள வில்லையே என்று பெற்றோர்கள் அஙகலாயக்கக் கூடாது. குழந்தை உள்ளத்திலே நலல கலை நிசசயமாகப் பதிகிறது. அதன் பிரதிபலிப்பு எப்பொழுதாவது ஏதாவது ஒரு துறையில வெளிப்படும். கலை தந்த உணாசசி வேறு துறைகளிலுங்கூட வேறுவிதமாக மலர்ந்து வெளிப்படலாம். ஆதலால. பாடடைக் கேடட பிள்ளை சிறந்த பாடகனுகவில்லையே என்று கவலைப் படுவது சரியல்ல. குழந்தையின் இயல்புத்திறனை வளர்க்க அது உதவி செயதால அதுவே போதும்.

கலைக்கு உள்ளததைப் பணபடுததும் ஆற்றல் இருக்கிறது. அதற்காகவே குழந்தைககுக் கலையை அநு பவிக்கச சந்தாப்பம் இருக்கவேணடும்.

கலையைப்பற்றிய உபதேசம் குழந்தைக்கு எவ விதப் பயனையும் தராது. 'நீ வீரனுகவேண்டும்; அழகைப் போற்றவேண்டும். லளிதக் கலைகளை அறிந்து அநுபவிக்கவேணடும்' என்று பேசினுல் குழந்தைக்கு விளஙகாது; ருசியும் ஏற்படாது. அதை விடடுவிடடு நல்ல கதையைச் சொல்லலாம்; நல்ல பாட்டைக் கேட்

கச் செய்யலாம். இம்மாதிரியே மற்றக் கலை அநுபவங்களையும் பெறும்படியாகப் பண்ணலாம். கலைக் கூடங்களுக்கு அழைத்துச் செல்லலாம்.

குழந்தைக்குக் கதை கேட்பதில் ஆசை அதிகம். பாட்டைக் கேட்கவும் பாடவும் ஆர்வம் அதிகம். நல்ல படம் என்றால் பார்த்துக்கொண்டே இருக்கும். இவற்றை அநுபவிக்கச் சந்தர்ப்பம் கொடுப்பது மிக அவசியம். அதனால் தான் குழந்தையின் கலை உணர்ச்சி பெருகி வளரும்.

குழந்தை அதிக நேரம் ஒரே விஷயத்தில் கவனம் செலுத்த முடியாது. ஆகையால் நாம் சொல்லுகிற கதையையோ பிறவற்றையோ அது வேறு கவனமில்லாமல் நீண்ட நேரம் கேட்கவில்லையே என்று கோபித்துக் கொள்வது நியாயமல்ல. குழந்தையின் மனநிலைமைக்கு ஏற்றவாறு சலிப்பு ஏற்படாதவகையில் நாம் அவற்றை அளிக்கவேண்டும்.

கதை சொல்லுவதே ஒரு தனிக் கலை. பாட்டிகள் இதில் பெயர் வாங்கியவர்கள். இரவு வேளைகளில் குழந்தைகள், 'பாட்டி, ஒரு கதை சொல்லு' என்று அவளைச் சூழ்ந்துகொள்ளுகின்றன. பேய்க் கதை, மூட நம்பிக்கைகளை உண்டாக்கும் கதை முதலானவைகள் குழந்தைக்கு நன்மை செய்யா. உயர்ந்த லட்சியம், வீரம் முதலியவற்றைக் கதையின் போக்கிலேயே கொண்டுள்ள எளிய கதைகளைச் சொல்லவேண்டும். குழந்தை தான் கேட்ட கதைகளைத் திருப்பிச் சொல்ல ஆசைப்படுகிறது. அதற்கும் உத்ஸாகம் அளிக்கவேண்டும்.

நிலாவைப் பார்த்ததும், 'சந்த மாமா, வா வா' என்று கண்ணம்மா பாட ஆரம்பித்துவிடுகிறாள். ஓசை இன்பம் கூடிய எளிய பாட்டுக்கள் குழந்தைக்கு மிக்க மகிழ்ச்சி தருகின்றன. அவற்றைக் குழந்தைக்குக் கற்றுத் தரவேண்டும். பாடும்போதே அவற்றின் கருத்துக்கு

ஏற்றபடி உடலே அசைப்பதையும் சேர்த்துக்கொள்ளலாம்.

சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம் என்று இப்படி நான்கைந்து வாணஙகளே ஜலததில கலக்கி அவற்றுடன் ஒரு தூரிகையையும், பெரிய அளவில காகிததததையும் கொடுததுவிட்டால குழந்தை தன் கற்பனை செலலுகிற படி படம் எழுத ஆரம்பித்துவிடும். இதற்கு அதிகச செலவு செய்யவேண்டியதே இலலே. சுவருககுப் பூசும் சாதாரண வாணங்கள, ஒரு தென்னம்பாளை த தூரிகை, ஏதாவது வெள்ளைக் காகிதம் அலலது வர்ணக் காகிதம் போதும். கொட்டாஙகச்சியில் அல்லது சாதாரண தகர டப்பாக்களில் வாணததைக் கலக்கிக் கொடுததுவிடலாம். குழந்தை படம் போடும்போது அதை உத்ஸாகப்படுத்த வேணடும். உயர்ந்த சிததிரமாக இல்லேயே என்று பழிககககூடாது. குழந்தை தனது உள்ளத்தின் அநுபவஙகளே வரைகிறது. அதை ஓவியனுடைய நிலேயில் வைதது மதிப்பது சரியாகுமா? குழந்தைச் சித்திரங் களே தனி. அவற்றை மதிப்பிடுவதும் தனிப்பட்ட முறையில இருககவேணடும்.

குழந்தைகளுடைய திறமை ஒரே துறையில் இருக்காது என்பது முன்பே கூறப்பட்டது. இயற்கையாக உளள திறமைககுத தக்கவாறு பின்னல அதன் ஆரவம் மாறுபடும். மேலே கூறிய கலேகளில பயிற்சி கொடுப்பதெல்லாம் பொதுவாக உள்ள வளர்ச்சியின் பொருட்டே என்று நாம் நன்கு மனத்தில் வைத்துக் கொளளவேணடும். கலேகளே அநுபவிககச் செய்வதும் அவற்றைப் பயிலச செய்வதும் உளள வளாச்சிக்காகவே. அதனல குழந்தை நாம் எதிாபாாததபடி பாடகனுக அல்லது கவியாக ஆகவிலலே என்று குறை கூறுவது பொருந்தாது

ஒரு குழந்தை ஏதாவது ஒரு துறையில் மந்தமாக இருந்தால் அதையே எடுத்துக் காணபித்து இடித்

துரைப்பது பெரும் பிழை. அதனால் குழந்தைக்குத் தன்னைப்பற்றித் தாழ்வுணர்ச்சி பிறந்துவிடும். தாழ்வுணர்ச்சியால இயற்கையாக அதற்கு எத்துறையில் திறமை இருக்கிறதோ அதில் முன்னேறவும் தடை ஏற்படுகிறது. 'என்னால் மற்றவர்களைப்போல் செய்ய முடியாது' என்று குழந்தை நினைக்குமானால எதிலும் தனது திறமையைப்பற்றி அதற்கு நம்பிக்கை உண்டாகாது. ஆதலால் குழந்தையின் குறையை எடுத்துப் பேசுவதை விட்டுவிட்டு அதன் திறமை எதில இருக்கிறதோ அதைப் போற்றி அதில் உத்ஸாகம் அளிக்க வேண்டும்.

# 25

# குழந்தைப் பள்ளி

குழந்தைப் பருவத்தில்தான் உடல் வளர்ச்சி, உள்ள வளர்ச்சி இவை மிக வேகமாக நடைபெறுகின்றன. குழந்தை தன் இயல்புணர்ச்சிகளை வேறு வகையில் திருப்பவும் கற்றுக்கொள்கிறது; நல்ல பழக்கங்களையோ கெட்ட பழக்கங்களையோ அடைகிறது. பிறருடன் கலந்து வாழத் தெரிந்துகொள்கிறது; பேசிப் பழகுகிறது. அப்பருவத்தில்தான் குழந்தையின் உணர்ச்சிகளெல்லாம் ஏதாவது ஒரு வகையாக அமைந்து பிற்கால வாழ்க்கையில் அதன் தன்மையையும் போக்கையும் தீர்மானிக்கின்றன.

இதுவரையில் கூறப்பட்டவைகளை எல்லாம் தொகுத்துச் சுருக்கமாகக் கூறினால், குழந்தைப் பருவத்திலேயே எப்படிப் பிற்கால வாழ்க்கையின் அமைப்பெல்லாம் முடிந்து விடுகிறது என்பது விளங்கும்.

ஆகையால் அப்பருவத்தில் குழந்தையின் வளர்ப்பு மிகுந்த கவனத்தோடும் பொறுப்போடும் செய்யவேண்டியதாகிறது. குழந்தைக்கு நல்ல காற்றோட்டமும் சூரிய வெளிச்சமும் உள்ள அழகான, சுத்தமான இடம் வேண்டும். விளையாட்டுக் கருவிகளும் திறந்த வெளியும் மற்றக் குழந்தைகளின் சேர்க்கையும் வேண்டும். அறிவும் கற்பனா சக்தியும் அன்பும் வளருவதற்கு வசதிகள் வேண்டும்.

இவைகளெல்லாம் ஒவ்வொரு வீட்டிலும் கிடைப்பது அரிதாகிறது. செல்வமுடையவர்கள் மேற்கூறிய

வசதிகளை அநேகமாக அமைக்கலாம். ஆனால் இருபது முப்பது குழந்தைகள் ஒன்றாகச் சேர்ந்திருக்கும்படி செய்வது அவர்களாலும் ஆகக்கூடியதல்ல.

குழந்தை வளர்ப்பைப்பற்றிப் பெற்றோர்கள் நன்கு அறிந்திருக்கவேண்டும். குழந்தையை மிரட்டி அடக்குவதால் விளையும் தீமையைப்பற்றியும், அதனிடம் மட்டில்லாத அன்பு காண்பிப்பதால் ஏற்படும் கேடுகளைப்பற்றியும் அறிந்து, ஒரே மாதிரியான அன்புடன் பழகத் தெரிந்திருக்கவேண்டும். குழந்தை வளர்ப்பைப்பற்றித் தாயக்கு இயல்பாக உண்டாகும் உணர்ச்சிகளைமட்டும் நம்பிக்கொண் டிருப்பது சரியல்ல. இயல்புணர்ச்சியோடு அறிவும் சேர்ந்திராவிட்டால் பரம்பரையாக வந்த பழக்கங்கள் அவ் வியல்புணர்ச்சியை விழுங்கிவிடும். குழந்தைகளின் நடத்தையோ பழக்கமோ விரும்பத்தகாதவாறு அமைந்துகொண்டு வர ஆரம்பித்தால், அதை மாற்றுவதற்குக் கற்றுத் தெரிந்த உண்மைகளின் துணை இருப்பது அவசியம் ஆதலின் இயல்புணர்ச்சியே போதுமென்று கூறுவது பொருந்தாது.

பல பெற்றோர்களுக்குக் குழந்தை உள்ளத்தைப் பற்றிய அறிவு இருந்தாலும் குழந்தையை நன்கு வளர்ப்பதற்குப் போதுமான காலம் கிடைப்பதில்லை. அவர்கள் ஏதாவது ஒரு தொழிலில் ஈடுபட்டிருப்பார்கள்.

குழந்தையை நன்கு வளர்ப்பதற்கு வேண்டியன எல்லாம் அமைந்திருந்தால் அதன் வளர்ச்சிக்கு வீடு தான் நல்ல இடம். ஆனால் வீட்டில் அவையெல்லாம் அமைந்திருப்பது பொதுவாகப் பார்க்கப் போனால் வெகு அருமை. ஆகையால்தான் இந்த வசதிகளையெல்லாம் கொண்டிருக்கும் குழந்தைப் பள்ளிகள் (Nursery schools) மிக அவசியமாக இருக்கின்றன.

குழந்தைப் பள்ளி என்பது மற்றப் பள்ளிக்கூடங்களைப் போன்று புத்தகங்களைக் கொண்டு பாடங் கற்பிக்கும் இட மல்ல.

அது இரண்டு முதல் ஐந்து வயதுவரைக்கும் உள்ள குழந்தைகளை வளாகசும் ஒரு நிலையம். விளையாடத் திறந்த வெளியும் பலவித விளையாட்டுக் கருவிகளும் அங்கே இருக்கும். குழந்தைகள் தங்கள் இஷ்டம்போல் ஆடவும் பாடவும் குதிககவும் வசதி உணடு. ஒரு தனி வீட்டில் சாத்தியமாகாதவற்றையெல்லாம் இங்கே சாத்தியமாகச் செயயலாம். இது பல குழந்தைகளுககாக ஏற்பட்டது. அதனால் ஒரே செலவில பலருககாக வேணடியவற்றைத தயாா செய்ய முடியும்.

குழந்தையின் உடலும் உள்ளமும் நன்கு வளர் வதற்கென இஙகே வசதிகள் செயயப்படும். அதே சமயததில சுலபமாக ஒழுஙகு, சுததம், நலல பேசசு, தன்னம்பிககை, பிறா சுகத்தைக் கவனிததல முதலிய நலல பழக்கஙகளைக குழந்தை சந்தோஷமாகப் பெறவும் இஙகே முடியும்.

இஙகே வைத்திய உதவி போன்ற அவசியங்களைப் பலருககென ஏற்படுததுவதால தனிததனி ஒவவொரு குழந்தைககாகவும் அதிகம் செலவிட வேணடியதில்லை. அதோடு திறமை மிக்க கவனிப்பாளர்களையும் நியமிகக லாம். குழந்தைப் பளளியில உணவு விஷயத்தில் நல்ல திட்டம் வகுதது அதைப் பின்பற்றுமாறு செயயலாம். இவவகையில் குழந்தைகளை நன்கு வளாப்பதோடு பெற்றோாகளுக்கு அது சம்பந்தமான அறிவைப் பரப்புவதற்கும் இது உதவுகிறது.

சாதாரணக் குடும்பங்களில் வீட்டு நிர்வாகத்தைக் கவனித்துக்கொண்டு இரணடு மூன்று குழந்தைகள் இருந்தால் அவற்றையுமம நன்கு வளாக்கத தாய்க்கு ஓயவு கிடைப்பது அரிதாகும். அதனால் தாய், குழந்தை வளாப்பைப்பற்றி எவவளவு அறிந்திருந்தாலும் சில சமயங்களில பொறுமையை இழந்து குழந்தைகளிடம் சற்றுக் கடுமையாக நடந்துவிடுவாள், அடிததுக்கூட விடுவாள். இக் குழந்தைகள் சில மணி நேரம் குழந்-

தைப் பள்ளியில் இருந்துவருமானல் அவள் பொறு மையை இழக்கும்படி நேராது.

குழந்தைப் பள்ளியில உள்ளவாகள் சில பெற்ரே ரைப்போலக் குழந்தையிடம் கணமூடித்தனமான அன்பு காட்ட மாட்டாாகள. நலல பயிற்சி பெற்றவாகளா கையால் பெற்ரேரின் பலவீனம் அவாகளிடம் இருக்காது.

இம்மாதிரி எல்லாவகையிலும் யோசிததுப் பாாப் போமானல, குழந்தைப் பளளிகள் நாடெங்கும் ஏறபடு வது மிக அவசியமென்பது புலனுகிறது. அப்பொழுது தான் எலலாக் குழநதைகளையும் மிக நன்ருக வளாததல எளிதாகும்.

குழந்தைப் பள்ளியில் வளர்ந்த குழந்தைகளிடம் பல நலல பழக்கஙகள் சிறபபாக அமைந்திருப்பதை அறிஞர்கள் ஆராயந்து கணடிருக்கிருாகள். குழந் தைப் பள்ளியின் சூழநிலே அவற்றிறகுப் பெரிதும் ஏற்றதாகிறது.

குழந்தைப் பள்ளி என்பது குழந்தைகள் சமு தாயம். அவாகள் தஙகள் இஷ்டம்போல அன்பிலும் அநுசரணையிலும் வளரும்படியான கோயில. இது நாடெஙகும் நிறுவப்படடிருப்பது அந்நாட்டின் உயர் வுக்குக் காரணமாக இருககப்போகும் குழந்தைகளே வளாப்பதற்கு அத்தியாவசியமாகிறது.

# 26

# குழந்தை உலகம்

குழந்தை ஒவ்வொன்றும் தனித்தன்மை வாய்ந்தது. இந்த உண்மையை எத்தனை தடவை சொன்னாலும் மிகையில்லை. இது அத்தனை முக்கியமானது. இதைத் தெளிவாக மனத்தில் வைத்திருந்தால்தான் பெற்றோர்கள் குழந்தைகளை நன்கு வளர்ப்பதில் வெற்றியடைய முடியும்.

பல திட்டங்களைப் பெற்றோர்கள் வகுக்கலாம்; தங்கள் நடத்தையில் சிறிதும் தவறில்லாமலும் செய்து கொள்ளலாம். இவைகள் குழந்தை வளர்ப்பில் பெரிதும் பயன்படுமென்பதில் சந்தேகமில்லை. இருந்தாலும் ஒவ்வொரு குழந்தையும் தனது தனித் தன்மைக்கு ஏற்றவாறு வெவ்வேறான வழிகளில் வளர்ச்சியுறுகின்றது என்பதை நன்கு உணராவிட்டால் அதன் வளர்ச்சியில் பெரிதும் உதவி செய்ய முடியாது.

சில சமயங்களில் பெற்றோரின் நடத்தை மற்றவர்களுக்கு மிகவும் நல்லதாகப் படலாம். ஆனால் அது உலக அநுபவமில்லாத குழந்தைக்கு எவ்வாறு புலனாகும் என்பதே நாம் கவனிக்கவேண்டிய விஷயம். குழந்தை உள்ளம் எவ்வாறு அதனால் பாதிக்கப்படுகிறது என்பதே இங்கே முக்கியம். சூழ்நிலையும் பெற்றோருடைய தன்மையும் நடத்தையும் ஒவ்வொரு நிமிஷமும் குழந்தையின் வளர்ச்சியில் அதன் தன்மைக்கு ஏற்றவாறு சாதகமாகவோ பாதகமாகவோ இருக்கின்றன.

மிக்க அன்போடும் பொறுமையோடும் தாய், குழந்தையை வளர்க்கிறாளென்று வைத்துக்கொள்வோம்.

அவள் முறையாக அதற்கு வேண்டியவற்றையெல்லாம் செய்கிறாள். அப்படியானால் அந்தக் குழந்தையின் உடல், உள்ளம் இவற்றின் வளர்ச்சி நன்கு அமையுமல்லவா என்று வினவலாம். நிச்சயம் அமையும். அன்பும் ஆதரவும் குறைந்தவிடத்தும் முறையில்லாதவிடத்தும் வளர்கிற குழந்தையைவிட மேலே சொன்ன குழந்தை நன்கு வளரும் என்பதில் ஐயமில்லை. ஆனால் அந்தக் குழந்தையும் பூரண வளர்ச்சி பெறுவதற்குப் பல தடைகள் இருக்கின்றன என்பதை நாம் மறந்து விடலாகாது. பல வகைகளில் குழந்தையின் ஆசை நாம் உணர்ந்து கொள்ளமுடியாத விதத்தில் நிறைவேறாது போகிறது. அதனால் அதன் உள்ளம் பாதிக்கப்படுகிறது. ஒரு குழந்தைக்கு நலலதாக இருப்பதே மற்றொன்றுக்கும் நல்லதாக இருக்கும் என்று எணணிப் பெற்றோர்கள் அதைக் கைககொள்ளுவாாகளானால் அதன் விளைவு எப்படி இருக்குமென்று நிசசயமாகச் சொல்ல முடியாது. அது மற்றொரு குழந்தைக்கும் நல்லதாக இருக்கும் என்பதில்லை. இந்த விஷயத்தில்தான் பெற்றோர்கள் குழந்தையின் தனித்தன்மையை உணாந்து அதற்கு ஏற்ப நடந்துகொள்ளவேணடும்.

குழந்தை ராஜாமணிக்கு இரண்டு வருஷம் பூர்த்தியாகிவிடடது. அவன் இப்பொழுதெல்லாம் ஏதாவது ஒன்றை நினைத்துக்கொணடு அடிக்கடி அழுகிறான். என்ன ஆறுதல சொன்னாலும் அழுகை ஓயவதில்லை. மண்ணில் விழுந்து புரளுகிறான். தலையில மணணை வாரிப் போடடுககொள்கிறான். சொக்காயை ஒரு நாழிகையில் அழுக்காக்கி விடுகிறான்.

நேற்றிரவு அவன் என் பக்கத்தில் உட்கார்ந்து சாப்பிட்டுக்கொண் டிருந்தான். சோற்றைப் பிசைந்த கையையே என் துடைமேல் பல தடவை வைக்க ஆரம்பித்தான். நான் எவ்வளவு சொல்லியும் அவன் அதை நிறுத்தவில்லை. எனக்குக் கோபம் வந்துவிட்டது.

கையை வைக்காதே என்று சத்தம் போட்டுக்கொண்டு கையைத் தள்ளிவிட்டேன். அதற்குமேல் அவன் உணவு கொள்ளவில்லை. என்னவோ நினைத்துக்கொண்டு உம்மென்று உட்கார்ந்திருந்தான். படுக்கப்போகும் போது நான் அவனுக்கு விளையாட்டுக் காட்டிய பிறகு தான் சிரிக்க ஆரம்பித்தான்.

இந்த மாதிரி அநுபவம் எல்லாப் பெற்றோர்களுக்கும் குழந்தைக்கு இரண்டு வயசாகும்போது ஏற்பட்டிருக்கும். குழந்தை அந்த வயசிலே என்ன என்னவோ நினைக்கிறது. அவற்றையெல்லாம் சொல்ல விரும்புகிறது. அழகாகப் பல காரியங்களைச் செய்ய விரும்புகிறது. ஆனால் குழந்தைக்கு இவையெல்லாம் முடிவதில்லை. எவவளவு சுலபமாக அசுத்தம் செய்யலாமோ அழிக்கலாமோ உடைக்கலாமோ அழுது புரளலாமோ அவ்வளவு சுலபமாகத தன் ஆசைகளையெல்லாம் நிறைவேற்ற இயலுவதிலலை. அதற்குக் காரியங்கள் செய்ய வேண்டிய அநுபவமும் அறிவும் இன்னும் வரவில்லை. பேசுவதற்கு நாக்கிற்குப் பூரண வல்லமை ஏற்படவில்லை. எல்லாவிதமான ஒலிகளையும் உணடுபணண அது இன்னும் பழகவில்லை. பொருள்களைப் பிடிக்கவும் உபயோகிக்கவும் கைக்கு அநுபவம் போதாது. அதனால் குழந்தை தான் விரும்பியதைச் செயய முடியாமல உள்ளத்தில் வருந்துகிறது; ஏமாற்றமடைகிறது.

மெதுவாகத்தான் அதற்குத் திறமையும் நம்பிக்கையும் ஏற்படவேணடும. அந்தக் காலத்திலே பெற்றோர்களுடைய அன்பும் அநுதாபமும் குழந்தைககு மிக மிகத் தேவை. குழந்தையின் உள்ளத்தில அக்காலத்தில் நிகழும் கலக்கத்தையும் ஏமாற்றத்தையும் அறியாது, குழந்தை குறும்பு செய்கிறதே என்று பெற்றோர்கள் அதைக் கடிந்தால் அதன் உள்ள வளர்ச்சி கெட்டுவிடும்.

மூன்று வயதுமுதல் ஐந்து வயது வரையில் குழந்தைகள் ஒரு நல்ல குழந்தைப் பள்ளியில் இருக்கு

மானால், அதனால் பல நன்மைகள் ஏற்படுகின்றன. அங்கே குழந்தைகள் தங்கள் இஷ்டம்போலப் பல காரியங்களைச் செயய வசதி இருக்கிறது. அநேக விதமான விளையாட்டுக் கருவிகளும் அறிவு வளர்ச்சிக் குக் காரணமான பல சாதனங்களும் அங்கே இருக்கின் றன. ஒவவொரு வீட்டிலும் இப்படிப் பல செளகரி யங்களை உண்டாக்குவது சுலபமலல.

பிறா மகிழ்ச்சி அடையும்படியாக ஏதாவது செய் யக் குழந்தை ஆசைப்படுகிறது. 'உப்பு வாங்கலே உப்பு ஊ..' என்று கூவிககொணடு சரோஜா போகிறுள். அவள தலையிலே ஒரு சிறு மூங்கில்கூடை இருக்கிறது. தாயும் மற்றவாகளும் அவள் செயகையைக் கணடு உள்ளம் பூரிக்கிறுாகள். சரோஜா அவர்களுடைய சந்தோஷத்தைக் கணடு மறுபடியும், மறுபடியும், 'உப்பு, உப்பு...' என்று கூவிக்கொணடு நடக்கிறுள்.

ராஜாமணி ஆடுகிறுன். எலலோரும் பார்த்துச சிரிக்கிறுர்கள். அவன் திருப்பித் திருப்பி ஆடிக் காண பிக்கிறுன்.

"கணணம்மா, அந்தத தீப்பெட்டியை எடுத்து வா; அடுப்பு மூடடலாம்" என்கிறுள் தாய. அவள் உடனே எடுத்துவருகிறுள். தாய்கரு உதவிசெயது அவளுக்குச் சந்தோஷம் உணடாக்குவதில் குழந்தைக்குத் திருப்தி உணடாகிறது.

பிறர் மகிழும்படி காரியம் செய்யக் குழந்தை முயல் கிறது. ஆனால் அநுபவக் குறைவாலும் அவயவங்களின் மேல் நிச்சயமான ஆதிக்கம் இன்மையாலும் பல தடவை களில் தவறிவிடுகிறது. அதற்காக நாம் கோபம் கொள்ள லாகாது.

சில சமயங்களில் குழந்தை தன்னுல செய்ய முடி யாததை அழிகக முயலகிறது. சிறுமிகள் மண்வீடு கட்டுவார்கள். சரோஜா (வயது இரண்டு) அதை

அழித்துவிடுவாள். அதற்காகவும் அவளிடம் கோபம் கொள்ளலாகாது.

அவளுக்கு ஐந்தாறு வயசாய்விட்டால் சொந்தமாகப் பல காரியங்களைச் செய்யும் ஆற்றல் பெற்றுவிடுவாள். அதுவரையிலும் அவளுக்குத் திறமையும் அநுபவமும் வளர அன்புடன் நாம் உதவி செய்ய வேண்டும். இப்படிச் செய்யாவிட்டால் அவள் உள்ள வளர்ச்சி தடைப்படும்.

குழந்தையை ஒன்றும் அறியாத ஜடப்பொருளாகக் கருதாமல், அதற்கும் உணர்ச்சி உண்டு என்பதை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்திருக்கவேண்டும். அப்பொழுது அதன் உள்ளவளர்ச்சியைப் பாதிக்கும்படியான தவறுகளைச் செய்ய மாட்டோம். வயது வந்தவர்களின் உணர்ச்சிகளுக்கும் எண்ணங்களுக்கும் எவ்வாறு நாம் மரியாதை கொடுக்கிறோமோ அதுபோலவே குழந்தைகளின் உணர்ச்சிகளிடமும் கவனம் செலுத்தி நடந்துகொள்ளவேண்டும்.

வாழ்க்கை, இன்பமாகவும் அமைதியாகவும் நடக்கும் வீட்டில் குழந்தை பொதுவாக நன்கு வளர்கிறது. பெரிய அதிர்ச்சிகளை உண்டுபண்ணும் சம்பவங்களும் சண்டைகளும் இருந்தால் அவை குழந்தையின் உள்ளத்தில் மாறாத கலக்கத்தை உண்டாக்குகின்றன. பெற்றோரிடையே பரஸ்பர அன்பும் அநுதாபமும் இருக்க வேண்டும். பாறைகளில் முட்டி மோதாமல் சமநிலத்தில் செல்லும் ஆற்றோட்டம்போல வாழ்க்கை அமைதியாகச் செல்லவேண்டும். வேலைக்காரர்களாலும் தொல்லை இருக்கக்கூடாது. இவ்வாறு அமைந்த வீடும் சூழ்நிலையும் குழந்தை வளர்ப்புக்கு மிக ஏற்றதாகும்.

குழந்தையிடம் தாய் தந்தையர்கள் ஒரு சமயத்தில் அளவுகடந்த அன்பும் மற்றொரு சமயத்தில் கோபமும் கொள்வதால் குழந்தை அவற்றைச் சரியாக உணர்ந்து

கொள்ள முடியாது தடுமாற்றம் அடைகிறது. 'ஏன் இப் பொழுது சீறுகிறார், அடிக்கிறார்; ஏன் இப்பொழுது கொஞ்சுகிறார்' என்று காண முடியாமல் குழந்தை திகைக் கிறது. பெற்றோரிடம் சிறிது சிறிதாக நம்பிக்கையையும் இழக்கிறது. ஆதலால் இவ்விஷயத்தில் எச்சரிக்கை அவசியம்.

குழந்தையின் எண்ணங்களும் உணர்ச்சிகளும் தனித் தன்மை வாய்ந்தவை. அவற்றைப் பெரியவர் களின் ஸ்தானத்தில் வைத்து எண்ணக்கூடாது. குழந்தை உலகம் வேறு. யார் இதை நன்கு உணர்ந்து அதற்கு ஏற்றபடி உதவி புரிகிறார்களோ அவர்களே குழந்தையை வளர்ப்பதில் பெரிய வெற்றியை அடை வார்கள்.

# அநுபந்தம்

## 1

### உடல் வளர்ச்சி

ஒரு சிறிய ஜீவ அணு. அது எவ்வளவு ஆச்சரிய மான குழந்தையாகக் கருவிலே உருவெடுக்கிறது! கயல் மீன் போன்ற கண்கள்; எள்ளின் மலர் போன்ற மூக்கு; முறுவல் தவழும் சிறிய இதழ்கள்; பூப்போன்ற கை; பூப்போன்ற கால்; பொன் மேனி. இவையெல்லாம் மாயாஜாலம்போல் அமைகின்றன.

பனித்துளியில் ஒரு பாதி என்று கூறும்படியாக உள்ள ஜீவ அணு இப்படி விந்தைக் குழந்தையாக வளர்கிறது. கருத்தரித்த மூன்றாவது வாரத்திலே பார்த்தால் மனிதக் கருவிற்கும், பல்லி பறவை முதலிய ஜந்துக்களின் கருவிற்கும் அதிக வித்தியாசம் தென்படு வதில்லை. எல்லாம் ஒரேமாதிரியாகத் தோன்றுகின்றன. ஆனால் எவ்வளவு அதிசயமாக மானிடக் குழந்தை தனிப்பட்ட முறையிலே எழிலோடு வளர்ந்து விடுகிறது!

இவ்வாறு உருவாகிக் குழந்தை உலகத்திற்கு வந்தாலும் அது பூரண வளர்ச்சி அடைந்துவிட்டது என்று சொல்லமுடியாது. வாழ்க்கைப் போராட்டத் திற்குத் தகுதியுடையதாவதற்கு அது இன்னும் வளர வேண்டும். குழந்தை பிறந்தவுடன் சாதாரணமாக ஆறு அல்லது ஏழு ராத்தல் நிறையுள்ளதாக இருக்கும். சில குழந்தைகள் சற்று அதிகமாகவும், சில குறைவாக வும் இருப்பது உண்டு. ஆனால் நிறை மிகவும் குறை வாக உள்ள குழந்தைகள் ஜீவிப்பது அரிது.

முதல் வாரத்தில் குழந்தையின் எடை கால் ராத்தல் வரையில் குறைந்து பின்னால் அதிகரிக்க ஆரம்பிக்கிறது. குழந்தையின் வளர்ச்சி முதலில வெகு விரைவாக இருக்கும். நான்கைந்து மாதங்களில் அதன் எடை மும்மடங்கு ஆகிவிடும். குழந்தையின் உயரத்திற்குத் தக்கவாறு இது சற்று ஏறக்குறைய இருக்கும்.

பெற்றோர்களுக்குத் தக்கபடி குழந்தையின் உயரம் வித்தியாசமாக அமைகிறது. உயரமும் நிறையும் பருவ காலத்திற்கு ஏற்றவாறு வேறுபடுகின்றன. இளவேனில் காலத்திலே மற்றக் காலத்தைக்காட்டிலும் உயரத்தில் வளர்ச்சி அதிகம்.

ஆண் குழந்தைகளுக்கும் பெண் குழந்தைகளுக்கும் நிறையும் உயரமும் அதிகரிப்பதில் வித்தியாசம் காணப்படுகிறது. ஒரே மாதிரியாக அவை வளருவதில்லை.

எலும்புக் கூட்டின் அமைப்பிலும் பெரியவர்களுக்கும் குழந்தைக்கும் வேறுபாடு உண்டு. குழந்தை வளர வளரச் சில எலும்புகள் புதிதாக உண்டாகின்றன; சில எலும்புகள் ஒன்றுடன் ஒன்று இணைந்துவிடுகின்றன. பிறந்தவுடன் குழந்தைக்குச் சாதாரணமாக 270 எலும்புகள் இருக்கும். முதல் இரண்டு மூன்று வருஷங்களில் இவை சிறிது குறைந்து பிறகு பதினன்கு வயதுவரையில் அதிகரித்துக்கொண்டே போய் மொத்தம் சுமார் 350 ஆகின்றன. பிறகு இவ்வெண்ணிக்கை மறுபடியும் குறைய ஆரம்பிக்கிறது. நாற்பதாவது வயதில் சாதாரணமாக 206 எலும்புகள் இருக்கின்றன.

குழந்தையின் எலும்பு மிருதுவானது; வளரக்கூடியது. அதனல்தான் குழந்தையை விரைவில் நடக்கும்படி செய்தால் கால் எலும்புகள் வளைந்துவிடுகின்றன. ஆதலால் இதைப்பற்றிப் பெற்றோர்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

எலும்புகளின் வளர்ச்சியும் உறுதியும் பொதுவாக சுண்ணும்புச் சத்துக் கலந்த உணவைப் பொறுத்திருக்கின்றன. பாலில் சுண்ணும்புச் சத்து நிறைய இருக்கிறது. ஆகையால்தான் வளரும் குழந்தைக்குப் பால் இன்றியமையாத உணவாக இருககிறது. எலும்புகள் உறுதி யடைவதிலும், ஆண் குழந்தைக்கும் பெண குழந்தைககும் வித்தியாசம் காணப்படுகிறது. பெண குழந்தையின் எலும்புகள் பொதுவாக விரைவில் உறுதி யடைகின்றன.

குழந்தை கருவில் இருக்கும் காலத்தில் அதன் தலை மற்ற உறுப்புக்களைவிட அதிகமாக வளர்சசி அடைகின்றது. பிறக்கின்ற காலத்தில கவனிப்போமானுல உடம்பின் மேல்பாகம் அதிக வளாசசியடைந்தும், கீழ்ப்பாகம் வளர்ச்சி சற்றுக் குறைந்தும் இருப்பது புலப்படும். பிறந்த பிறகு அவயவங்கள் வேகமாக வளரத தொடங்குகின்றன. கைகள முதலிலும், உடம்பு அதற்கு அடுத்த படியாகவும் கால்கள் அதன்பின்னும் வளர ஆரம்பிக்கின்றன.

பிறக்கும்போதே மூளையின் அளவு, வயது வந்தவாகளுக்கு உள்ளதில் பாதி இருககிறது. அது வளாந்துகொண்டே போய்க குழந்தையின் ஐந்து அல்லது ஆறுவது வயதிலேயே அநேகமாகப் பூரண அளவைப் பெற்றுவிடுகிறது. பொதுவாகப் பாாப்போமாஞல் பெண்ணின் தலையும் மூளையும் ஆணின் தலையையும் மூளையையும்விட அளவில் குறைந்திருக்கின்றன.

குழந்தையின் மண்டை ஒட்டிலுள்ள எலும்புகள் ஒன்றுடன் ஒன்று உறுதியாகப் பிணைககப்படடிருப்பதில்லை. அவை ஜவவுகளால் லேசாகக் கடடப்பட்டிருக்கின்றன. அதனுல் மூளை வளர்வதற்கு அனுகூலமாக இருக்கிறது. பிறக்கும்போது குழந்தையின் தலை சற்று நீண்டிருக்கும். அவ்வாறு இருப்பதாலேயே பிரசவத்திற்கு எளிதாகிறது. குழந்தை பிறந்தவுடன் அதன்

தலையை உருண்டையாகச் செய்யும் பழக்கம் பல இடங்களில் காணப்படுகிறது. மண்டையோடுகள் லேசாகப் பிணைக்கப்பட்டிருப்பதாலும், மிருதுவாக இருப்பதாலும் இது சாத்தியமாகத் தோன்றினாலும் இது பெருந் தவறு என்பதை மக்கள் உணரவேண்டும். தலையின் உருவம் தானாகவே சிறிது காலத்திற்குள் சரியாக அமைந்துவிடும். அது நீண்டிருக்கிறதே என்ற கவலை வேண்டியதே இல்லை.

மண்டை ஓட்டின் உச்சியிலே ஒரு பெரிய துவாரமும், பின் புறத்திலே முக்கோண வடிவமான ஒரு சிறிய துவாரமும் இருக்கின்றன. பின்புறமுள்ளது இரண்டு மூன்று மாதங்களில் அடைபட்டுவிடும். ஆனால் உச்சியிலுள்ளது அடைபட ஒன்றரை வருஷங்களுக்கு மேல் ஆகிறது.

குழந்தை பிறப்பதற்கு ஆறு மாதங்களுக்கு முன்னரே அதன் பற்கள் உருப்பெற ஆரம்பிக்கின்றன. பிறக்கும்போதே அவை முற்றும் உண்டாகி எகிருக்குள் மறைந்திருக்கின்றன. அவற்றின் கீழே தாடை எலும்புகளில் இரண்டாவதாக முளைக்கும் நிரந்தரப் பற்கள் உருவாகிவிடுகின்றன.

குழந்தை பிறந்த ஏழெட்டு மாதங்களிலே சாதாரணமாகக் கீழ் முன்பற்கள் இரண்டும் வெளிக்கிளம்புகின்றன. ஒரு வருஷம் முடியும்போது பல குழந்தைகளுக்கு ஆறு பற்கள் வெளித்தோன்றுகின்றன. இரண்டரை வருஷமாகும்போது அநேகமாக எல்லாப் பற்களும் முளைத்துவிடுகின்றன.

கண் காது முதலிய உறுப்புக்கள் பிறக்கும்போதே நன்கு அமைந்திருக்கின்றன. ஆனால் அவை நன்கு பயன்படச் சில நாட்கள் ஆகும். பிறந்தவுடனே பார்க்கும் தன்மை இருந்தாலும் பொருள்களை வித்தியாசப்படுத்தி அறிந்துகொள்ளும் திறமை வரச் சிறிது காலம் வேண்டியிருக்கிறது. கண்களை இஷ்டம்போல் திருப்ப

வும் இமைக்கவும் பழக்கம் அவசியம். கண்ணின் கருமணிகள் வெளிச்சத்திற்குத் தக்கவாறு சுருங்குவதும் விரிவதும் ஆரம்பததிலிருந்தே ஏற்படுவதில்லை.

பிறக்கும்போது குழந்தையின் காதுகளிலுள்ள செவிப்பறை (Ear-drum) சரியானபடி அமைந்திருந்தாலும், அது வேலை செய்வதில்லை. காதின் மத்திய பாகத்தில் காற்று முதலில் புகுந்தால்தான் அதில ஒலி அலைகள் தோன்றி அவற்றைத தாக்க முடியும். காதின் மத்திய பாகத்தில் காற்று நிரம்பவேணடுமானல் குழந்தை நன்கு சுவாசிக்க வேண்டும். அதற்குச் சில நாழிகை பிடிககிறது.

குழந்தையின் ஸ்பரிச உணர்ச்சி மிக நுட்பமானது. முக்கியமாக அது இதழ்களில்தான் மிக அதிகமாக இருக்கிறது. இதுவே குழந்தை பிறந்ததும் தாயிடம் பாலருந்தப் பெரிதும் துணை புரிகிறது.

குழந்தையின் ரத்த ஓட்டம் மிக விரைவானது. பிறந்தவுடன் குழந்தையின் நாடி நிமிஷததிற்கு 120 முதல் 140 வரையில் அடிககிறது. இது வரவரக் குறைந்து பெரியவனுகும் காலத்தில் 70 ஆகிறது. சுவாசிப்பதும் முதலில் நிமிஷத்திற்கு 30 முதல் 40 வரை இருந்து, வயது வரும்போது 20 ஆகக் குறைகிறது.

பிறக்கும்போது குழந்தையின் வயிறு மிகச் சிறியது. அதுவரையில் தாயின் உடம்பிலிருந்து கருக்கொடியின் மூலம் போஷணையைப் பெற்று வளாந்த குழந்தை இனிமேல்தான் வாயின் வழியாக உணவை உட்கொள்ள வேண்டும். பிறந்தவுடன் அதன் வயிறு சுமார் ஒரு அவுன்ஸ் பால்தான் கொள்ளும். இரண்டாவது வாரத்தில இரு அவுன்ஸ் கொள்ளவும் வருஷ முடிவில் 9 அவுன்ஸ் கொள்ளவும் தக்கவாறு அது பெருத்துவிடுகிறது.

இப்படிச் சாஸ்திர முறையில் குழந்தையின் உடல் உறுப்புக்களைப் பற்றித் தெரிந்துகொள்வது அதை நன்கு வளர்க்க உதவும். அறியாமையினாலும் தவறான எண்ணங்களினாலும் குழந்தையை வளர்ப்பதால் பல தீங்குகள் விளைகின்றன.

உடல் வளர்ச்சிக்கு நல்ல உணவு, காற்று, சூரிய ஒளி, தூக்கம், அன்பு இவைகள் மிக அவசியம் என்பதையும் பெற்றோர்கள் அறிந்திருக்கவேண்டும். இவற்றையெல்லாம் குழந்தை தானாகவே தேடிக்கொள்ள முடியாது. பெற்றோர்களே இவற்றைக் குழந்தைக்குக் கொடுத்து உதவவேண்டும். இவர்கள் குழந்தைக்கும் நாட்டிற்கும் செய்யவேண்டிய முக்கியமான கடமை இது. தேகக் கட்டும் பலமும் உள்ளவனாகக் குழந்தை வளருவதும் இவற்றைப் பொருத்தே இருக்கிறது. வயது வந்த காலத்தில் ஒருவன் அடிக்கடி நோயவாய்ப்படுகிறான் என்றால் அதற்கு முக்கிய காரணம் அவனை இளமையில் வளர்த்த முறையில் இருப்பதைக் காணலாம். 'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே' என்று தம் கடமையை உணர்ந்த பெற்றோர்கள், இவற்றை நன்கு மனத்தில் கொள்ளவேண்டும்.

## 2

# பாரம்பரியம்

பெற்றோர்களின் தன்மைகளும் திறமைகளும் குழந்தைக்குப் பிறவியிலேயே அமைகின்றனவா என்பது ஒரு பெரிய கேள்வியாக இருக்கிறது. சில மனத் தத்துவப் பண்டிதர்கள் அவ்வாறு அமைவதாகக் கூறுகிறார்கள்; சிலர் அதை மறுக்கிறார்கள். 'பிறவியினால் யாதொன்றும் அமைவதில்லை; வளர்ப்பும், குழந்தைப் பருவத்தில் இருந்த சூழ்நிலையும், அநுபவங்களுமே குழந்தையின் வாழ்க்கை அமைப்பை நிர்ணயிக்கின்றன' என்கிறார்கள்.' சிலர், 'பிறவியிலும் சில தன்மைகள் அமைகின்றன' என்று நடுநிலையாகப் பேசுகிறார்கள்.

உடலமைப்பு, தோற்றம் முதலியன பெரும்பாலும் பெற்றோர்களை ஒத்திருக்கின்றன. கருநிறமுள்ள தாய் தந்தையருக்குப் பிறந்த குழந்தையின் நிறம் கறுப்பாகவே இருக்கிறது. தலை மயிரின் நிறம், கண் முதலியனவும் பெற்றோரைப் பொறுத்தே அமைகின்றன.

பொன்னிறமான தாய்க்கும் கருநிறமுள்ள தகப்பனுக்கும் பிறந்த குழந்தை தாயைப்போலப் பொன்னிறமாக இருக்கலாம்; அல்லது தகப்பனைப் போலக் கருநிறமாக இருக்கலாம். அல்லது அவர்கள் இருவருடைய நிறத்திற்கும் இடையே பல வகையான கலவையாகவும் இருக்கலாம். கடைசியில் கூறியபடியே பெரும்பாலும் அமைகிறது.

உடலமைப்பிலுள்ள ஒற்றுமைகளைக் கண்டு உள்ளமும் அவ்வாறே அமையும் என்று முடிவுகட்டிவிட முடியாது. இது விஷயத்தில் சோதனை செய்வதும்

எளிதல்ல. உடலமைப்பிலும் மேலே கூறியபடி பெற்றோரைப் போலவே எல்லாக் குழந்தைகளும் இருப்பதாகச் சொல்லுவதற்கில்லை. பாதிக்குப் பாதி தோற்ற வேறுபாடுகளுடன் அமைந்திருப்பது அநேக ஆயிரம் குழந்தைகளை எடுத்துக்கொண்டு ஆராய்ந்து பார்க்கிறபோது தெரிய வருகிறது. உடலமைப்பிலேயே இங்ஙனம் வேறுபாடுகள் இருக்கும்போது, அதைக் கொண்டு மன அமைப்பைப்பற்றி நாம் எவ்வித முடிவுக்கும் வர இயலாது.

மிக நுண்ணறிவு வாய்ந்த பெற்றோர்களுக்கு மந்த புத்தியுள்ள குழந்தை பிறப்பதையும் நாம் கண்டிருக்கிறோம். தாய் சிறந்த இசைவாணியாக இருக்கிறாள்; குழந்தைக்குச் சங்கீதமே வருவதில்லை. தந்தை பெரிய ஓவியன்; குழந்தைக்குத் தூரிகை பிடிக்கவே வராது. இவ்வாறு இருப்பதையும் நாம் காண்கிறோம்.

ஆனால் பாரம்பரியத்தைப் (Heredity) பற்றிப் பேசும்போது நாம் பெற்றோரைமட்டும் குறிப்பிடுவதில்லை. மூதாதையர் அனைவருடைய தன்மைகளும் திறமைகளும் ஏதாவது ஓர் அளவிலே பிறப்புரிமையாகக் கிடைப்பதாகச் சொல்லுகிறார்கள். 'மனிதன் ஒரு பெரிய வண்டியைப்போல் இருக்கிறான். அவன் மேல் அவனுடைய மூதாதையர் அனைவரும் ஊர்ந்து செல்கின்றனர்' என்று இந்த விஷயத்தை அலங்காரமாகச் சொல்வதுண்டு. ஆனால் எல்லா மூதாதையரும் உடன் பிறந்தவர் அனைவர்மேலும் ஒரே மாதிரி ஆரோகணிப்பதாகக் காணோம். அப்படி ஆரோகணித்தால் உடன்பிறந்தவர்கள் அனைவரும் ஒரே மாதிரியான திறமையும் குணமும் பெற்றிருக்கவேண்டுமல்லவா?

ஒரே குடும்பத்தில் பிறந்த ஒருவன் புத்திசாலியாகவும் மற்றொருவன் வேறுவிதமாகவும் இருக்கக் காண்கிறோம். குணமும் வெவ்வேறு விதமாக அமைந்திருப்பதையும் கண்டிருக்கிறோம்.

சாதாரணமாக இந்த வித்தியாசத்தைக் குறித்து மக்கள், 'அது அவன் பிறந்த வேளை' என்கிறார்கள். ஜனன காலத்தில் கிரகங்கள் இருக்கும் நிலையைப் பொறுத்து எல்லாம் அமைவதாகச் சோதிட சாஸ்திரம் கூறுகிறது.

கருத்தரிக்கும் வேளையும், அப்போது பெற்றோர்கள் கொண்டிருந்த எண்ணங்களும் குழந்தையின் வாழ்க்கையை நிர்ணயிப்பதாகவும் சொல்லுகிறார்கள். ஆகையினாலேதான் குழந்தையைப் பெறுவதை ஒரு கடமையாகக் கருதி, உயர்ந்த எண்ணங்களோடு நல்ல வேளையில் புணர்ச்சி நிகழவேண்டுமென்று வற்புறுத்தப் பட்டுள்ளது.

ஆனால் மேலே கூறிய கருத்துக்களையெல்லாம் ருசுப்படுத்துவதற்கு விஞ்ஞான முறையில் சோதனை செய்ய முடியாது. ஆகையால நாம் திட்டமாக ஒரு முடிவுக்கு வருவதற்கில்லை.

'எந்தக் குழந்தையும் எத்திறமையை வேண்டுமானாலும் அடையும்படி செய்துவிடலாம்' என்று டாக்டர் வாட்சன் போன்றவர்கள் நம்புகிறார்கள். அது இயலாதென்பது வேறு பலருடைய முடிவு. 'பயிற்சியால் ஒரு குழந்தையை யாதேனும் ஒரு துறையில் ஓர் அளவிற்குப் பழக்கலாம்; ஆனால் அதில் உயர்ந்த ஸ்தானம் வகிக்கும்படி செய்ய நம்மால் முடியாது' என்று பேராசிரியர் ஜே. எச். ஜென்னிங்ஸ் கூறுகிறார்.

இவர் கூறுவதை உண்மையெனக் கொண்டாலும் பிறவியிலே அத்தன்மை எவ்வாறு அமைகிறது என்பது நிச்சயமாவதில்லை. பெற்றோருடைய திறமைகள் வழி வழி வருகின்றனவா, கருவுண்டாகும் காலத்தில் ஏற்பட்ட பெற்றோருடைய எண்ணங்கள் குழந்தைக்கு அமைகின்றனவா என்பனவற்றைப்பற்றி யாதொரு தெளிவான முடிவும் ஏற்படவில்லை.

வம்ச பரம்பரையாக ஒரு தொழிலைக் கைக் கொள்ளும்வகையில் இந்து சமூகம் அமைந்திருக்கிறது. குயவன் மகன் குயவன்; சிற்பியின் மகன் சிற்பி. இம் முறையால் பல சிறந்த கலைஞர்களை இந்தியா அடைந் திருக்கிறது. ஆனால் சிற்பியின் வழிவந்த எல்லோரும் உயர்ந்த சிற்பிகளாக இருக்கவில்லை; இதுபோலவே மற்றத் துறைகளிலும். அதனால் இந்தப் பரம்பரைத் தொழிலைக் கொண்டும் நிச்சயமான முடிவுக்கு வர இயலுவதில்லை.

மனிதனுடைய உடம்பிலுள்ள பல வகையான சுரப்பிகளின் (Glands) தன்மை பிறவியிலேயே அமைவ தாகச் சொல்லப்படுகிறது. இவற்றைப் பொறுத்தே உயரம், உடல்கட்டு, சுபாவம் எல்லாம் அமைவதாக இன்று கண்டிருக்கிறார்கள். உதாரணமாகக் கேடயச் சுரப்பி (Thyroid Gland) யிலிருந்து சுரக்கும் நீர் போதிய அளவு இல்லாவிட்டால் குழந்தை குள்ளமா யும், சுறுசுறுப்பற்றதாயும் இருக்கும். இக் காலத் திலே சுரப்பிகள் சிலவற்றின் தன்மையை நன்கு அறிந்திருப்பதோடல்லாமல், அவற்றில் ஏற்படும் குறைபாடுகளைப் போக்குவதற்கான மருந்துகளையும் கண்டிருக்கிறார்கள். ஆனால் உடம்பில எத்தனையோ சுரப்பிகள் இருக்கின்றன. அவைகள் எல்லாவற்றையும் பற்றி இன்னும் நன்கு தெரியவில்லை. எனவே இவற் றைக்கொண்டும் பாரம்பரியத்தைக் குறித்துத் திட்ட மான முடிவுசெய்வது சாத்தியமில்லை.

பிறப்பினால் அமையும் தன்மைகளைப்பற்றி மெண்டல் முதலிய பலர் விரிவான ஆராய்ச்சிகள் செய் திருக்கிறார்கள். அவற்றிலிருந்து அவர்கள் கூறுவது யாதெனில்: பிறவியிலேயே தன்மைகள் ஓர் இயற்கைச் சட்டத்திற்கு உட்பட்டு அமைகின்றன என்பதே. இச் சோதனைகளுக்கெல்லாம் தாவரங்களும், எலி பன்றி போன்ற ஜீவராசிகளுமே எடுத்துக்கொள்ளப்பட்டன.

மக்கள் சமூகத்தில் அவ்வாறு சோதனை செய்வதென்பது முடியாத காரியம். ஆதலின் குழந்தைக்கு அமைந்திருக்கும் பிறவித்தன்மையைப்பற்றி ஆராய்ச்சியின் பயனாக ஒரு முடிவுக்கு வருவதற்கில்லை. குடும்பங்களின் வம்ச சரித்திரத்தைக் கொண்டும், மற்ற ஜீவராசிகளை உபயோகித்து நடத்திய சோதனைகளைக் கொண்டுமே ஒருவாறு முடிவு செய்யவேண்டியிருக்கிறது.

பொதுவாகப் பார்க்கப்போனால் மனிதன் உயிர்ப் பிராணிகளின் பரிணாமத்திலே மேல ஸ்தானத்தை வகித்தாலும் அவனும் சில இயற்கை விதிகளுக்கு உட்பட்டுத்தான் இருக்கவேண்டும். ஆதலால மற்றப் பிராணிகளின் பிறவித் தன்மையைப்பற்றிய ஆராய்ச்சிகளின் பயனாகக் கிடைத்த பொதுப்படையான முடிவுகள் ஓரளவு மனிதனுக்கும் பொருந்தலாம். எனினும் இதில் ஒரு சங்கடம் இருக்கிறது. உடல நிறம், கண்ணின் நிறம் முதலியவற்றில இவ்வியற்கை விதியைச் சோதித்துப் பார்க்கலாம். ஆனால் மன அமைப்பைப் பற்றி அவ்வாறு செய்ய முடியாது.

உலகத்திலே பொதுவாகப் பெற்றோர்களைப் போலப் பிள்ளைகள் பல அம்சங்களிலே இருப்பார்கள் என்ற எண்ணம் இருக்கிறது. 'தாயைப்போலப் பிள்ளை; நூலைப் போலச் சேலை' என்ற பழமொழியும் பிறந்துள்ளது. 'அப்பனைப் போலத்தானே பிள்ளை இருக்கும்; அது வேறாகிவிடுமா?' என்று தந்தையைப்போல நடத்தையுள்ள பிள்ளையைக் குறித்துப் பேசுகிறார்கள். அதே சமயத்தில் பெற்றோர்களின் வார்ப்பாகவே பிள்ளைகள் இருப்பதில்லை என்பதையும் சாதாரணமாக மக்கள் உணர்ந்திருக்கிறார்கள். 'அப்பன் மிகக் கெட்டவன்; ஆனால் பையன் சிறந்த புத்திசாலி; குடும்பத்திற்கே அவன்தான் நல்ல பெயர் கொண்டுவருவான்' என்று பேசிக்கொள்வதையும் நாம் அறிவோம்.

இவ்விரண்டு முரண்பட்ட உண்மைகளையும் நிதரிசனமாக நாம் உலகத்தில் காணகிறோம். அவற்றைப் பற்றி ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யும்போது பல ஐயங்கள் உதயமாகின்றன. தாயைப் போல ஒரு பிள்ளையிருந்தால், அது பிறவியில் ஏற்பட்ட தன்மையா; தாயிடமே குழந்தைப் பருவததில நெருங்கிப் பழகி வளர்ந்ததால் ஏற்பட்ட தன்மையா என்பது தெரிவதில்லை. அப்பன் கெட்டவன் என்றால அவனுடன் இருந்து வளரும் பையன் எப்படி நலலவனாவான் என்பது தெரிவதில்லை.

பிறவித் தன்மைகளைப்பற்றி இரட்டைப் பிள்ளைகளைக்கொண்டு ஆராய்வது ஒரு வகையில் பொருத்தமாக இருக்கிறது. ஒரே கருவிலிருந்து உண்டாவதால் இரட்டைப் பிள்ளைகளுக்கு ஒரே விதமான பிறவித் தன்மைகள் அமைந்திருகக வேணடும். உடல் அமைப்பில இவவொற்றுமை தெளிவாகத் தெரிகிறது. பொதுவாக இரணடும் ஆணுகவோ பெணணுகவோ இருககின்றன; தோற்றத்திலும் ஒத்திருக்கின்றன.

பல இரடடைப்பிளளைகளின் வாழ்க்கையை ஆராய்ந்ததிலிருந்து பொதுப்படையான மனததிறமைகள் ஏக தேசமாக ஒரே மாதிரி இருப்பதாகக கணடிருககிறாகள். இதை ஆதாரமாகக கொணடு எப். ஏ. இ. கரூ (F. A. E. Crew) என்பவா, 'மனததன்மைகளும் திறமைகளும் பெரும்பான்மையும் பாரம்பரியத்தை அடிப்படையாகக் கொணடிருக்கின்றன. திறமையை அப்படியே குழந்தை பெறுவதிலலை; ஆனல் அததிறமையை அடையும் இயல்பைப் பெறுகிறது' என்று சொல்கிறுா.

இப்படிப் பிறவியில் அமைந்த திறமை சூழ்நிலையால் வளர்க்கப்பட்டால்தான் மலரும். இல்லாவிட்டால் பிறவியால் ஒன்றைப் பெற்றும் பெறுத தற்கே சமனுகிவிடும். அதனுல்தான் அதே ஆசிரியர், 'முடிவாக அத்தன்மைகளின் மலர்ச்சி சூழ்நிலையாலும்

பயிற்சியாலும் பெரும்பாலும் தீர்மானிக்கப்படுகிறது. ஒருவன எந்த நிலையை அடைய முடியும் என்பதைப் பிறவியமைப்புத் தீர்மானிக்கிறது; ஒருவன் எந்த நிலையை அடைகிருன் என்பதைச் சூழநிலையும், பயிற்சியும் தீர்மானிககின்றன' என்று கூறுகிருா. இதே கருத்தைத்தான் பேராசிரியா ஹக்ஸ்லியும் கூறுகிருா. 'தன்மையோ திறமையோ பிறவிககே உரியதலல. பிறவியமைப்பு வளாசசியின் எலலையைத் தீாமானிக கிறது; என்ன என்ன தன்மைகள் வளாந்து ஓங்கும என்பதைச் சூழ்நிலை தீாமானிககிறது. சூழ்நிலையால எவவாறு ஒரு தன்மை பாதிக்கப்படும் என்பதைப் பிறவியமைபபு முடிவு செயகிறது' என்று. பேராசிரியா ஜென்னிங்ஸ் இதை இன்னும் தெளிவாகச் சொலலு கிருா: 'ஒவவொருவருக்கும் பிறவியில பல திறமைகள அமைகின்றன. ஆனல அவற்றில எவை மலாந்து மேலோங்கும் எனபது சூழ்நிலையைப் பொறுததிருக கிறது. பெற்றோாகள் தந்தவை சில ரசாயனப் பொருள்களைப் போன்றவை. ஒரு சூழ்நிலையில அவற் றைச் சோத்தால் ஒரு வகையான மாறுதலும், வேறொரு சூழநிலையில் வேறொரு விதமான மாறுதலும் அடையும்' என்கிருா அவா.

இதனல சூழ்நிலை மிக முக்கியம் என்று ஏற்படு கிறது. இதன் முக்கியத்தைப் பெரிதும் உணாந்த ஆராய்சசியாளாகளில் சிலர் இதைத் தவிரப் பிறவி யமைப்பே இல்லை என்றும் கூற முன்வந்தாாகள். சூழ்நிலையைச் சரியானபடி அமைப்பதால வேண்டிய பலனை அடையலாம் என்றும் அவர்கள் உத்ஸாக மேலீட்டால் முழங்கிஞாகள். அவர்கள் வாக்கு முற் றும் உண்மை அல்லாவிடினும் அது சூழ்நிலையின் முக்கியத்தை வற்புறுத்துகிறது. பிறவியிலே சாதா ரணத் திறமை படைத்த ஒருவனுக்கு அதை முற்றும் விகசிக்கச் செய்யக் கூடிய வளர்ப்புச் சூழ்நிலை கிடைக்கு மானல், பிறவியால் உயர்ந்த திறமை அடைந்து அதை

விகசிக்கச் செய்யும் சந்தர்ப்பம் கிட்டாத ஒருவனை விட அவன் சிறந்த வெற்றி அடைவான்.

ஒரே மாதிரியான இரட்டைப் பிள்ளைகளாக இருப்பினும் தனித்தனியாக வெவவேறு சூழ்நிலைகளில் வளாவதால் அவாகளுடைய மனத்திறமைகள் மாறு படுவதை ருஷியாவில் விரிவாக ஆராய்ந்து கணடிருக் கிறாகள். இதுவும் சூழநிலையின் முககியத்தையே காணபிக்கிறது.

இவற்றிலிருந்து பாரம்பரியத்தைப் பற்றிய உண்மையையும் சூழநிலையின் ஸ்தானத்தையும் அறிந்து கொள்ள முடியுமென்று நம்புகிறேன்.

3

# குழந்தையும் பாட்டும்

குழந்தை தொட்டிலிலே படுத்திருக்கிறது. தாய் தாலாட்டுகிறாள். அவள் வாயிலிருந்து அன்புக் கானம் பிறந்து வீட்டை இனிமையாலும் அமைதியாலும் நிரப்புகிறது.

கண்ணேஎன் கண்மணியே
கனிரசமே கற்கண்டே
என்குறை தீரவந்த
எழிலுருவே கண்ணுறங்கு
கண்ணேநீ கண்ணுறங்கு
கானமயி லேஉறங்கு

குழந்தை பாட்டைக் கேட்கிறது. இசையிலே அதன் கவனம் சென்று ஒரே இடத்தில நிலைத்து நிற்பதால விரைவில் தூங்கிவிடுகிறது.

பூங்குழந்தை பல சப்தங்களைச் செய்து மகிழ்கிறது.

உங்கு . . . ஊ . . . . ஊ . . . . உங்கு . . குடிக்கிறயா . .
ஊறுகாய் தின்கிறயா . . . . பாலு . . குடிக்கிறயா . .
பழஞ்சோறு தின்கிறயா . . . . ?

என்று தாய் படுத்துக்கொண டிருக்கும் சின்னக் குழந்தையிடம் அன்பு கனியப் பேசுகிறாள். குழந்தை கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு முகத்தில் குறுநகை தவழ உடலை நெளித்துத் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்துகிறது. அதுவும் ஊங்கு . . . . என்று இதழைக் குவித்துப் பேச முயல்கிறது.

குழந்தைக்கு நிலாவைக் கண்டால் ஒரே இன்பம். சரோஜா (வயது மூன்று),

நிலா, நிலா, வா, வா, நில்லாமல் ஓடி வா,
மலைமேலே ஏறி வா, மல்லிகைப்பூ கொண்டு வா!

என்று பாடுகிறாள். பாட்டிற்குத் தகுந்தவாறு கையினால் சைகையும் செய்கிறாள்.

கண்ணா கண்ணா வெண்ணெய் தின்னும்
கண்ணா கண்ணா கன்று மேய்க்கும
கண்ணா கண்ணா குன்றை ஏந்தும்
கணணா கணணா

என்று பாடுவதில அவளுக்கு மிகப் பிரியம்.

ஓசை வனப்பும் இசையும் சந்தமும் குழந்தைக்கு மகிழ்ச்சியளிககின்றன. பாடடின் பொருளைப் பற்றிக் குழந்தைக்கு அககறை இல்லை. அதற்கு வேணடிய தெல்லாம் ஓசை இன்பந்தான்.

மலைமேலே மஞ்சு
மாரியமமா குண்டம்
சின்னப்பிளளை தண்டம்
சிறுமணிக கொப்பு

என்று இப்படிக் குழந்தை பாடுகிறது,

கண்ணம்மா மரப்பாச்சியைத தொடடிலில் போட்டுத் தாலாடடுகிறாள். தாலாடடுப் பாடடும் பாடுகிறாள். அந்தப் பாடடு நமககுப் பொருள் விளஙகும்வகையில் அமைந்திருக்கவில்லை. ஆனால் அவளுககு அது மிக முக்கியமானது. அவள் வாயிலிருந்து பிறக்கிற ஓசையினுள்ளே அவளுடைய உள்ளக கற்பனைகளெல்லாம் தோய்ந்து கிடக்கின்றன.

குழந்தைப் பாட்டு அவசியம். சந்த இன்பமும் ஓசை வனப்பும் உள்ள பாட்டு வேண்டும். குழந்தை

களுக்கான பழம்பாடல்கள் எத்தனையோ இருக்கின்றன. புதிய பாடல்களும் நிறையத் தேவை. வெகு காலமாகக் குழந்தைகளுக்குத் தாய்மாராகள் சொல்லிக்கொடுக்கும் ஒரு பாட்டைப் பாருங்கள்.

குள்ளக் குள்ளனே
குண்டு வயிறனே
வெள்ளிக் கொம்பனே
விநாயகனைத் தொழு.

இது பிள்ளையார் தோத்திரம். குழந்தை இதைப் பாடி அதற்கு ஏற்றபடி கையால சைகைகளும் காணபிக்கிறது. அபபடிச செயவதில அதற்குச் சலிப்பே ஏற்படுவதில்லை. இன்னும் ஒரு பாடடு.

பொழுதெப்போ விடியும்
பூவெப்போ மலருமா
சிவனெப்போ வருவார்
வரமெப்போ தருவார்.?

குழந்தைப் பாட்டிலும் நல்ல கருத்துக்களைப் புகுத்த வேண்டுமென்பது நம்மவா ஆவல். ஓசை இன்பத்தோடு கருத்தும் கலந்திருந்தால் நல்லதுதானே? குழந்தை அதைப் புரிந்துகொள்ளுமா என்பது வேறு விஷயம். 'புரிந்துகொள்ளுகிற அளவு புரிந்துகொள்ளட்டும். அந்தப் பாடல மனத்தில பதிந்திருந்தால் பின்னால் அதன் கருத்துப் பயன்படாதா என்ன?' என்று இவவாறு நம் பெரியோர் கருதுகின்றனர்.

உயர்ந்த சங்கீதத்தையும் குழந்தை கேட்க வேண்டும். அதனால் அதன் உள்ளம் மலர்ச்சியடைகிறது. நல்ல இசைக்கு அற்புதமான சக்தி உண்டு. அதனால் குழந்தை உள்ளமும் கவரப்படுகிறது. ஆகையால்தான் மற்றக் கலைகளைக் காண்பதற்குச் சந்தர்ப்பம் கொடுப்பதுபோல இதையும் கேட்கச் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டும்.

ஆனால் சிறந்த சங்கீதத்தைக் கேட்ட குழந்தை நல்ல பாடகனாவான் என்று எதிர்பார்ப்பது சரியல்ல. சில பெற்றோர்கள் இவ்வாறு எதிர்பார்த்து ஏமாற்ற மடைகிறார்கள். இது சம்பந்தமாக நாம் ஓர் உண்மையை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். குழந்தைக்கு இயல்பான திறமை எந்தத் துறையில் இருக்கிறதோ அதில்தான் அது உயர்ந்த நிலையை அடைய முடியும். பயிற்சியால் எந்தத் துறையில் வேண்டுமானாலும் ஒரு சிறிது திறமை அடையும்படி செய்யலாம். ஆனால் அதில் மிகச் சிறந்து விளங்கும் படி செய்ய முடியாது. அவ்வாறானால் நல்ல கலை அநுபவம் குழந்தைக்கு வேண்டுமென்று சொல்வதன் கருத்து என்ன? குழந்தைக்கு இயல்பாக உள்ள கலைத் திறமை பூரணமாக வெளிப்படுவதற்கு இந்த இசை அநுபவம் பெரிதும் உதவியாகும். குழந்தைக்கு எதில் திறமை இருக்கிறது என்பதை ஆரம்பத்திலேயே நிச்சயமாகக் கண்டுபிடிக்க முடியாது. ஆதலால்தான் எல்லாக் கலைகளையும் அநுபவிப்பதற்குச் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமென்று மனத் தத்துவர்கள் சொல்லுகிறார்கள். இந்தக் கலையநுபவம் வேறு வகையிலும் குழந்தையின் உள்ளம் மலர்ச்சி யடைவதற்கு உதவி செய்கிறது. சிறந்த சங்கீதத்தைக் கேட்ட குழந்தை சங்கீதத்திலே பாண்டித்தியம் அடையாமல் இருக்கலாம். ஆனால் அந்தக் கலை அநுபவம் வேறு ஒரு துறையில் குழந்தையின் திறமை வளரச் சாதகமாகிறது. கலைக்கு உள்ளத்தை விகசிக்கச் செய்யும் ஆற்றலும் உள்ளப் பண்பை உயர்வடையச் செய்யும் சக்தியும் உண்டு. அதற்காகவே கலையநுபவம் எல்லாக் குழந்தைகளுக்கும் வேண்டும்.

சிறு சிறு பாட்டுக்களைக் கற்றுக்கொடுக்கும் போதும் நல்ல இசையைக் கேட்கச் செய்யும் போதும் அவை குழந்தையின் உள்ள வளர்ச்சிக்கு உதவும் என்ற பொது நோக்கத்துடனே செய்ய வேண்டும்.

# 4

# கதை சொல்லுதல்

"பாட்டீ, கதை சொல்லு" என்று கொஞ்சும் மொழியில் குழந்தைகள் கேட்கிறார்கள்.

நல்ல நிலா; பாட்டி வாசலில கட்டிலைப் போட்டுப் படுத்துக்கொண டிருககிறாள். குழந்தைகள் அவளைக் சூழ்ந்துகொள்கின்றன: "பாட்டி, ஒரு கதை சொல்லு" என்கின்றன.

பாட்டி ஆரம்பிக்கிறாள்: "ஒரே ஒரு ஊரிலே—" என்று. குழந்தைகள ஆர்வத்தோடு உம் கொட்டிக் கொணடு கேட்கின்றன.

இது எங்கும் நடைபெறும் சாதாரண நிகழ்ச்சி. குழந்தைகளுககுக் கதை கேட்பதில் அத்தனை பிரியம்; கதை சொல்லுவதில் பாட்டிககு ஓா அலாதியான திறமை.

"ஒரே ஒரு ஊரிலே ஒரு ராஜா இருந்தான்.." அநேக கதைகள இப்படிததான் தொடஙகும். ஊருக்குப் பெயா இலலை; ராஜாவுக்கும் அப்படிததான். அவைகளெலலாம் குழந்தைக்கு அவசியமே இல்லை. பெயரில என்ன இருககிறது? ஆனல பாட்டி கதையில் குழந்தை உள்ளத்தைக் கவரும் சக்தி இருககிறது.

பாட்டிகள் பொதுவாகக் குழந்தையின் தன்மையைத் தங்கள இயலபுணாசசியாலும் அநுபவத்தாலும் அறிந்து அதற்கு ஏற்றவாறு கதை சொல்லுகிறார்கள். சிலர் அதில் தவறு செய்வதும் உணடு. குழந்தைக்குப் பயத்தை உணடாககும் பேய்க்கதைகளைச் சொல்லுவா சிலர். இன்னும் சிலர் விரும்பத்தகாத உணாச்சிகளைத்

தூண்டும் கதைகளைக் கூறுவர். இவைகளெல்லாம் குழந்தைக்குத் தீங்கு விளைவிக்கும். அந்தரங்க உள்ளத்தில் பலவகையான கோளாறுகளையும் உண்டாக்கும். ஆதலால் இவைகளை விலக்கிவிடவேண்டும்.

கதை கேட்பதில் குழந்தைக்குள்ள மாறாத உத்ஸாகத்தை எல்லோரும் உணர்ந்திருக்கிறோம். சரோஜாவுக்கு வயசு மூன்றுதான். இந்த வயசிலேயே அவள், 'கதை சொல்லு, கதை சொல்லு' என்று ஆவலோடு கேட்கிறாள். நான்கு ஐந்து வயசில் இந்த ஆவல இன்னும் அதிகரிக்கிறது. வயசு அதிகரிகக அதிகரிக்க இது இன்னும் வளர்வதோடு பிள்ளைகளின் இயலபுக்கு ஏற்றபடி குறிப்பிடட அம்சங்களையுடைய கதைகளில சுவை விசேஷமாக வெளிப்படுகிறது. சுமார் ஏழெட்டு வயசில் மிருகங்கள், பறவைகள் இவைகளைப்பற்றிய கதைகளைப் பிள்ளைகள் பெரிதும் விரும்புவார்கள். அபிமன்யுவின் வீரப் போரைப் பதினுன்கு வயசுப் பையன் ஒருவன் அதிகமாக ரசிப்பான். ஆனால சீதையின் சோகத்தைப்பறறிய வருணனை அவன் மனசை அவ்வளவு கவராது. மேலும் ஒரே வயசுள்ள குழந்தைகளுககுளளும் அவாகள தன்மைககுத தக்கவாறு கதைகளில விருப்பம் மாறுபடுகிறது. சிலா துணிகரச செயலகள் மிகுந்த கதைகளை ஆவலோடு கேடபாாகள். சிலருககுத தந்திரம், அன்பு, சேவை முதலிய வேறு வேறு பணபுகள் வெளிப்படும் கதைகளில் இஷ்டம் இருககும். வயசுக்கும் மனப்போக்கிற்கும் ஏற்றவாறு கதை அமையும்பொழுதுதான அதில மிகப் பெரிய ஆவமும் இன்பமும் பிறககின்றன.

கதைகள் மூலமாக உயாந்த எணணங்களைக் குழந்தையின் மனசில வளரசசெய்ய முடியும். கதையைச செலலிவிட்டு முடிவாக அதிலிருந்து ஏதாவது நீதியை எடுத்துக் காணபிப்பதை நான் இங்கே குறிப்பிடவில்லை. அப்படிக் காணபிப்பதும் சரியான முறை

அல்ல. சிறுவர்களுக்காக எழுதப்படும் கதைகளின் முடிவிலே அவை புகட்டும் நீதியை எழுதுவது உண்டு; அவ்வாறு செய்வதுதான் சரி என்று சிலர் எண்ணு கிறார்கள். ஆனால் அதனால் யாதொரு பலனும் ஏற் படாது. கதையின் முடிவிலே ஏதாவது நீதியைப் புகட்டிக்கொண்டே இருந்தால், சில நாட்களில் குழந்தைக்கு அந்தக் கதையின்மேலேயே சந்தேகம் உண்டாகிவிடும். மேலும், நீதிவாக்கியமோ நீதிப் பிரசங்கமோ அதன் இளம் உள்ளத்தில் பதியாது. நீதியும் உயர்ந்த எண்ணங்களும் கதையின் போக்கில் தாமாகவே தொனிக்கவேண்டும். அப்படித் தொனிக் கின்றவை குழந்தை உள்ளத்தில் மர்மமாக இருந்து வேலை செய்து பயனளிக்கின்றன. ஆகவே உயர்ந்த உணர்ச்சிகள் தொனிக்குமாறு செய்வதில்தான் கதை யின் உயர்வும் அதைச் சொல்லும் திறமையும் இருக்கின்றன.

கதை சொல்லும்போது கவனிக்க வேண்டிய விஷயங்களைப்பற்றி இனிச் சிந்திப்போம். மூன்று வயசுக் குழந்தைக்கு ஒரு நீண்ட கதையைச் சொல்ல லாமா? பாவம், அது கதையின் ஆரம்பம், போக்கு, முடிவு முதலியவற்றின் தொடர்பை எப்படித்தான் ஒருங்கே சேர்த்து நினைத்துக்கொண்டிருக்க முடியும்? கதையில் பல சம்பவங்களும் பெயர்களும் இருந்தால் ஐந்து வயசுக் குழந்தைகூட அதைச் சரியாக மனசில் வாங்கிக்கொள்ள முடியாமல் தடுமாற்றம் அடைகிறது.

குயுக்தி வாதங்கள், வஞ்சப்புகழ்ச்சிகள், அதி சாமர்த்தியமான திரிபுகள் முதலியவற்றையெல்லாம் குழந்தை அறிந்துகொள்ள முடியாது. அவற்றால் குழந்தையின் உள்ளத்தில் கலக்கந்தான் ஏற்படும். இவற்றையெல்லாம் குழந்தைக் கதைகளிலிருந்து விலக்க வேண்டும். நேர்முகமாக, தெளிவாக, இயல் பான போக்கிலே விஷயத்தைச் சொல்லும் சின்னக்

கதைகளே இன்பம் அளிக்கும்; உள்ளத்தில் மாறாது பதியும்.

கதையிலே குரூரச் செயல்கள் வருவது விரும்பத் தக்கதல்ல. அடிபபது, துன்புறுத்துவது, பழிவாங்குவது, கொலை செய்வது, சாவது போன்ற சம்பவங்களைப் புகுததிக் குழந்தை உள்ளத்தில் குரூர உணாச்சிகளை உணடாக்குவது சரியா? அன்பு, வீரம், சேவை, தியாகம் முதலிய உயாந்த உணாசசிகளே அமையவேணடும்.

மூடக கொளகைகளையும், குருடடு நம்பிக்கைகளை யும் வளாக்கும் கதைகளை அறவே ஒதுக்குவது நல்லது. அவைகளால் உள்ளததில் ஏற்படும் கறை என்றுமே மாறாமல் போனாலும் போகலாம். வள்ளிநாயகி (வயசு ஐந்து) பூஜை அறைக்குள் வராமல் நின்றுவிடடாள். மற்றக் குழந்தைகளெலலாம் வரும்போது இவள் மடடும் வராததைக் கணடு எனககு ஆசசரியமாக இருந்தது. உளளே வரும்படி நான கூபபிடடேன. அபபொழுதும் வரவில்லை. வெளியில் வந்து ஆசை காடடிக் கையைப் பிடிதது இழுததேன். 'நான் வர மாடடேன். சாமி கண்ணைக் குத்திவிடும்' என்று அவள் சொன்னாள். தீர விசாரித்தபோது, ஒரு சமயம் சுவாமிககு நிவேதனம் செய்ய வைத்திருந்த பக்ஷணத்தைக் கொடுக்கும்படி அவள் தொந்தரவு செய்தாளாம். 'அதைத் தொடப்படாது; தொடடால் சுவாமி கணணைக் குத்திவிடும்' என்று சொல்லி, அதை விளக்க ஒரு கதையும் சொல்லிவைத்தாாகளாம். அது முதல் பூஜை அறைக்குள் வருவதற்கே அவள் பயந்துகொண டிருப்பதாகத் தெரிய வந்தது. நிவேதனப் பொருளைப் பூஜைக்குமுன் சாப்பிடக் கூடாது என்ற அறிவைப் புகட்ட எழுந்த கதை, இப்பொழுது சுவாமி என்றாலே பயப்படும்படியாகச் செயதுவிடடது. பேய்க் கதைகளைக் கேட்ட சிறுவர்கள் வயசான காலத்திலும் இருட்டைக் கண்டால் வெகு பயம் அடைகிறாாகள்.

குழந்தைக் கதைகளில் இயற்கை நியதிக்கு மாறான செயல்களைப் புகுத்தலாமா என்பது ஒரு கேள்வி. ஆட்டுக்குட்டி மனிதனைப் போலப் பேசுகிறது; தன் பாட்டி வீட்டிற்கு விருந்து சாப்பிடப் போகிறது; ஒரு சுரைக் குடுக்கையில் புகுந்து அதை உருட்டிக்கொண்டே வழியிலே எதிர்ப்பட்ட துஷ்ட மிருகங்களிடமிருந்து சாமார்த்தியமாகத் தப்பித்து வந்துவிடுகிறது. இது போன்ற கதை சொல்லலாமா? 'ஆட்டுக்குட்டி நம்மைப்போல பேசாதே; சுரைக் குடுக்கையில் புகுந்துவர முடியாதே' என்று சந்தேகம் பிறக்கிறது. தேவதைகள், அப்ஸரஸ்கள் முதலியவர்கள் வருகிற கதைகளும் இயற்கைக்கு மாறாகத் தோன்றுகின்றன. இவற்றையெல்லாம் முற்றும் விலக்கிவிட வேண்டும் என்பர் சிலர். 'விலக்கவேண்டியதில்லை; இவற்றால பெரிய தீங்கு ஒன்றும் இல்லை' என்பது மற்றும் சிலருடைய அபிப்பிராயம். இங்கே நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது குழந்தை உள்ளத்தில் ஒரு கதையால் ஏற்படும் உணர்ச்சிகளைத்தான். ஆட்டுக்குட்டி நம்மைப்போலப் பேசாது என்பது போன்ற விஷயங்கள் நாளடைவில் குழந்தைக்குத் தெரிந்துவிடும். ஆதலால் அவற்றால் தீமை ஏற்பட வழியில்லை. குழந்தையிடம் மரப்பாச்சி பேசுகிறது, விளையாடுகிறது. ஆனால் அது என்றும் அப்படியே இருப்பதில்லை. ஆட்டுக்குட்டியைப்போன்ற ஒரு சிறு பிராணி தைரியமாகப் பெரிய காரியத்தைச் சாதித்து விட்டது என்பதனால் தன்னம்பிக்கையும் தைரியமும் துணிச்சலும் பிறக்குமானால் அந்தக் கதையை விலக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் இம்மாதிரி இயற்கை நியதிக்கு விரோதமான சம்பவங்களிலும் சிலவற்றை ஒதுக்கவேண்டியது அவசியமாக இருக்கலாம். மிருகங்களும் பறவைகளும் பேசுவதைக்கூடக் குழந்தைக் கதை எழுதுவதில் வல்லவர்கள் மிகத் திறமையாகக் கையாளுகிறார்கள். அவைகள் நேர்முகமாகப் பேசாமல் அவ்வாறு நினைப்பதாக நமக்குப் புலனாகும்படி எழுதுகிறார்கள்.

குழந்தைக் கதைகளை மற்ற இலக்கியத்தோடு சரி யாக வைத்து ஒப்பிடக் கூடாது. குழந்தை உலகம் வேறு; அதன் உள்ளப்போக்கும் தனிப்பட்டது. அதை நன்கு உணர்ந்து அதற்கு ஏற்றவாறும், நல்ல உணர்ச்சி கள் மேலோங்குமாறும் கதைகள் இருக்கின்றனவா என்றுதான் நாம் கவனிக்கவேண்டும்.

குழந்தை தான் கேட்ட கதையைத் திருப்பி சொல்ல ஆசைப்படுகிறது. அதற்கு நாம் உத்ஸாகம் அளிக்கவேண்டும் குழந்தை கதை சொல்லும்போது சில செய்திகளை விட்டுவிட்டாலும் அதைப் பற்றிக் கவனிக்கக் கூடாது. மறு முறை நாம சொல்லும்போது விவரமாகச் சொல்லிவிடலாம். குழந்தை ஒரு கதையை ஒரு முறை கேட்பதோடு திருப்தியடைந்துவிடுவதில்லை. பல முறை அதையே கேட்டு இன்புறுகிறது. அப்பொழுதெல்லாம் சம்பவங்களிலோ வேறு வகைகளிலோ கதையில் மாறு தல் இருந்தால் குழந்தை கலக்கமடைகிறது.

முடிவாக மேலே கூறப்பட்டவைகளை எல்லாம் தொகுத்து நோக்குவோம். கதை கேட்பதில் குழந் தைக்கு மிக்க ஆர்வம் உண்டு. கதைகளையே குழந்தையுள் ளத்தில் உயர்ந்த எண்ணங்களும் உணர்ச்சிகளும் வளர ஒரு சாதனமாக உபயோகிக்கலாம். கதைகள் வயசுக்கும் உள்ளப் பான்மைக்கும் தக்கவாறு அமையவேண்டும். நல்லுணர்ச்சிகள் தாமாகவே தொனிக்கும்படியான கதைகளே சிறந்தவை. விரும்பத்தகாத உணர்ச்சிகளைக் கதைகளில் புகுத்தலாகாது.

முற்றும்